# வெட்கம்

நாவல்




மூலம்: எமிலிஜோலா

தமிழ்: நாகமுத்தையா





விற்பனை உரிமை:

பிரேமா பிரசுரம்

63, ஆர்க்காடு ரோட்,

சென்னை—24.

புத்தக வரிசை எண், 1.
முதற் பதிப்பு: 1957.



பிரதம ஆசிரியர்:
திரு. கே. ஸி. ஏ. ஞானகிரி நாடார், பி. ஏ.,
தென்னிந்தியா புத்தக சங்கம்




விலை ரூபாய் 1-50

வெளியீடு :
தென்னிந்தியா புத்தக சங்கம்
கீழ்ப்பாக்கம் :: சென்னை—10.

அச்சிட்டோர் :
கம்பர் அச்சகம்
சென்னை-17.

## பதிப்புரை

பிரெஞ்சு மேதை எழுத்தாளர்களில் எமிலி ஜோலா ஒருவர். அவர் படைத்த நாவல் களுக்குத் தமிழில் தளராத கிராக்கி இருந்து வருவதை எல்லோரும் அறிவோம். நாநா—நாநாவின் தாய்—ஜெர்மினல்—முதலிய பல நூல்களையும் தமிழில் சுவைத்தறிந்த வாசகர் கள் அவரின் 'வெட்கம்' (SHAME) என்ற நாவலையும் விரும்பிப் படிக்கத் தவறமாட் டார்கள் என்பது திண்ணம். 'வெட்கம்' என்ற இந்தக் கதை மனித உள்ளத்தின் போராட்டத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கிறது. மனோ தத்துவத்திற்கு இது நல்ல எடுத்துக்காட்டாகும்.

—பதிப்பாளர்கள்.

## குறிப்பு

பிரெஞ்சு தேசத்தில் நிகழ்ந்ததாகப் புனையப்பட்டகதை ‘வெட்கம்’. அதனை, இந்தியச் சூழ்நிலைக்கு ஏற்ப நடை உடை, பாவனை, பெயர் முதலியவற்றை மாற்றிக் கதையை அமைத்துள்ளோம். கதை தமிழ் நாட்டை ஒட்டி எழுதப்பட்டிருப்பதால் படிப்போருக்குத் தெவிட்டாத சுவையைத் தருகிறது. தமிழாக்கம் என்று கூறுவதைவிடத் தமிழ்க் கதை என்றுகூடச் சொல்லிவிடலாம். என்ன இருப்பினும் மூல ஆசிரியரின் பெருமையைப் புறக்கணித்துவிடக் கூடாது என்பதற்காகவே எழுதியவர்கள்: எமிலி ஜோலா—நாகமுத்தையா எனத் தந்துள்ளோம்.

# வெட்கம்

## 1

பாண்டி என்பது ஒரு பிரபலமான பிரதேசமாகும். ரயில் வண்டி அப்பிரதேசத்தை வந்து அடைந்தவுடன் இரண்டுபேர் வண்டியிலிருந்து இறங்கினர். அவர்களோடு இன்னும் ஐந்து அல்லது ஆறு பேர்களும் இறங்கினர். இறங்கியவர்கள் முண்டி அடித்துக்கொண்டு ஸ்டேஷனை விட்டு வெளியேறினர். நாள் முழுதும் பாடுபட்டுவிட்டு ஓய்வை நாடி அவ்வுழைப்பாளிகள் விரைந்து வீட்டை நோக்கிப் போவது நியாயந்தானே?

மெதுவாக ஸ்டேஷனைவிட்டு வெளியேவந்த அவ்விருவருள் ஒருவன் ஆண்; மற்றொருத்தி பெண். பெண், தன்னருகில் வந்துகொண்டிருந்த ஆணின் கையை ஆவலோடு பிடித்துக்கொண்டு உல்லாச நடைபோடத் துவங்கினாள். இடதுகைப் புறமாகத் திரும்பி ரோட்டில் இருபுறமும் இருந்த மரஞ் செடி கொடிகளின் அழகை அனுபவித்தபடியே அவர்கள் நடந்துகொண்டிருந்தனர். அந்த ரோடு பாண்டி நகருக்கும் செல்லூர்க் கிராமத்திற்குமாகப் பரந்து கிடந்தது.

ரயில், இறங்க வேண்டியவர்களை இறக்கி விட்டுவிட்டு, பெரிய விசில் சப்தம் ஒன்றை எழுப்பியபடியே பாண்டி நகர எல்லையைத் தாண்டிக் கொண்டிருந்தது. ரயில் புறப்பட்டுப் போனவுடன், ஆண் தன் கையைப் பிடித்துக்கொண்

டிருந்த பெண்ணைப் பார்த்து, "பெண்ணே, மாங்குயிலே, நான் உன்னிடம் முன்னெச்சரிக்கையாக ஒன்று சொல்லி விடுகிறேன். நினைவில் இருத்திக்கொள். நாம் எங்கே போகிறோம் என்பது குறித்து எனக்கு ஒன்றுமே தெரியாது. நீதான் என்னைச் சாக்கிரதையாக அழைத்துச் செல்லவேண்டும்,'' என்று சொன்னான். அவன் பெயர் மாணிக்கம். அவள் பெயர் மாங்குயில்.

மாங்குயில், எதிர்த்துத் தெரிந்த பாதையைச் சுட்டிக் காட்டிக்கொண்டே, "இந்தப் பாதை வழியாகத்தான் போக வேண்டும்,'' என்று சொன்னாள்.

அவள் காட்டிய பாதையில் அவர்கள் மேலும் நடந்து சென்றனர். பாண்டி நிலப்பரப்பு எத்தகையது என்பதை மரங்கள் அடர்ந்து கிடந்த அப்பிரதேசம் தெளிவாகக் காட்டியது. அது ஒரு மலைப்பாங்கான பிரதேசமாகும். அம்மலைப் பிரதேசத்தை நன்கு பக்குவப்படுத்தி பயிர் உண்டுபண்ணி பார்ப்பதற்கு அழகையும் இனிமையையும் ஏற்படுத்தி இருந்தனர் அவ்வூரைச் சேர்ந்த உழைப்பாளிகள். இருட்டு வரப்போகிறது என்பதைப் பயங்கரம் சூழ்ந்த தன் சிவப்பு வண்ணங்களால் மக்களுக்குத் தெரியப் படுத்தியது மாலை நேரச் சூரியன். அவ்விளஞ் சோடிகள் சுற்றுப்புறம் சுட்டிக் காட்டிய அழகில் மயங்கியபடியே அசைந்தாடி நடந்துகொண்டிருந்தனர்.

அவர்கள் கையோடு கை சேர்த்துத்தான் நடந்து கொண்டிருந்தனர். இருந்தாலும் நாணம் அவர்களிடம் மறைந்து விளையாடவே செய்தது. அவர்களுக்குள் பழக்கம் ஏற்பட்டு இரண்டு வார காலந்தான் ஆகிறது. இருந்தாலும் நெடுநாளையத் தொடர்பு கொண்டவர்கள் போலத் தோன்றினர் பார்ப்பதற்கு! ஒருவரை யொருவர் நாணத்தோடுதான் பார்த்துக்கொண்டனர். சர்வ சாக்கிரதையோடு பேச்சை வளர்த்துக்கொண்டே நடந்தனர். பேச்சுத் தடம் புரண்டு போய்விடக் கூடாது என்பதில் இருவருமே வெகு விழிப்பாக இருந்தனர்.

அடுத்தவர் எதை அறியவில்லை, ஆனல் எதை அறிய விரும்புகிறார் என்பதைச் சிந்தித்துப் பார்த்தபடியேதான்

உரையாடி வந்தனர். அதனால்தான் அவர்களுக்குள் சண்டையோ சச்சரவோ துளிகூட ஏற்படவில்லை. இரண்டு பேர்களின் உள்ளங்களிலும் ஒரே ஒரு கருத்துத்தான் ஊசலாடிக்கொண்டே இருந்தது. அதைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசாமல், மரத்தைப் பற்றியும் நிலத்தைப் பற்றியும் சீதோஷ்ண நிலைமையைப் பற்றியும் இன்னும் எதை எதைப் பற்றிப் பேசலாமோ, அதை அதையெல்லாம் பற்றியும் பேசிக்கொண்டே நடந்தனர்.

மாங்குயிலுக்கு அப்போது வயது சரியாக இருபது தான் இருக்கும். அவளது கருத்து அடர்ந்து நீண்டு தொங்கிய கூந்தல், கழுத்தில் புரண்டு காற்றில் ஊசலாடிக் கொண்டிருந்தது. அகன்ற நெற்றியும், உயர்ந்து அளவோடு விளங்கிய மூக்கும், செக்கச் சிவந்த கன்னமும் அவள் அழகின் அவதாரம் என்பதை எடுத்துக் காட்டின. இலக்கியங் கண்ட அழகின் இலக்கணப் பொருளாகத் திகழ்ந்தாள் அவள்.

மாணிக்கம் மாங்குயிலைவிட ஐந்து ஆண்டுகள் மூத்தவன். நல்ல உயரமும் கம்பீரமான தோற்றமும், கவர்ச்சிகரமான அழகும் பொருந்தியவன். உறுதி கலந்த உரம் இல்லாதவன். அது அவனிடமுள்ள குறைகளில் ஒன்றும். அடுத்தவன் தன்னைப் பற்றித் தாழ்வாகப் பேசுவதைக் கண்டு பெரிதும் கலங்குபவன்—பயப்படுபவனுங் கூட! ஏனைய சிந்தைச் செருக்கும் செல்வப் பெருக்குங் கலந்த கருவம் உள்ளவனைப் போலக் காட்சி அளிப்பான். இந்தப் பண்புகூட இல்லையென்று சொன்னால், அவனை யாருமே மதித்திருக்க மாட்டார்கள்; துரும்பென்று எண்ணித் தூர எறிந்திருப்பார்கள். அவனது உள்ளத்தின் அடித்தளத்தில் உண்மையான அன்பு குமுறிக்கொண்டிருந்தது. அதை யாரிடம் சொரிவது என்பதை அறியாமல் நீண்ட நாட்களாகத் தவித்துக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில்தான் மாங்குயிலின் நட்பு அவனுக்குக் கிடைத்தது. எனவே அவளைத் தன் அன்புக் கடலில் ஆழ்த்தி, தன் அந்தரங்க உள்ளத்தைத் திறந்துகாட்ட வேண்டும் என்று அவன் தனக்குள்ளாக எண்ணியெண்ணி இன்பமடைந்து வந்தான். இத்தகைய நினைப்புத் தோன்றும்போதெல்லாம் அவன் தனக்குள்ளாக ஒருவிதப் புன்னகை

பூத்துக் கொள்ளுவான். அவனுக்கு அவள்மேல் அவ்வளவு பிரியம்!

ஆம்பல் என்ற பகுதிக்கு நடந்தபடியே வந்துசேர்ந்து விட்டனர். அங்கிருந்த ஒரு மரத்தினடியில் சற்று அலுப்பை மாற்றிக் கொள்ளுவதற்காக நின்றனர். மாணிக்கம் நிற்கக்கூடமாட்டாமல் சாஷ்டாங்கமாகப் புழுதி படிந்த தரையில் உட்கார்ந்துவிட்டான். மாங்குயிலும் உட்கார்ந்து விட்டாள்.

"நாம் இப்போது எந்த நரகத்தில் மாட்டிக்கொண்டுள்ளோம்?" என்று தன் வெறுப்பை வெளிப்படுத்தினன் சிரித்துக்கொண்டே. முதற் கேள்விக்குப் பதில் வருவதற்குள்ளாகவே, இரண்டாவது கேள்வியையும் கேட்டு வைத்தான். "என்ன, ஏதாவது சாப்பிடக் கிடைக்குமா? அல்லது பட்டினியே கிடந்து சாகவேண்டியதுதானு?"

"ஏன் அனுவசியமாக உள்ளத்தை வருத்திக் கொள்ளுகிறீர்கள். உங்களை நரகத்துக்கு அழைத்துவர நான் என்ன ராட்சசப் பிறப்பா? பொறுத்தது பொறுத்து விட்டீர்கள். இன்னும் அரைமணிநேரம் பொறுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு வயிறு ஆற வாய்க்கு உணவு தர ஏற்பாடு செய்துவிடுகிறேன். பயப்பட வேண்டாம்," என்றுள் மாங்குயில்.

மாங்குயிலின் பேச்சைவிட அவளது கை அவனது கையோடு பின்னிக் கிடந்ததால் ஏற்பட்ட பரிச உணர்ச்சி அதிக இன்பத்தைத் தந்தது. மேலும் அவளது பேச்சில் உறுதி கலந்த உண்மை பொதிந்து கிடப்பதைக் கண்டு கொண்டான். அது அவனுக்கு உற்சாகத்தைக் கொடுத்தது. தன்னை ஒருத்தி உள்ளன்போடு நேசிக்கிருள் என்ற எண்ணமும், அவளைத் தன்னுல் எளிதில் அடைந்துவிட முடியும் என்ற நம்பிக்கையும் அவனுக்கு ஒருவிதப் புத்துணர்ச்சியை அளித்தன. அவனை அன்புவழிய ஆவலோடு நிதானமாகப் பார்த்தாள் அவள். அவளது கண்களில் ஒரு விதக் கசிவையும், உள்ளத்தில் ஒருவித ஊற்றுப் பெருக்கையும், வாயில் ஒருவித நெகிழ்ச்சியையும், உடலில் ஒருவிதக் குழைமையையும் கண்டு களிபேருவகை கொண்டான். இத்தகைய அமைப்பு அவர்களுக்கு அளவிலாத ஆனந்தத்

தையே தந்தது. சுருக்கமாகச் சொன்னுல் இருவரும் இன்ப வெள்ளத்தில் மிதந்தனர்.

பகலெல்லாம் ரயில் பிரயாணம், மாலைமுழுதும் ஒரே நடை. எனவே இருவரும் அலுத்துக் களைத்துப் போயிருந்த னர். அவர்களுக்கு அப்போது தேவைப்பட்டன இரண்டே இரண்டுதாம். ஒன்று: ஓய்வு பெற நல்ல விடுதி ; இரண்டு: பசிஆற நல்ல உணவு. இவை கிடைத்தால் போதும்!

அவளுக்கென்னவோ உள்ளூர ஒருவித நமைச்சல் இருந்து கொண்டே இருந்தது. அதற்குக் காரணம்: பருவக் கோளாறும், கால நிலைக் கோளாறுமேயாகும். அவனது கையைக் கட்டி அணைத்துக் கொள்ளுவதில் நல்ல தொரு இன்பத்தைப் பெற்றுவந்த அவள், அவனேடு நெருங்கி நெருங்கி நடந்து வந்தாளே தவிர, ஓரடிகூடப் பிரியவுமில்லை ; பிரியப் பிரியப்படவும் இல்லை!

நிலப்பரப்பை யெல்லாம் கடந்துவிட்ட அவர்கள், மலை முகட்டில் காலடி எடுத்து வைக்கத் துவங்கினர். மாங்குயி லின் முகத்தை மாணிக்கம் அந்தச் சமயத்தில் உற்று நோக்கி ஞன். அவள் முகத்தில் இன்ப ரேகைகள் ஏராளமாகப் பரந்து கிடந்தன. அவளது உள்ளத்தில் ஊற்றுப் பெருக் கெடுத்து ஊறிக் கொண்டிருந்த இன்ப வெள்ளத்தை அள் ளிக் கொண்டு முகத்தில் குடிபுக விரைவது போல இரத்தக் குழாய்கள் துடித்துக் கொண்டிருப்பதை அவளது தசை நரம்புகள் எடுத்துக் காட்டின. தங்க நிறமான அவளது மேனி, அவன் மூளையில் பலாத்காரமான முரட்டுத்தனத்தை உண்டுபண்ணலாயிற்று. அறிவின் பலத்தால் அதனைக் கட்டுப்படுத்திக் கொண்டு அவளைத் தன்பால் அணைத்துக் கொண்டான் மாணிக்கம்.

வேம்பல் என்ற அக் காடு வெறிச்சென்று கிடந்தது. அடிவானம் கவிழ்ந்து கிடந்த அழகுக் கோலத்தில் ஆழ்ந்து விட்ட மாங்குயில், சிறிதுநேரம் மயங்கி நின்ருள். தென்றல் காற்று சாமரை வீச, இவ்விளஞ் சோடிகள் நடந்து கொண் டிருந்தனர். அவ்வளவுதான். எங்கிருந்தோ புறப் படத் தயாராக இருந்தது பாழாய்ப்போன பெரும்புயல் ஒன்று. அடிவாரத்திலிருந்து அடிப்பதற்குத் தயாராக இருந்த புயற்காற்று, ஏதோ பெரும் ஆபத்து மலைவாரத்தில்

ஏற்படக்கூடும் என்பதை முன்னெச்சரிக்கை செய்து விட்டது.

மாங்குயில் முதலில் சிறிது பயந்துவிட்டாள். வர இருக்கிற காற்றின் கஷ்டத்திலிருந்து எப்படித் தப்புவது என்பது குறித்து ஆழ்ந்து சிந்திக்கத் துவங்கி விட்டாள். அவளுடைய கவலை முழுதும் தன்னை நம்பித் தன்னோடு வந்தவனுக்கு ஒருவிதத் தடங்கலும் ஏற்பட்டு விடக் கூடாது என்பதுதான்.

சுற்றுமுற்றும் பார்த்தான் மாணிக்கம். தனக்கும் தன்னோடு இணைந்து நிற்கும் பெண்ணுக்குமிடையே பெரும்பிளவு ஏற்பட்டுவிடுமோ என்று பயந்தான் ; நடுங்கினான். பின்னர் நிதானம் அடைந்து தன்னைத்தானே தேற்றிக் கொண்டான். போதாக்குறைக்கு மாங்குயிலின் மருட்சியையும் போக்கிவிட விரும்பினான். 'இருபது ஆண்டுகள் நிரம்பிய ஒரு பெண்ணுக்கு ஒரு இடத்தைப் பற்றிய நல்ல அறிவுகூட இல்லையே' என்று எண்ணி வெட்கப் பட்டான். 'இதற்குமுன் இந்த இடங்களில் பழகி அனுபவப்பட்டிருப்பதாகக் கூறுகிற நங்கைக்கு, இங்குள்ள இன்னல்களைப் பற்றிய அறிவு இம்மிகூட இல்லையே' என்றெண்ணி வருத்தப்பட்டான். "ஆம் ; அவள் இந்த இடங்களில் உல்லாசமாகச் சுற்றித் திரிந்ததாகக் கூறுகிறாளே, அப்படியென்றால் யாரோடு வந்து சுற்றி இருப்பாள் ? இவளுக்குத் துணையாக வாய்த்த தோழன் யார் ?" என்றெல்லாம் கேட்க வேண்டும் என்று எண்ணினான். ஆனால் எதை நினைத்துக் கொண்டானோ தெரியவில்லை ; வாளா இருந்து விட்டான். உண்மையை அறிய நேரிட்டால் உள்ளம் புண்படலாம் என்று கூட எண்ணியிருக்கக் கூடும் !

அவளது அறியாமையையும் அச்சத்தையும் கண்டு ஆத்திரமடைந்த மாணிக்கம் கேட்டான்: "நீ இதற்கு முன்பு இங்கெல்லாம் வந்திருக்கிறாய் அல்லவா ?"

"ஆம் ; தாராளமாக வந்திருக்கிறேன். அதைப் பற்றி இப்போதென்ன ? சரி ; சரி. மழை வரப்போகிறது. வாருங்கள் விரைந்து செல்லவேண்டும்," என்றாள் மாங்குயில்.

அவசர அவசரமாக ஓட்டமும் நடையுமாகச் சென்று, ரோட்டின் ஒதுப்புறமாக இருந்த ஒரு விடுதியை அடைந்தனர் இருவரும். விடுதியின் சொந்தக்காரி வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு வந்து, வந்திருந்த விருந்தினரை ஆவலோடு உள்ளுக்குள் அழைத்துச் சென்றாள். மாங்குயிலைப் பார்த்ததுமே அவளுக்கு அளவிலாத ஆனந்தந்தான். "நன்று. நன்று! எங்கே நீ உயிரோடு இருக்கிறாயோ இல்லையோ என்று கூட நான் நினைத்துக் கொள்வதுண்டு. ஏனென்றால் நீ ரொம்ப நாட்களாக இந்தப்பக்கமே வரவில்லை அல்லவா? மூன்று மாதங்களுக்கு அப்புறம் இப்போதுதான் நீ இந்தப் பக்கம் காலடி எடுத்து வைத்துள்ளாய். அது கிடக்கட்டும். இப்போது எப்படி இருக்கிறாய்? சௌக்கியந்தானா? ஆம்; உன் பழைய..." இதைச் சொல்லி முடிப்பதற்குள் மாங்குயில் இடைமறித்துப் பேசத் துவங்கிவிட்டாள். ஏனெனில் விடுதிக்காரி ஏதாவது சொல்லிவிடும் பட்சத்தில், மாணிக்கம் அதனைத் தப்பாக அர்த்தம் செய்து கொள்வானாயின் முடிவு விபரீதமாகப் போய்விடுமென்று அஞ்சினாள். உரையாடலிலிருந்து மாங்குயிலுக்கும் விடுதிக்காரிக்கும் இதற்கு முன்னரே பழக்கம் ஏற்பட்டிருக்கிறது என்பதை எளிதாக ஊகித்துவிட்டான் மாணிக்கம். ஆனால் ஊகத்தைச் சரி செய்துகொள்வதற்கு ஏற்ற தைரியம் அவனிடம் அப்போது இல்லை.

நடப்பு நிலைமைகளில் எவ்வித மாறுதலும் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக சர்வ சாக்கிரதையோடு நடந்துகொண்டாள். "உங்களுக்கு ஓய்வுக்கு இடம் அளித்துவிட்டேன். இனி ஆகாரத்துக்கு வழி பண்ண வேண்டும். அவ்வளவுதானே?" என்று மாணிக்கத்தைப் பார்த்துக் கேட்டாள். 'ஆம்' என்பதுபோலத் தலையை ஆட்டினான் அவன். பிறகு அவனை அழைத்துக்கொண்டு அருகாமையிலிருந்த மற்றொரு அறைக்குச் சென்றாள். அவளது நடை உடை பாவனைகளைக் கூர்ந்து கவனித்தால் அவளுக்கும் அந்த விடுதிக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியும்.

மாணிக்கத்தைத் தனியே விட்டு விட்டு சாப்பாட்டு விவகாரத்தைக் கவனிப்பதற்காக அவள் விடுதிக்குள்

போய்விட்டாள். மாணிக்கம் தனிமையில் எதையோ பறிகொடுத்தவன்போல நின்றுகொண்டிருந்தான். ஆடாமல் அசையாமல் நின்றுகொண்டிருக்க அவனென்ன, கல்லா? மரமா? மெதுவாக விடுதியின் தாழ்வாரத்துக்கும் உள் வாரத்துக்குமாக நடந்து பார்த்தான். வாய் எதையோ முணு முணுத்துக்கொண்டே இருந்தது. கைகள் ஒன்றை யொன்று பிணைந்துகொண்டிருந்தன. அவனை யாருமே லட்சியம் செய்யவில்லை. வீதியில் குரைத்துக்கொண்டிருந்த நாயும், ஏறத்தாழ அந்த நாயின் பிழைப்பையே நடத்திக் கொண்டிருந்த ஒரு ஏழை வேலைக்காரியும் மாங்குயிலை வரவேற்பதற்காக விரைந்துகொண்டிருந்தார்களே தவிர, மாணிக்கத்தைப் பற்றிய அக்கரை அவர்களுக்கும் கூட அணு அளவுங்கிடையாது! உள்ளே சென்றிருந்த மாங் குயில் சிரித்துக்கொண்டே மாணிக்கத்தைத் தேடிக் கொண்டு வெளியே வந்தாள். அவனைப்பற்றிய அக்கரை அவள் ஒருத்திக்குத்தான் இருந்தது! அவிழ்த்துவிடப்பட்ட கூந்தல் முதுகுப்புறமாக நீண்டு, காற்றில் பறந்துகொண் டிருந்தது. மாலை நேர அழகுப் பொருள்கள் மாங்குயிலின் அழகைப் பன்மடங்காக்கி பரிமளிக்கச் செய்தன. உடம்பின் அலுப்பைத் தீர்த்துக் கொள்ளவும், புதிய காற்றின் சுகத்தை அனுபவிக்கவும் விரும்பிய மாங்குயில் தன் ஆடை கள் அனைத்தையும் தளர்த்திவிட்டிருந்தாள். அவளது அந்தத் தோற்றம் பார்ப்பவர்களுக்கு மூர்க்கத்தனத்தை மூட்டிவிடக்கூடியதாக இருந்தது.

மாணிக்கமும் கூட பசியை மறந்துவிட்டு அவளது அழகு வெள்ளத்தை பருகிக்கொண்டே நின்றுவிட்டான். 'இவள் இதற்கு முன்னர் இங்கு எதற்காக வந்திருப்பாள்? யாரோடு வந்திருப்பாள்? தன்னை அல்லாத மற்றொரு ஆடவனின் பழக்கம் இவளுக்கு ஏற்பட்டு இருக்குமோ?'

இப்படியெல்லாம் எண்ணியெண்ணி ஏங்கினான் ஒரு கணம்!

"நான் கூடப் பட்டினியாகக் கிடக்கிறேன். இப்போது எனக்கு என்ன கிடைத்தாலும் அதனைப் பாக்கி விடாமல் தின்று தீர்த்துவிடுவேன். நல்ல தின்பண்டங்களில் நான் கைந்து தினிசுகளாகக் கொண்டுவரச் சொல்லி உள்ளேன்," என்று மாணிக்கத்திற்கு மன ஆறுதல் கூறினாள் மாங்

குயில். இப்படிக் கூறிக்கொண்டே அடுத்திருந்த சாப்பாட்டறைக்குச் சென்ருள். அங்கிருந்த நாற்காலி அவளுக்கு வரவேற்புக் கூறியது. திரும்பிப் பார்த்தாள். மாணிக்கத்தைக் காணவில்லை. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு தன்னுல் முடிந்தவரையிலும் உரக்கக் கத்தினுள் :

"என்ன உங்களுக்குப் பசி எடுக்க வில்லையா? நீங்கள் எழுந்து வராவிட்டால் நானே அவ்வளவு பதார்த்தங்களையும் தின்று தீர்த்துவிடுவேன். எனவே சீக்கிரம் எழுந்து வந்துவிடுங்கள்."

இப்படிச் சொல்லிவிட்டு வாய்விட்டுச் சிரிக்கலானுள். அந்தச் சிரிப்பு அவளுக்கு ஆனந்தத்தையே கொடுத்தது. அவளை இத்தகைய ஆனந்தக் கோலத்தில் மாணிக்கம் இதற்கு முன்னர் பார்த்ததே கிடையாது. அவனைப் போய் அழைத்து வந்து, "என்னை நம்புங்கள். நான் உங்களைச் சந்தோஷப்படுத்துவனே தவிரச் சங்கடப்படுத்தமாட்டேன். இது சத்தியம்," என்று கூறினுள்.

கருத்துப் புயலால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த மாணிக்கம், இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஓரளவு அமைதி கொண்டான். அவனுக்கு அப்போது தேவைப்பட்ட பொருள் அதுதான் என்ருலுங்கூட அது பொய்யாகி விடாது. சாப்பாட்டைப்பற்றிய கவலையைக் கூட அவன் அப்போது ஒரு பொருட்டாக எண்ணவில்லை.

அப்போது அவர்கள் தனிமையாகத்தான் இருந்தார்கள். கருங்கும்மென்று கிடந்த மேகத்தைப் பிளந்து கொண்டு இரண்டு மின்னல்கள் பளிச் பளிச்சென்று மின்னின. பெரும் மழைக்கோ அல்லது பெரும் புயலுக்கோ முன்னெச்சரிக்கை கொடுத்தது அம் மின்னல். வரவிருக்கும் மழைக்குப் பயந்து, மாங்குயில் மாணிக்கத்தை அழைத்துக்கொண்டு நடு வீட்டிற்குள் ஓடினுள். ஓடும்போதே சில மழைத்துளிகள் அவள் மேனியில் பட்டுத் தெறித்தன. மாணிக்கம் மழையில் வெளியே போக விரும்பவில்லை என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காக, "நாம் இங்கேயே ஏன் சற்று நேரம் ஓய்வாக ஒதுங்கி இருக்கக் கூடாது?" என்று கேட்டான்.

"இன்னும் மழை பெய்யத் துவங்கவில்லையே? இப்போ துதானே தூரல் துவங்கி இருக்கிறது. எவ்வளவு நேரம் வெளியே இருக்கமுடியுமோ அவ்வளவுநேரம் வராந்தாவி லேயே நின்றுகொண்டிருக்கலாமல்லவா? இயற்கைக் காட்சிகள் பார்ப்பதற்கு இரம்மியமாக இருக்கின்றனவே? உங்கள் அபிப்ராயம் என்ன?" என்றாள்.

"உனக்கு விருப்பம் எப்படியோ, அப்படியே செய். நீ ஆட்சேபிக்கமாட்டாய் என்று சொன்னால் நான்மட்டும் உள்ளே சென்று படுத்துக்கொள்ளுகிறேன். எனக்கு மழை, புயல், மின்னல் இவற்றைக் கண்டால் பிடிப்பதே இல்லை," என்றான் மாணிக்கம்.

அந்தச் சமயத்தில் அவர்கள் எங்கு தங்கி இருந்தார் களோ, அந்த அறைக்குள் சாப்பிடுவதற்காகத் தயாரிக்கப் பட்ட பதார்த்தங்களைக் கொண்டுவந்து சேர்த்தாள் விடுதி யிலிருந்த வேலைக்காரி.

ஆச்சரியம் ததும்ப விழிகளை அகற்றிக் கொண்டு மாங் குயில் ஏதோ யோசித்தாள். பின்பு மாணிக்கத்தை அவள் ஏறிட்டுப் பார்த்தபோது அவன் முகம் வெளிறிட்டு இருந் தது. தன்னுடைய கருத்தை மாணிக்கம் விரும்பவில்லை என்பதைப் புரிந்துகொண்ட மாங்குயில், "உங்களுக்கு விருப்பம் இல்லை என்றால் இருவருமே உள்ளே சென்று படுத்துக் கொள்ளலாம்," என்று சொன்னாள்.

"சாப்பாடு தயாராக இருக்கிறது," என்று நினைவுபடுத்தி விட்டு வேலைக்காரி வெளியேறிவிட்டாள். அந்த அறை இருள் மயமாக இருந்தது. அதனுள் மிகப் பெரிய மேஜை களும் நாற்காலிகளும் கிடந்தன. அவற்றுள் ஒரு மேஜை யையும் நாற்காலியையும் இழுத்துப் போட்டுக் கொண்டு இருவரும் அமர்ந்தனர்.

அறையினுள் அமைதி நிலவியது. ஆனால் அறையின் வெளியே காற்றும் மழையும் அட்டகாசம் செய்தன. கொண்டு வரப்பட்ட உணவுப் பொருள்களை ஒரு நொடியில் இருவரும் தின்று தீர்த்து விட்டனர். மழையோ விட்ட பாடாக இல்லை. மூன்று மணி நேரம் இடையறாது பெய்து ஓய்ந்தது மழைநீர். அந்த மூன்றுமணி நேரமும் மாணிக்கம்

மருள் கொண்டவனைப் போல மரம் ஒப்ப நின்று கொண்டிருந்தான். அவன் வேதனைப்படுகிறானே என்னவோ என்றெண்ணி அவள் பட்ட வேதனையோ அதிகம். அவனது வேதனையை மாற்றிவிட வேண்டும் என்பதற்காக அவள் என்னென்னவோ பிரயத்தனங்கள் எடுத்துக் கொண்டாள்.

மாணிக்கமும் மனம் இளகி மாங்குயிலின் அருகே வந்து, சன்னல் வழியாக அட்டகாசம் செய்து ஓய்ந்த மழையை எட்டிப் பார்க்கலானான்.

''ஏறத்தாழ மழை பெய்து ஓய்ந்துவிட்டது. எனவே இப்பொழுதே புறப்பட்டுப் போனால்தான் இரயிலைப் பிடிக்கமுடியும்,'' என்றாள் மாங்குயில்.

விடுதிக்காரி இதனைக் கேட்டதும், ''நீங்கள் இரவு முழுதும் இங்கே தங்கவில்லையா? உங்களுக்கு வேண்டிய வசதிகள் அனைத்தும் செய்து தர நான் தயாராக இருக்கும் போது நீங்கள் எதற்காக இரவோடு இரவாக இங்கிருந்து போக வேண்டும்?'' என்று பரிவோடு கேட்டாள். அவளது குரலில் கனிவும் கவலையும் மண்டிக் கிடந்தன!

''இல்லை, இல்லை. நாங்கள் இரவே புறப்பட்டுத்தான் ஆகவேண்டும். இங்கே தங்குவதென்பது இயலாத காரியம். ஏதாவது சாப்பிடலாம் என்பதற்காக இங்கே வந்தோமே தவிர, இரவு தங்கும் எண்ணத்தோடு நாங்கள் இங்கு வரவே இல்லை. தயவு செய்து இம்முறை மன்னித்துக்கொள்,'' என்று மாங்குயில் விடுதிக்காரியிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

''முடியாது. நீங்கள் நினைத்தாலும் உங்களால் இரயிலைப் பிடித்துவிட முடியாது. இப்போது பெய்து ஓய்ந்த மழையின் காரணமாக, ரோடுகள் முழுதும் பேரளவில் பாதிக்கப்பட்டுள்ளன. பாதை முழுதும் நீர் வெள்ளக் காடாகக் கிடக்கிறது. எனவே வண்டியோ, வாகனமோ செல்ல முடியாத பாதையை நம்பிக் கொண்டு நீங்கள் பயணப்பட முற்படுவது ஆபத்தானதாகும்,'' என்றாள் விடுதிக்காரி.

மாங்குயில் வேதனையோடு ஒரு கணைப்புக் கனைத்துக் கொண்டாள். பிறகு வார்த்தைகள் வெளிவராத நிலையில்

தட்டுத் தடுமாறிக் கொண்டே விடுதிக்காரியிடம் சொன்ளுள்: "என்ன ஆனுலும் சரி, நாங்கள் உடனே புறப் பட்டுத்தான் ஆகவேண்டும். இரவு எங்களால் இங்கு தங்கவே முடியாது."

"உன் விருப்பம். உள்ள நிலைமையை உண்மையோடு சொன்னேன். ஆலோசனை இல்லாமல் அவசரப்பட்டு எதையாவது செய்து விட்டு, பின்னர் அவதிப்படுகையில் என்னைக் குறை சொல்லாதே," என்ருள் விடுதிக்காரி.

மாணிக்கம் எதுவுமே பேசாமல் மரத்தூண் மாதிரி நின்று கொண்டே இருந்தான். மாங்குயில் அவனது விருப்பம் என்ன என்பதை அறிந்து கொள்ளுவதற்காக அவனை ஆவலோடு நெருங்கினுள். அவன் ஒரு அப்பாவி மனிதனைப்போல, ஆசாபாசங்களைத் துறந்த மாதிரி நின்று கொண்டிருந்தான். பார்வைக்குப் பரிதாபகரமாக இருந்தது அவன் நின்று கொண்டிருந்த காட்சி!

"அப்படியானுல் நாம் இன்று இங்கேயே தங்கிவிட லாம்," என்ருள் மாங்குயில்.

"அதுதான் நல்ல யோசனை. உங்களுக்கு அந்த நீல நிற அறையை ஒழுங்குபடுத்தித் தருகிறேன்," என்று உற் சாகத்தோடு சொன்னுள் விடுதிக்காரி.

"ஓ, அந்த அறையா? அது எங்களுக்கு வேண்டாம்," என்று தன்னையுமறியாமல் கத்தினுள் மாங்குயில்.

"வேறு அறை எதுவுமே காலி இல்லை. நீலநிற அறை யைத் தவிர பிற அறைகளை எல்லாம் வாடகைக்கு விட்டு விட்டேன். எனவே இம்முறைமட்டும் அவ்வறையில் தங்கி விடுங்கள். இனி வரும்போது வேறு அறை தருகி றேன்," என்ருள் விடுதிக்காரி.

"இது முன்னரே தெரிந்திருந்தால் தங்குவதற்கு ஒப்புக் கொண்டிருக்கவே மாட்டேன். எல்லாம் என் தலைவிதி," என்று அலுத்துக்கொண்டாள் மாங்குயில். பின்னர் மாணிக்கத்தின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவன் பரிதாபத்திற்குரியவனுகவே நின்று கொண்டிருந்தான். நிலைமையைச் சமாளிக்க விரும்பிய அவன், "பாதகமில்லை.

எந்த அறையானுல் நமக்கென்ன? நீலநிற அறையிலேயே இன்று மட்டும் தங்குவதால் கேடு என்ன? அந்த அறையிலேயே தங்கிவிடலாம்,'' என்று சொன்னுன்.

மாங்குயில் அதை ஆமோதிப்பவளாகத் தெரியவில்லை. முகத்தைச் சுளித்துக்கொண்டாள். இதைக் காணச் சகியாத மாணிக்கம், "நடந்தது சரி. இன்னும் சிறிது நேரம் தங்கிவிட்டு அதற்கு அப்புறமேனும் இரயில் ஏறி சென்னை நகருக்குச் சென்று விடுவதுதான் உத்தமம் என்று எனக்குத் தோன்றுகிறது,'' என்று தன் விருப்பத்தைப் பட்டும் படாததுமாகச் சொன்னுன்.

"இருந்தாற்போலிருந்து உங்களுக்கு இந்த யோசனை தோன்றக் காரணம் என்ன? இரவோடு இரவாகப் புறப்பட்டுப் போய் சென்னையில் செய்து முடிக்கவேண்டிய செயல்கள் என்ன பாக்கி இருக்கின்றன? எது எது எந்தக் காலத்தில் நடந்து முடியவேண்டுமோ, அது அது அந்த அந்தக் காலத்தில் நடந்து முடிந்தே தீரும். நாம் இருவரும் ஒன்று சேர்ந்ததுகூட ஆண்டவனின் அனுக்கிரகந்தான். நாம் ஒருவரையொருவர் முதன் முதலாகச் சந்திக்கும்போதே நான் அப்படித்தான் எண்ணிக் கொண்டேன். உங்களைச் சந்தித்திராவிட்டால் நான் ஏதாயினும் ஒரு கன்னிகா மடத்தில் சேர்ந்து என் காலத்தையும் பொழுதையும் கழித்திருப்பேன். என்னை ஒருவன் காதலித்தான். எங்கள் காதல் நிறைவேருமல் முறிந்துவிட்டது. முதற் காதல் முறிந்துவிட்ட பிறகு இரண்டாவது முறையாகக் காதல் விவகாரத்தில் ஈடுபட்டு நான் ஏமாற்றமடைய விரும்பவில்லை. உங்களுடைய கருத்து என்ன? வெட்கம் என்ற கடலுள் நான் நன்கு மூழ்கிக் குளித்துவிட்டேன். கௌரவக் கரைக்கு என்னை அழைத்துச் செல்லுகிறீர்களா? அல்லது வெட்கக் கடலுள் வீழ்ந்தபடியே சாகச் சொல்லுகிறீர்களா?'' என்று உணர்ச்சியோடு கேட்டாள் மாங்குயில்.

அவளது உணர்ச்சித் தீயினுல் மாணிக்கம் பனிக்கட்டியாக உருகிக்கொண்டிருந்தான். அவளது கைகளை ஆவலோடு அணைத்துக்கொண்டு, "பெண்ணே, நான் எத்தகைய மனிதன் என்பதை நீ அறியமாட்டாய். நான் ஒரு புது

மைப்பித்தன். என்னை நீ நம்பு. நான் உனக்கு எவ்விதத் தீங்குமே செய்யமாட்டேன். உன்னை இன்பமாக வாழ வைப்பதுதான் என்லட்சியம். இது சத்தியம்,'' என்று அன்பொழுகக் கூறினான்.

அவள் பதில் எதுவுமே பேசாமல் நின்றுகொண்டிருந் தாள். ஆண் வர்க்கத்தையே அறிந்துவிட்டவள்போல இருந்தது அவள் பார்வை. இங்ஙனம் இன்று தன்னை வெட்கக் கடலிலிருந்து வெளியேற்றிச் செல்ல விரும்புகிற மாணிக்கமும் இன்னும் கொஞ்சம் நாட்கள் சென்றால் தன்னைத் திரும்பவும் அதிக ஆழமான அவமானக் கடலுள் ஆழ்த்திவிடத் தயங்கமாட்டான் என்பதையும் அவள் ஊகித்துவிட்டவள் போலவே தோன்றினாள்.

மாணிக்கம் நினைத்தது சரியாகவே அமைந்துவிட்டது. அவளுக்கு ஒரு காதலன் ஏற்கனவே இருக்கத்தான் செய் தான். ஏதோ காலக் கோளாறு காரணமாகக் கைவிட்டு விட்டு ஓடிவிட்டான். இத்தகைய அவளது இறந்தகாலச் சரித்திரம் அவனது உள்ளத்தில் இரக்க உணர்ச்சியை உண்டுபண்ணிவிட்டது.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருக் கும்போது விடுதிக்காரி அங்கு வந்து சேர்ந்தாள். அவள் அவர்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு அவர்களுக் காகவே ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தாள். பின்பு அவர்களைத் தனிமையில் விட்டுவிட்டுத் தான்மட்டும் வெளியேறிவிட்டாள்.

அறையின் ஒரு மூலையில் அரிகேன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அறைமுழுதும் வாசனைப் பொருள்கள் பரப்பப்பட்டு இருந்தமையால் நறுமண வாடை காற்றில் மிதந்துகொண்டே இருந்தது. அலங்காரப் பொருள்களை யும் மீறி அவலட்சணம் தலைகாட்டிக்கொண்டுதான் இருந் தது. காரணம்: அது ஒரு பழங்காலக் கட்டிடம் என்பது தான்! சிவப்பு நிறப் படுக்கை யொன்று அறையின் பாதிப் பாகத்தை அடைத்துக்கொண்டிருந்தது. குளிர்ந்த காற்றோ அவர்களோடு கண்ணாம்பூச்சி விளையாடலாயிற்று!

அருவெறுக்கத்தக்க உள்ளத்தோடுதான் அவர்கள் இருவரும் அந்த அறைக்குள் காலடி எடுத்துவைத்தனர்.

மாணிக்கம் அறையின் சன்னற் கதவுகளைத் தாழிட எத்தனிக்கும்போது, யாரோ தடை செய்வதுபோல உணர்ந் தான். அப்போது மாங்குயில் குறுக்கிட்டு, "உன்னைத் தடுத்து நிறுத்தும் தடைப்பொருள்கள் ஆட்கள் அல்ல; கொக்கிகள் ?" என்று நகைச் சுவையோடு அனுபவ அறிவை வெளிப்படுத்தினள்.

பின்னர் இருவரும் ஒரே படுக்கையில் படுத்துக்கொண் டனர். பொழுது இன்பமாகவே கழிந்தது; இருப்பினும் பொக்கெனப் போய்விட்டது!

மறுநாள் பொழுது விடிந்ததும் மாங்குயில்தான் முதன் முதலில் எழுந்தாள். மாணிக்கமோ அலுப்பு அதிக மாக இருந்தமையால் அதிக நேரமாகியும் கூட எழுந்திருக்க மனமில்லாமல் தூங்கிக்கொண்டே இருந்தான். அவ னுடைய மனதில் ஏதேதோ இன்ப நிகழ்ச்சிகள் திரைப் படக் காட்சிகள்போல் தோன்றித் தோன்றி மறைந்தன.

சீர்குலைந்த கூந்தலையும், சிதைந்து இருந்த ஆடையை யும் சீர் செய்துகொண்டு சன்னல் வழியாக வெளியே இயற் கைக் காட்சிகளைக் காண முற்பட்டாள் மாங்குயில். உதய சூரியனின் தங்க நிறமான கதிர்கள் உலகப் பொருள்கள் அனைத்தையும் தங்க நிறமாக்கிக் காட்டிக்கொண்டிருந்தன. அரை மணி நேரமாக அக்காட்சிகளை அனுபவித்துக்கொண் டிருந்துவிட்டு அவள் தன் எதிர்கால வாழ்வை இன்பமாகக் கழிக்கவேண்டும் என்ற ஒரே திட்டத்தோடு அன்றாட வேலைகளில் ஈடுபடலானுள்.

அப்போது ஒரு சப்தம் கேட்டது. மாணிக்கம் படுக்கையைவிட்டு எழுந்துவிட்டான். இன்பமயமான தூக் கத்தைவிட்டுவிட்டு எழுந்திருப்பது அவனுக்குச் சிரம மாகவே இருந்தது. இருப்பினும் வேண்டா வெறுப்போடு படுக்கையைவிட்டு எழுந்தான். எழுந்ததும் அவனுக்குக் காட்சி அளித்தவள் மாங்குயில்தான்! அவளைப் பார்த்து,

"அப்படியானால் நீ என்னைக் காதலிக்கிறாயா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

உள்ளத்தில் எதையோ ஒளித்து வைத்துக் கொண்டு சொல்லமுடியாமல் தவிப்பவள்போலக் காட்சி அளித்தாள் அவள். நுழையும்போது அவலட்சணமாகக் காட்சி அளித்த அந்த அறை, எழுந்திருக்கும்போது இன்பமய மாகவே காட்சி அளித்தது, ஆச்சரியந்தானே?

இருவரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டு விட்ட மகிழ்ச்சியில் அறையைவிட்டு வெளியே வந்தனர்!

# 2

மாங்குயில் ஒரு கட்டிட வேலே பார்த்துவரும் இன் சீனியர் ஒருவரின் புதல்வி. அவர் மலேப்பிரதேசத்தில் உள்ள ஆலங்கனி என்ற சிறு கிராமத்தை விட்டு விட்டு தன் வாழ்க்கைச் சக்கரத்தை நல்ல முறையிலே ஓட்டுவதற்காக சென்னே நகரிலே சிறுவயதிலேயே குடியேறியவர் ஆவார். அவர் சென்னே நகரத்தில் நுழையும்போது பையில் கொஞ்சங்கூட பணமில்லாத நிலேயிலேதான் வாழ்ந்து வந்தார். அவரது சுபாவத்தை ஊன்றிக் கவனிப்பவர்கள் அவர் ஒரு பட்டிக்காட்டு ஆசாமி என்பதைத் தெளிவாகத் தெரிவித்து விடுவார்கள். பரந்த மார்பும் நெடிய தோளும், கொழுப்பேறிய உடலும், அவர் ஒரு உழைப்பாளி என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டின. பொறி இயல் வல்லுநர் ஒருவரிடம் கையாளாகச் சேர்ந்து பத்து வருடகாலம் கஷ்டப்பட்டு வந்தார். அந்தப் பத்து வருட உழைப்பின் பலன் அவரது ஒவ்வொரு அங்கத்திலும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. நெற்றி வியர்வை நிலத்தில் விழ நேர்மையான முறையிலே பாடுபட்டு அவர் பாதுகாத்துச் சேமித்த பணம் ஆயிரம் ரூபாய்க்குச் சிறிது அதிகமேயாகும். தனக்கென ஒரு சொந்தத் தொழிலே, இன்றில்லாவிட்டாலும் என்ருகிலும் ஒரு நாள் துவக்கியே தீர வேண்டும் என்ற திட்டமான எண்ணத்தோடு பாடுபடலானுர். பாட்டுக்குரிய பலன் பையப் பையக் கைகூடி வந்தது.

காலம் அனுசரணேயாக இருந்தபோது சூளேப் பகுதியில் ஒரு பழைய கட்டிடத்தை அவர் வாடகைக்குப் பிடித்துக் கொண்டார். அக்கட்டிடத்தில் இருந்து கொண்டே நூதனமான அடுப்புக்களே உற்பத்தி செய்யலானுர். அனுவசியமாக அவர், பொருளேயோ பொழுதையோ செலவு செய்ததே கிடையாது. சிறுகச் சிறுக உற்பத்தியையும் பெருக்கி வேலேக்காரர்களேயும் அதிகப்படுத்திக் கொண்டு விற்பனேயில் கண்ணுங் கருத்துமாக இருந்துவந்தார்.

நாளா வட்டத்தில் வாடகைக் கட்டிடம் சொந்தக் கட்டிடமாக மாறியது. பணஞ் சேரச் சேர சொந்தமாக வாங்கிய பழங்கட்டிடத்தை இடித்துத் தள்ளிவிட்டு நவீன நாகரிகத்திற்கேற்ப நல்லதொரு கட்டிடத்தோடு தொழிற்சாலையையும் அவ்விடத்தில் அமைத்து விட்டார்.

அவரால் உற்பத்தி செய்யப்பட்ட சாமான்களுக்கு நகரம் முழுதும் நல்லதொரு கிராக்கி இருக்கவே செய்தது. அடுப்புக்களோடு உலைக்களப் பொருள்களையும் உற்பத்தி செய்யலானுர். அப்புறம் அடுப்படித் தளவாடச் சாமான்களும், நீர் கொதிக்க வைக்கும் வேம்பாக்களும் உற்பத்தி செய்யலானுர். இவருடைய உலோகப் படைப்புக்களை வெகுவாகப் பாராட்டிய சென்னை அரசாங்கம் இவரோடு உலைக்களப் பொருள்கள் உற்பத்தி விஷயமாக ஓர் உடன்படிக்கை கூடச் செய்து கொண்டனர் என்ருல் தொழில் வளர்ச்சியைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

அவர் எந்த எண்ணத்தோடு சென்னை நகர எல்லைக்குள் காலடி எடுத்து வைத்தாரோ, அந்த எண்ணம் நனவாகி விட்டது. ஆம்; அவர் ஒரு பெரும் பணக்காரர் ஆகிவிட்டார்!

அளவுக்கு மிஞ்சி அவர் ஆர்வத்தோடு திரட்டிய பொருள் அவருக்கு இப்போதுதான் சிறிது அவகாசத்தைத் தந்தது. பணம் அவருக்கு ஒரு சிறு துரும்பாக மாறி விட்டது. பணத்துக்கு என்ன செய்வது என்று சதா காலமும் கவலைப்பட்டுக் கொண்டிருந்த அவர், இனிப் பணத்தை என்ன செய்வது என்று கவலைப்படத் துவங்கி விட்டார். அவருக்குத் தேவைகளோ குறைச்சல்; தேட்டமோ அதிகம்! நாள் ஒன்றுக்கு நான்கு ரூபாய் இருந்தால் போதும். ஆனுல் நாள் வருமானமோ நாற்பதுக்கும் அதிகமாக இருந்தது!

தோற்றத்தாலும், அமைப்பாலும் ஆள் வாட்டசாட்டமாக வலுமிக்கவராக இருந்தாரே தவிர, உள்ளத்தால், உணர்ச்சியால் ஒரு பச்சைக் குழந்தைக்கு ஒப்பாகவே இருந்துவந்தார். பணத்தோடு அவர் உறவாடிய நேரத்தில் தான் வித்யாவதி என்ற ஒரு சிறு பெண் அவர் வாழ்வில்

குறுக்கிட்டாள். அவளுக்கு அப்போது வயது பதினாறு தான் இருக்கும். பிறந்த நேரப்பலன் காரணமாக பெற்றோர் களை உயிரோடு காணும் பேறு அப் பிள்ளைக்குக் கிடைக்க வில்லை. அனாதையான அந்தப் பெண்பிள்ளையை அவளது அத்தைதான் காப்பாற்றி வந்தாள். அத்தை ஒரு கொடு மைக்காரி. அத்தை தரும் அவதியிலிருந்து எப்படியேனும் தப்பிவிட வேண்டும் என்று எண்ணித் தவித்துக் கொண்டி ருந்த நேரத்தில்தான் அவளுக்கு அவரின் உறவு கிட்டியது. இருவரும் ஒருவரை யொருவர் நேசித்ததால் இடைஞ்சல் என்பது இம்மியும் இல்லாமல் இருவரும் கணவனும் மனைவி யுமாக இல்லற வாழ்வில் ஈடுபடலாயினர்.

அவர் அவளை உள்ளன்போடு நேசித்து வந்தார். அவள்தான் அவருக்கு மனைவி, உறவு, தெய்வம், உதவி எல்லாமும். அவளது நளின சுபாவத்தையும் நாணம் மிகுந்த நடத்தையையும் பார்த்துப் பரவசமடைந்த அவர், ஒரு குல மகளிடம் எவ்வளவு அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்ள வேண்டுமோ அவ்வளவு அடக்க ஒடுக்கமாக நடந்து கொண்டு வந்தார். அவர் அவளிடமிருந்துதான் காதல் என்ன என்பதை முதன் முதலாகத் தெரிந்து கொண்டார். காதல், முற்றிப் பழுத்துக் கனிந்தது அவர் களின் வாழ்வில்!

காதல் வாழ்வில் ஈடுபட்ட அவர், தொழிற்சாலையை அறவே மறந்துவிட்டார். வித்யாவதியோ அடக்க ஒடுக்கமாகத்தான் வாழ்ந்து வந்தாள். அவள் அவரைப் புருஷன் என்றுமட்டும் கருதாமல் பூசிக்கக் கூடிய தெய்வம் என்றும் கருதிவந்தாள். பணம் நிறைய இருக்கிறது என்ற மமதையோ, தான் இடும் கட்டளைகளை நிறைவேற்ற வேலை யாட்கள் ஏராளமாய் இருக்கிறார்கள் என்ற கர்வமோ அவ ளிடம் துளியும் கிடையாது. அவள் அவ்வளவு அமைதி யோடு வாழ்ந்து வந்தாள். அவளைவிட அவர் அநேக ஆண்டுகள் மூப்பு அடைந்தவராக இருந்துங்கூட ஒத்த வயதும் ஒத்த நலனும் நிறைந்த மெத்தச் சிறந்த தம்பதி களைப் போலவே குடித்தனம் நடத்தி வந்தனர்.

இப்படியாக ஓராண்டு காலம் அவர்கள் வாழ்க்கைத் தேரை உல்லாசமாக உருட்டிவிட்டனர். 'இன்பத்தை

அடுத்துத் துன்பம் மறைந்து கிடக்கும்' என்பதுதானே மாநிலங் கண்ட உண்மையாகும். அவள் நிறைந்த கர்ப்பிணி யாக இருந்தாள். அதை ஒட்டிய பிரசவத்தின் காரணமாக தான் இறந்து போகக்கூடும் என்பதை அவளே தெளிவாகத் தெரிந்து கொண்டு விட்டாள். மருத்துவர் பலர் அழைத்து வரப்பட்டனர். மனைவியின் எதிர்பாராத சிரமத்தை எண்ணி எண்ணி ஏங்கிய அவர், என்னென்னவோ முயற்சி கள் எடுத்துக் கொண்டு எப்படியேனும் மனைவியைக் காப் பாற்றிவிட வேண்டும் என்று கஷ்டப்படலானார்; பைத்தி யம் பிடித்தவர் போல அலையலானார். இன்பபுரியாக விளங்கிய அந்த வீடு, இழவு வீடாக மாறிவிடக் கூடாது என்பதுதான் அவர் மனக் கவலை எல்லாம்!

எதிர்பாராத பெருங் கஷ்டம் வெகு அருகாமை யிலேயே வந்து விட்டது. பெரும்பாடுபட்டு ஒரு பெண் பிள்ளையை உலகுக்கு அளித்துவிட்டு உயிரை நீத்துவிட் டாள் வித்யாவதி.

அவர் சொல்லொணுத் துயரத்துள் துக்கித்துக் கொண் டிருந்தார். கண்கள் சிவப்பேறி தீப் பிழம்பாக மின்னின. மனித வாடையே இல்லாத காட்டில் தனிமையாக வாழ விரும்பினுர்.

இழவு நிகழ்ந்த பின்னர் ஒருமாத கால அளவு வரையி லும் அவரிடம் யாரும் நெருங்கவே இல்லை. நெருங்குவதற்கு அஞ்சினுர்கள்! இறுதியில் ஒரு ஆயாக்காரி, பிறந்த குழந் தையை எடுத்துக் கொண்டு அவரிடம் நெருங்கி, "இந்தப் பிள்ளையை என்ன செய்யப் போகிறீர்கள். ஒருமாத கால மாக நான்தான் வளர்த்து வந்துள்ளேன். இனி என்ன செய்யப்போகிறீர்கள் என்பதைச் சொன்னுல் நல்லது," என்று கூறிக் குழந்தையைக் குழந்தைக்கு உரியவரிடம் கொடுக்க முன்வந்தாள். இதுகாறும் குழந்தையின் நினைவை அறவே மறந்திருந்தார் அவர். பச்சிளங் குழந்தையின் பால் வடியும் முகத்தைப் பார்த்ததும் கண்களிலிருந்து நீர் ஆருகப் பெருக ஆரம்பித்து விட்டது.

இருந்தாற்போலிருந்து அவருக்குத் திடீரென்று ஞானேதயம் தோன்றியது. "இவளும் தாயைப்போலவே

வளர்ந்து பெரியவளாகி விடுவாள். என்னைப்போலவே ஒருவன் இவளை மணந்துகொள்ள முன்வருவான். இவளும் தாயைப்போலவே புருஷனைத் தவிக்க விட்டுவிட்டு இறந்து போய்விடுவாள். புருஷன் பித்துப் பிடித்து அலைவான். ஐயோ, இது என்ன அநியாயம்?'' என்று வாய்விட்டுப் புலம்பினர்.

உள்ளத்தில் ஒருவித உண்மை ஒளி பட்டுத் தெறித்தது. 'இவளது தாயைத்தான் என்னல் காப்பாற்ற முடியவில்லை. இவளையாவது நல்ல முறையில் காப்பாற்ற வேண்டும்,'—'இதுதான் அந்த உண்மை ஒளி. இதற்குக் காரணம், பெற்றெடுத்த பாசம்—பிள்ளையின் நேசம்.

அந்தக் குழந்தையைத் தன் இரு கைகளாலும் வாரி எடுத்துக்கொண்டார். 'என் மனைவி சாகவில்லை. குழந்தை வடிவத்திலே என்னேடு வாழ்ந்துவரவே செய்கிருள். என்னைவிட அதிக நாட்கள் இந்த உலகத்திலே வாழத் தகுதி உடையவள்,' என்று தனக்குள்ளாக அவர் சொல்லிக் கொண்டார். குழந்தையின் முகத்திலே தாயின் உருவம் தாண்டவமாடியது. குழந்தையை அன்போடு அணைத்து முத்தமிடலானர்!

அந்தக் குழந்தையின் பெயர்தான் **மாங்குயில்**. அது அவருடைய நண்பராகிய தமிழாசிரியர் ஒருவர் வைத்த பெயர்! குழந்தை பிறந்து ஓராண்டு ஓடிவிட்டது; இரண்டாவது ஆண்டு எட்டிப் பார்த்தது. பிறந்தபோது இருந்ததை விட வளர்ந்து வரும்போது வனப்பு அதிகமுடையவளாகவே விளங்கினுள் மாங்குயில். அவளது அழகைக் கண்டு அவளுக்காகவே உயிர்வாழ விரும்பினர் அவள் தந்தையார்.

ஆண்டுகள் சில சென்றன. தவழ்ந்து திரிந்த குழந்தை தத்தி விளையாடத் துவங்கினுள். குழந்தையின் குறுகுறுப்பும், வார்த்தெடுத்த வனப்பும், அங்குள்ளோர் அனைவரின் கருத்தையும் ஒருங்கே கவர்ந்துவிட்டன. நிமிர்ந்து இருந்த தோற்றம், நீண்டு வளர்ந்த கூந்தல், நெஞ்சங் கவரும் அழகு அனைத்தும்கொண்டு விளங்கிய அவளை யார் தான் விரும்ப மாட்டார்கள்?

தந்தையைப் போலவே உறுதி குலையாத உள்ளமும், இன்பமாக வாழவேண்டும் என்ற எண்ணமும் குழந்தையிடம் நிறையத் தென்பட்டன. குழந்தையோடு தந்தை இடையறுது விளையாடிக் கொண்டிருந்தார். ஆனந்தம் முழுவதையும் சிறு குழந்தையால் அனுபவிக்க முடியாதே என்பதற்காக அவரும் அவ்வானந்தத்தில் பங்குகொள்ள விரும்புபவர்போல இருந்தது, அவருடைய போக்கு! தான் எங்கு சென்ருலும் அங்கெல்லாம் அவளையும் அழைத்துச் சென்ருர். அநேக தடவைகள் தொழிற்சாலைக்கு அழைத்துச் சென்று தொழிலின் அவசியத்தைப் பற்றியும் மனித உழைப்பின் மாண்பைப் பற்றியும் மணிக்கணக்காக அறிவுரைகள் நிகழ்த்தி உள்ளார்.

தந்தையின் சுபாவமும் தாயின் தோற்றமும் கலந்து ஒரு கலவைப் பொருளாக விளங்கினுள் மாங்குயில்.

அவள் சிறு பிள்ளையாக வளர்ந்து வரும்போதே அவர் அவளுடைய பிற்கால வாழ்வுக்காக பற்பலக் கற்பனைக் கோட்டைகள் கட்டலானுர். நிறையப் பணத்தைக் கொடுத்து ஒரு நல்ல பொருளை வாங்குவதைப்போல நிறையப் பணம் செலவுசெய்து ஒரு நல்ல புருஷனை அவளுக்கு வாங்கித் தரவேண்டும் என்பது அவருடைய தணியாத ஆசை. தன்னிடமிருந்த அளவு மிஞ்சிய பணத்துக்கு சரியான செலவு முறை, மகளுக்கு நிலையான மணளனை வாங்கித் தருவதுதான் என்று பல நண்பர்களிடம் அவரே வாய்விட்டுக் கூறி உள்ளார். இயலுமாயின் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்த இளைஞனையே வாங்கிவிடக்கூட அவர் தயாராக இருந்தார். தன்னிடமுள்ள பொருள் தன் மகளுக்குப் போதாமல் போனுலுங்கூடப் போகலாம் என்ற நினைப்போடு இன்னும் அதிகப்படியான பொருளைச் சேர்க்க வேண்டும் என்ற ஆசையால் சூதாட்ட வழிகளில் தீவிரமாக இறங்கத் துவங்கிவிட்டார். சந்தை நிலவரம் சரியாக அமையாத காரணத்தால் சூதாட்டத்தால் பழி வாங்கப்பட்டார். பேராசை பேராபத்தில் முடிந்தது. கைப்பொருளை இழந்து கஷ்டப்படும் நிலைமைக்கு ஆளாகி விட்டார். எல்லாம் காலக் கோளாறு!

மாங்குயிலுக்கு வயது ஆறு ஆகிவிட்டது. அவளது தந்தை தற்கொலை செய்துகொள்ளும் அளவிற்கு மனம்

ஒடிந்துவிட்டார். தன்னிடமிருந்த செல்வ வளங்களை யெல்லாம் ஒரு சேரத் திரட்டிக் கணக்கெடுத்து அதில் ஒரு சிறு துளி அளவைத் தன் செலவுக்கு ஒதுக்கிக்கொண்டு பாக்கிப் பொருள் அனைத்தையும் தன் மகளுக்குத் தனிப் பட்ட சொத்தாக ஒதுக்கி வைக்கத் தீர்மானித்தார்.

காலம் இருந்த நிலைமையில் அமெரிக்க தேசம் செல்வ வளங் கொழிக்கும் நாடாக விளங்கியது. பிற நாட்டவர் கள் எல்லோரும் அமெரிக்காவிற்குச் சென்று பாடுபட்டு உழைத்துப் பணத்தைத் திரட்டிக்கொண்டு தாய் நாடுகளுக் குத் திரும்புவது வழக்கம். அதையொட்டி மாங்குயிலின் தந்தையாரும் அமெரிக்கா செல்லுவதுதான் சிறந்தது என்ற முடிவிற்கு வந்துவிட்டார்.

சொத்துக்களைக் கணக்கெடுத்துப் பார்த்தபோது மக ளுக்காக ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய்கள் அவரால் ஒதுக்கித் தர முடிந்தது. இந்த விகிதத்தில் அவளை அவர் அவளது ஆயுட்காலம் பூராவும் காப்பாற்ற முடியும்! இதற்கான பொறுப்பை தன் இறந்த மனைவி வித்யாவதி யின் சொந்தக்காரரான ஒரு கனவானிடம் ஒப்படைத் திருந்தார்.

இங்ஙனம் மகளுக்குரிய மகத்தான கடமையை மன நிம்மதியோடு செய்து முடித்துவிட்டு அவர் அமெரிக்கா விற்குப் பயணப்பட்டு விட்டார். அவர் திரும்பிவரும் வரையிலும் மகளைப் படிப்பித்துப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பை மனைவியின் உறவுக்காரர் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டார்.

ஏறத்தாழ தன் செலவுக்காக ஆயிர ரூபாய் மட்டும் எடுத்துக்கொண்டு அமெரிக்காவிற்குப் புறப்பட்டுப் போய் விட்டார். அவருடைய பையில் சதா காலமும் ஒரு பொருள் இருந்துவந்தது என்றால், அது அவரது மகள் மாங்குயிலின் புகைப்படமே ஆகும்.

லோகநாதன் என்ற கனவானிடந்தான் மாங்குயில் ஒப்படைக்கப் பட்டிருந்தாள். அவர் ஒரு வியாபாரி. வய தானவருங்கூட! கம்பள விற்பனையில் அவர் கைதேர்ந்த சமர்த்தர். அவரிடம் அதிகப்படியான செல்வ வளம்

சேர்ந்து கொண்டிருந்தது. ஆகையால்தான் மாங்குயிலை அவரிடம் ஒப்புவித்துவிட்டு அவர் அமெரிக்கா செல்லும் துணிவைப் பெறலானூர். அவர் பயணப்படும்போது நண்பர் லோகநாதனிடம் சொன்ன வார்த்தைகள் இவை தாம் : "என் மகளிடம் நல்ல முறையிலே நடந்துகொள்ளுங்கள். நான் செல்லுகிற இடத்திலே ஏதாவது நடந்து விட்டால் நீங்கள்தாம் அவளைக் காப்பாற்றவேண்டும். அவளுக்கு அம்மா அப்பா எல்லாமும் நீங்கள்தாம்!"

மாங்குயிலின் தந்தை எண்ணிப் புறப்பட்டதைப் போல அமெரிக்காவை எட்டிக்கூடப் பார்க்கவில்லை. ஏனெனில் அவரை ஏற்றிச் சென்ற கப்பல், இடைவெளியிலேயே ஒரு விபத்திற்குள்ளாகி தீப் பிழம்புகளால் ஆக்கிரமிக்கப்பட்டு அழிந்து விட்டது.

மாங்குயிலுக்குத் தன் தந்தையின் சாவு குறித்து நெடு நாட்களாக யாதும் தெரியாது. லோகநாதன் அவளைத் தன் வீட்டிற்கு அருகாமையிலிருந்த ஒரு பெண்கள் பாடசாலையில் சேர்த்துப் படிக்க ஏற்பாடு செய்திருந்தார். அந்தப் பள்ளிக்கூடத்து ஆசிரியைகள் தங்கள் கடமை என்ன என்பதைச் சரிவர அறிந்தவர்களாகும். நல்ல பண்பிற்கும் படிப்பிற்கும் அந்தப் பாடசாலை அந்தப் பகுதியிலேயே ஒரு பிரபலமான ஸ்தாபனமாகும். அக் கல்லூரியில் தங்களுடைய பிள்ளைகளைப் படிக்க வைத்துவிடும் பட்சத்தில் சமூகத்தார்களிடையே பெற்றோர்களுக்குச் சிறப்பும் பெருமையும் நிச்சயமாக ஏற்பட்டுவிடும். அந்தக் கல்லூரியில் படித்து வெளியேறும் பெண்கள் களியாட்டத்தின் கருவூலமாகத் திகழுவர் என்பது திண்ணம்.

மாங்குயில் அந்தக் கல்லூரியில்தான் சேர்ந்து பாடம் படித்துவரலானுள். ஏனையப் பெண்களைப்போல அதிகப் படியான ஆனந்தத்திற்கு ஆளாகிவிடாமல் அடக்க ஒடுக்கத்தோடுதான் வாழ்ந்து வரலானுள். அவளது கட்டுப்பாடும் கண்டிப்பும் நிறைந்த வாழ்க்கையைச் சிலர் வியந்து பேசினர்; சிலர் குறைத்துக் கூறினர். அவளைக் கட்டுப் படுத்திக் கண்காணிப்போடு வளர்த்திருக்க முடியுமானல், அவள் பாரத தேசத்தின் தலைசிறந்த உத்தமியாகவும் தலைவியாகவும் திகழ்ந்திருக்கக்கூடும் என்பதில் தினையளவும் ஐயமில்லை!

ஒரு பெண் எந்த அளவில் வாழவேண்டுமோ அந்த அளவுக்குச் சற்று அதிகப்படியான அளவிலேயேதான் மாங்குயில் வளர்ந்து வந்தாள். அவளோடு நெருங்கிப் பழகிய தோழிகளைப் பற்றிக் கேட்கவேண்டியதே இல்லை. அவர்களுக்கெல்லாம் ஒரே ஒரு ஆசை. அது, ஆண்களைப் பற்றிய இரகசியங்கள் அனைத்தையும் அறிந்துகொள்ள வேண்டும், என்பதுதான். அவ்வாசை மாங்குயிலுக்கும் லேசாக இருக்கவே செய்தது. ஆண்களைப் பற்றிய உண்மைகளை அனுபவத்தால் அறியமுடியாத அப்பெண்கள் கற்பனைகள்மூலம் கதை கதையாகப் பேசத் துவங்கிவிடுவார்கள். அப் பேச்சுக்களில் தன்னை மறந்து ஈடுபட்டுவிடுவாள் மாங்குயில்.

யாராவது ஒரு மாணவன் தப்பித் தவறி அவர்களுடைய விடுதிக்குள் நுழைந்துவிட்டாலும் சரி, அல்லது ஒரு மாணவி யாராவது ஒரு இளைஞனோடு உலாவுவதைப் பார்த்துவிட்டாலும் சரி, அன்று அந்தக் கல்லூரி முழுதும் கதை கதையாகப் பேசத் துவங்கிவிடுவார்கள். யாராவது ஒரு இளைஞனுக்கு (கற்பனை ஆசாமி) காதல் கடிதம் எழுதுவது போல ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு கடிதம் எழுதி அதனை ஒருவருக்கொருவர் படித்துக் காட்டி மகிழுவார்கள். ஆண் பெண் உறவுபற்றிய ஆபாசமான கருத்துக்களைச் சுவரில் கரித் துண்டுகளால் எழுதுவதிலும் அவர்களுக்கு அமோகமான திருப்தி உண்டு. போதாக்குறைக்கு காதல் கவிதைகளும் கதைகளும் அவர்களின் கருத்தை வெகுவாகக் கவர்ந்திருந்தன. காதல் சம்பந்தப்பட்ட புத்தகங்களை எப்போதும் அவர்கள் கைகளில் காணலாம்!

இத்தகைய கல்லூரி வாழ்வு பெண்களின் தனிப்பட்ட வாழ்வில் பிரதிபலிக்கமாட்டாது என்பதை ஓரளவுக்கு ஒப்புக்கொண்டாலும், மாங்குயிலைப் பொறுத்தவரையில் கல்லூரி வாழ்வு ஒரு அழியாத சின்னமாகவே அவளது நெஞ்சில் சுவடு எடுத்துவிட்டது. தந்தையிடமிருந்து பெற்றுக்கொண்ட தளராத நம்பிக்கையும் உறுதியான உள்ளமும் கல்லூரி வாழ்வில் அடைய நேரிட்ட ஆபாசக் கருத்துக்களுக்குத் தடைக் கற்களாக நின்று துணை செய்து வந்தன.

ஒருவனுக்கு ஒருத்தி; அல்லது ஒருத்திக்கு ஒருவன் என்ற உண்மையைக் கல்லூரிப் பெண்கள் அவ்வளவாக ஒப்புக்கொள்ளுவதில்லை. ஒருத்திக்குப் பல காதலர்கள் இருக்கலாம்; அதுபோல ஒருத்தனுக்குப் பல காதலிகள் இருக்கலாம் என்பதுதான் அவர்களின் ஏகோபித்த அபிப்ராயம். மாங்குயிலும் இக் கருத்தை முழு மனதோடு ஆதரிக்காவிட்டாலும் அரைமனதாக ஒப்புக்கொள்ளவே செய்தாள்.

''நான் யாரையாவது காதலித்தால், அவனைக் கலியாணம் செய்துகொண்டு அவனோடு வாழ முற்பட்டுவிடுவேன். எனக்கும் அவனுக்கும் தகராறு ஏற்பட்டுவிடும் பட்சத்தில், அவனோடு விவாக ரத்துச் செய்துகொள்ளத் தயங்கமாட்டேன்,'' என்று அவள் பலமுறை தன் பள்ளித் தோழிகளிடம் கூறி உள்ளாள்.

'தன்னை எவனாவது ஒருவன் யாரும் அறியாத வேளையில் கட்டி இழுத்துக்கொண்டு ஓடிவிடுவான்,' என்று அவள் பலமுறை கனவுகள் கண்டிருக்கிறாள். அமைதியான முறையிலே அணுகிக் காதல்புரிபவனை விட ஆக்கிரமிப்பால் அணுகிக் காதல் புரிபவனே சிறந்தவன் என்பது அவளது அந்தரங்க ஆசையாகும்.

படித்துப் பக்குவமான பருவத்தை அடைந்துவிட்ட மாங்குயிலுக்குப் பள்ளிப் படிப்பு கசப்பையே தந்தது. இலக்கியம் இலக்கணம் என்று எதையெதையோ சொல்லி, படிப்பவர்களுக்குச் சொல்லித் தரும் பாடங்களை அவள் அறவே வெறுத்தாள். அவளுக்குப் படம் வரைவதிலும் பின்னல் வேலைகளிலும் பாண்டித்யம் இருந்துவந்தது. ஓரளவு கணக்குத் தெரியும். மதசம்பந்தப்பட்ட சரித்திரம் ஓரளவு தெரியும். ஏனைய எதையுமே அவள் அறியமாட்டாள். அறிந்துகொள்ள விரும்பவுமில்லை.

எதிர்பாராதவிதமாக ஒருமுறை அவள் படித்துக் கொண்டிருந்த பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்து, ''உன் படிப்பை முடித்துக்கொண்டு பள்ளிக்கூடத்தைவிட்டு வீட்டிற்கு வருகிறாயா?'' என்று கேட்டார் லோகநாதன். பள்ளிக் கூடத்திலிருந்து எப்படியாவது வெளியேறி உலக வாழ்வில்

ஈடுபட்டு, காலத்தையும் பொழுதையும் உல்லாசமாகக் கடத்தலாம் என்றெண்ணிக் கொண்டிருந்த மாங்குயில், லோகநாதனின் விருப்பத்திற்கு இணங்குவதாகச் சம்மதம் அளித்துவிட்டாள்.

அந்த வயதான கம்பள வியாபாரி ஒரு திட்டம் போட்டிருந்தார். அதன்படி தனது ஐம்பதாவது வயதில் தன் தொழில் விவகாரங்களை எல்லாம் முடித்து மூட்டை கட்டிக்கொண்டு சென்னை நகரிலேயே ஒரு பங்களாவை விலைக்கு வாங்கி இருந்தார். அவருக்கு ஒரு சபலம், மாங்குயிலை மனைவியாக்கிக் கொள்ள வேண்டும் என்பதாக! அதற்கு இதுதான் சரியான சந்தர்ப்பம் என்பதாகச் சதித் திட்டம் போட்டிருந்தார். உண்பதுவும் உடுப்பதுவும் உறங்குவதும் அல்லாமல் அவர் வேறு எவ்விதச் செயலிலும் விருப்பம் இல்லாதவராகவே வாழ்ந்து வந்தார்.

மாங்குயிலை மனைவியாக ஆக்கிக்கொண்டால் அவளிடம் சீதனமாகச் செல்வப் பொருள் எதையும் அடையமுடியாது என்றாலுங்கூட, அவளது அழகுச் செல்வத்தை அளவுக்கு மீறி அனுபவிக்க முடியும் என்பதுதான் லோகநாதனின் அந்தரங்க எண்ணம். அந்தக்கிழவனின் மூளையை மாங்குயிலின் அங்கங்கள் அவ்வளவு ஆழமாகக் கவர்ந்துவிட்டன. அவளோ பல விஷயங்களில் சிறு பிள்ளையாகவே வாழ்ந்து வந்தாள். ஆனால் அவளை எல்லா விஷயங்களிலும் பெரிய மனுஷியாக ஆக்கிவிடவேண்டும் என்று அந்தக் கிழவன் அபார ஆசைகொண்டிருந்தான். அவளை அருகில் வைத்துக்கொண்டிருப்பது ஆனந்தச் சுரங்கத்தை மடியில் கட்டிக்கொண்டிருப்பதற்கு ஒப்பாகும் என்பதாக அவன் எண்ணினான். அவள் கன்னிப் பெண்ணாகவே தன்னிடம் வருவாள். அவளைக் காதல் பொருளாக மாற்றிக் களிப்புக் கடலுள் ஆழ்த்திவிட வேண்டும் என்பது அவன் ஆசை. பணத்துக்குத் தன் தயவை எதிர்பார்த்து இருக்கும் ஏழைப் பெண் தன் இச்சைகளுக்கும் எண்ணங்களுக்கும் ஏற்றபடி அடிபணிந்து, அடக்க ஒடுக்கமாக நடந்துகொள்ளுவாள் என்று அவன் முழுக்க முழுக்க நம்பினான்.

இத்தகைய மிருகத்தனமான இச்சை லோகநாதனின் உள்ளத்தில் ஊசலாடிக் கொண்டிருந்ததற்குக் காரணம்

அவனது கொழு கொழுத்த உடலும் வலுப்படைத்த செல்வமும் ஆகும்.

நான்கு ஆண்டுகள் நடந்து விட்டன. பள்ளியில் படிப்பதில் ஆர்வமும் அக்கரையும்செலுத்திய மாங்குயில், படிக்கும் நேரந் தவிர ஏனைய நேரங்களில் பின்னல் வேலைகளிலும் தையல் வேலைகளிலும் ஈடுபடுவதையே குறியாகக் கொண்டிருந்தாள். அவளது பள்ளிப் பருவம் ஏனைய பள்ளிப் பிள்ளைகளுக்கு உரியதுபோல வேடிக்கை விருந்துகளில் அநாவசியமாகச் செலவு செய்யப்படவில்லை.

லோகநாதன் அவளின் ஒவ்வொரு நடத்தையையும் உன்னிப்போடு கவனித்து வரலானான். அவளை அடிக்கடி பார்த்துக் கொண்டிருக்க விரும்பினான். எப்போதாவது யாரும் இல்லாதவேளையில், அவளது நெற்றியில் அல்லது கன்னத்தில் முத்தமிடத் தவறமாட்டான். அவனின் அந்தரங்க எண்ணம் என்ன என்பதை உணர்ந்து கொள்ளாத நிலையில், அவள் அவனது ஒவ்வொரு செயலுக்கும் சிரித்துக் கொண்டு சந்தோஷப்படுபவள்போல நடந்து வந்தாள்.

ஒரு நாள் மாலை லோகநாதன் அவளைத் தனிமையில் சந்திக்க நேரிட்டபோது அருகில் அழைத்து அணைத்துக் கொண்டு பலவந்தமாக முத்தமிடலானான். இதுகாறும் உணராத ஒரு வெறி உணர்ச்சியை அவனது முகத்தில் இருந்து தெளிவாக அறிந்து கொண்ட மாங்குயில், கிழவனின் போக்கில் சந்தேகம் கொள்ளலானாள். அவனது கைகளில் இருந்த பரபரப்பும், உள்ளத்தில் இருந்த துடிதுடிப்பும், உடலில் இருந்த பிரதிபலிப்பும் அவளைச் சித்திரவதைக்கு உள்ளாக்கிவிட்டன. தன் உடலில் இருந்த உரத்தையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு அவனை அவள் ஒரு உதறு உதறித் தள்ளினாள். பாவம்; அக் கிழவன் எதிர்பாராத எதிர்ப்பின் காரணமாகப் பலமாகத் தாக்கப்பட்டுத் தரையில் மல்லாந்து வீழ்ந்து விட்டான். விழுந்து கிடந்த அக் கிழ நரியைப் பார்த்து அவள் சொன்னாள் :—
"நான் நாளைக் காலையிலேயே உன் வீட்டைவிட்டு வெளியேறி விடுகிறேன். உன் நயவஞ்சகம் எதுவும் என்னிடம் பலிக்காது என்பதை மட்டும் நினைவில் இறுத்திக் கொள்."

மாங்குயிலின் மனம் புண்ணுகாதவாறு பக்குவமாக இன்னும் சிறிது காலத்தைக் கடத்திவிட்ட பின்னர், படிப் படியாகவும் எதவாகவும் தன்னுடைய காதலை அவளிடம் தெரியப்படுத்தி, ஆத்திரப் புத்தியை அவசரப்பட்டு வெளிக் காட்டாமல் நடந்து கொண்டிருக்கும் பட்சத்தில், அக் கிழவ னின் மீது பரிதாபமும் பச்சாதாபமும் கொண்டு அவனையே அவள் மணந்துகொள்ள வந்திருந்தாலும் வந்திருக்கக் கூடும். அடக்கத்துக்கு அடிபணியும் சுபாவமும், ஆவேசத் துக்குப் பகை கொள்ளும் பண்பும் அவளுக்குச் சிறு பிராயத்திலிருந்தே இருந்து வந்தன.

அவள் ஆத்திரத்தோடு அந்த வீட்டை விட்டு வெளி யேறிக் கொண்டிருந்தாள். லோகநாதன் அவளைப் பார்த் துப் பார்த்து அவலச் சுவை பெருக்கொடுத்து ஓட, அழமாட் டாதவனுக நின்று கொண்டிருந்தான்.

அவனுக்கு அவளை நன்கு தெரியும். அவள் சொன்ன சொல் தவறமாட்டாள் என்பதையும், ரோஷம் மிகுந்தவள் என்பதையும் அவன் அறிவான். எனவே இந்த இக்கட் டான நிலையிலிருந்து தனக்கு ஒரு சாதகமான நிலையை எப்படிப் பெற முடியும் என்பது குறித்துத் தீவிரமாக யோசித்தான். தானுகப் பழுக்காததைத் தடிகொண்டு பழுக்க வைக்க வேண்டும் என்ற தவருன முடிவைக் கொண்டு விட்டான்.

வெளியே சென்றிருந்த மாங்குயில் எங்கெங்கோ சுற்றித் திரிந்துவிட்டுத் தன் அறையில் தன்னந்தனியாக வந்து படுத்து உறங்கினுள். அவள் இம்மாதிரித் தூங்கிக் கொண்டிருக்கும் போதெல்லாம் லோகநாதன் அவளது படுக்கை அருகே சென்று அவளை முத்தமிட்டுவிட்டு வரு வது வழக்கம். அவள் இச் செயலை, தந்தை மகளுக்குக் காட்டும் பாசம் என்றெண்ணிச் சும்மா இருந்து விடுவது வழக்கம். அன்றும் அது போலவே செய்து வரத் தீர்மானித் தான். ஆனுல் இம்முறை அவனது செயலில் மூர்க்கத்தன மும் முரட்டுத்தனமும் பிரதிபலித்தன.

உறக்கம் கொள்ள முடியாத காரணத்தால் லோக நாதன் படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தான். அப் போது சரியான நள்ளிரவு நேரமாகும். மாங்குயில் படுத்

துத் தூங்கிக் கொண்டிருந்த மாடி அறைக்குச் சென்றான். வேட்டைக்குப்புறப்படும் பூனை பதுங்கிச் செல்லுவதுபோல இருந்தது அவன் போக்கு. மெதுவாகச் சென்று கதவைத் திறந்தான். அங்கு அழகுப் பொருளின் அவதாரமான மாங்குயில் தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்தாள். முட்டிக் கொதித்துக் கொண்டிருந்த மூர்க்கத்தனம் நிறைந்த உள்ளமும், தட்டிக் கழித்துவிட முடியாதபடி பரபரத்துக் கொண்டிருந்த கைகளும் அவனை மிருகமாக ஆக்கிவிட்டன.

வேற்று மனிதன் ஒருவனின் வேக்காடு நிரம்பிய உடலின் பரிச உணர்ச்சி பட்டதும், துள்ளி எழுந்தாள் மாங்குயில். அவளைக் கூப்பாடு போட்டுவிடாதபடி தடுக்கும் எண்ணத்தோடு, அவள் அருகில் சென்று இறுகக் கட்டிக் கொண்டு ஏதேதோ சொல்லவும் செய்யவும் நினைத்தான் லோகநாதன். பூனை போல விளங்கியவள் புலியாக மாறி விட்டாள். தாவி எழுந்தாள் ; தாக்கித் தள்ளினாள் ; தப்பித்துக் கொண்டாள். பாவம், அந்தக் கிழவனைப் படாதபாடு படுத்தி விட்டாள். அவனைக் கீழே தள்ளி அவன் வயிற்றில் தன் முழங்கால்களை வைத்து, கழுத்திலே கைகளை அழுத்தி, அவனைக் கொல்லத் துணிந்த காட்சி, 'சூர சம்காரக்' காட்சியாக விளங்கிற்று.

என்ன இருந்தாலும், கலைத்து விடப்பட்ட தலைமயிரிலிருந்தும், குலைத்து விடப்பட்ட ஆடைகளிலிருந்தும் அவளது புனிதத் தன்மை பாழாக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தீர்மானிப்பது தவறுடையதாகாது. மாங்குயிலின் சீற்றத்துக்கு ஆளாகிச் சின்னாபின்னப்படுத்தப்பட்ட லோகநாதன், தரையிலே விழுந்து தலையிலே ஒரு காயத்தை அடைந்து விட்டான். மேலும் மாடிப்படியிலிருந்து உருண்டு விழுந்து, புத்தி சுவாதீனம் இழந்து, உணர்ச்சியற்ற புழுப்போல நடைபாதையில் நாலுபேர் பரிகசிக்கும்படியாகக் கிடந்தான்.

தன்னையும் தன் ஆடைகளையும் சீர்படுத்திக் கொண்டு, இரவோடு இரவாக வீட்டைவிட்டு வெளியே கிளம்பினாள் மாங்குயில். ஊரைவிட்டு ஒதுங்கிவந்து, நதிக்கரையின் ஓரமாக நடந்து கொண்டிருந்தபோதுதான் அவ்வூரின் பெரிய கடிகாரம் ஒரு மணி அடித்தது. பொல்லாத வல்லி

ரவு போய், எல்லோரும் விரும்புகிற எழிற்காலை எப்போது வரும் என்று அவள் ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு ஒரு போக்கிடம் வேண்டும். அதை அடைவதற்குப் பொழுது புலர்ந்தால்தான் நல்லது. ஆகவேதான் 'பூ எப்பப் பூக்கும்? பொழுது எப்ப விடியும்?' என்று முணுமுணுத்தபடியே நடந்து கொண்டிருந்தாள்.

நேரம் ஆக ஆக அவளது ஆத்திரம் தணிந்து விட்டது. ஆண்டவன் தந்த உடலின் அமைப்பே ஆபாசக் களஞ்சியமாகுல் என்பதை அனுபவ ரீதியாக அறிந்து கொண்டாள். அவ்வறிவு அக்கிழவனின் மேல் கொண்டிருந்த கோபத்தைச் சிறுகச் சிறுகக் குறைத்து விட்டது.

அந்த நள்ளிரவில் ஆற்றங்கரையில் அவள் சென்று கொண்டிருந்த திக்கை எதிர்த்து ஒரு மாணவப் பட்டாளம் வந்தது. அவ்விளைஞர்களின் 'கண் பார்வைக்கு' ஆளாகிவிடக் கூடாது என்ற எண்ணத்தோடு, 'அறக்குன்றம்' என்ற இடத்தில் திரும்பி, அருகில் இருந்த ஒரு சந்தின் வழியாக நகருக்குள் நுழைந்தாள். அறிமுகம் ஆகாத பாதையில் அச்சம் துணைவர அவள் ஆமைபோல் மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தாள். கொஞ்சத்தூரந்தான் சென்றிருப்பாள். அதற்குள்ளாக அவளைப் பின்பற்றி ஒரு ஆசாமி வந்தார். பின் தொடர்ந்தவரின் பிடியினின்று தப்புவதற்காக நடையைக் கொஞ்சம் துரிதப் படுத்தினுள். ஓடுபவரைக் கண்டால் விரட்டுபவர் சும்மாவா இருப்பார்?

பின் தொடர்ந்துவந்த ஆசாமி விரட்டிக்கொண்டே வந்து அவளை வழி மறித்து நிறுத்திவிட்டார். அவர் அவளது காதில் ஏதேதோ முணுமுணுத்தார். அவரது பேச்சில் இனிமை ததும்பி நின்றது. தோற்றத்தாலும் பேச்சாலும் அவர் அவளது உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டார். அவரிடம் அடிமையாகிவிட்ட அவள், தான் தனிமையில் வெளியேறியதற்குரிய காரணத்தையும் வீட்டு விவகார விருத்தாந்தத்தையும் அவரிடம் ஒளிவு மறைவு இல்லாமல் உரைத்தாள். அவள்மேல் ஆசையோடு அனுதாபமும் கொண்ட அவ்விளைஞர், தன்னுலான உதவிகளைச் செய்து கொடுப்பதாக வாக்குறுதி கொடுத்து,

தன்னோடு வந்து தங்கி இருக்கும்படியும் தாழ்மையுடன் கேட்டுக்கொண்டார். அவரை அவள் முழுதும் நம்பிவிட்டாள். அவருக்கே அடிமையாகி விட்டாள் என்றால் கேட்பானேன்?

அவ்விளைஞர் பார்ப்பதற்கு அழகிய தோற்றமும், பழகுதற்கு இனித்த பண்புகளும் உடையவராக இருந்தார். அவர் சென்னையில் 'அமைந்தகரை' என்ற பகுதியில் ஓர் ஓட்டலில் தங்கி இருந்தார். அவர் மாங்குயிலை அழைத்துக் கொண்டு தான் தங்கி இருந்த இடத்திற்கு வந்துசேர்ந்தார். அங்கு அவளுக்குச் சகல வசதிகளும் செய்து தந்தார்.

புதிதாகக் குடித்தனம் புகுந்த அறையில் சிகரெட்டுத் துண்டுகளும், படித்துக் கிழித்தெறிந்த பத்திரிகைத் துண்டுகளும் நிறைய மண்டிக்கிடந்தன. போதாக்குறைக்கு பெண்களுக்குரிய இரவிக்கைத் துணிகள் இரண்டும் ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடந்தன. அவற்றை மாங்குயில் பார்த்துவிட்டாள் என்பதைப் புரிந்துகொண்ட இளைஞர், சிரித்துக்கொண்டே சமாதானம் சொல்லித் தன் நடத்தையைப் பற்றிச் சத்தியமும் செய்து கொடுத்தார். தனக்கு இதுவரையிலும் கலியாணமே ஆகவில்லை என்பதையும் அவளுக்கு அவர் எடுத்துக் கூறினார். மாங்குயில் அவரது சொல்லையும் செயலையும் எண்ணி யெண்ணிக் குழப்பம் அடைந்து விட்டவள்போலத் தோன்றினாள்.

அன்று இரவு இருவரும் ஒரே படுக்கையில் படுத்து எழுந்தனர். மறுநாள் பொழுது புலர்ந்ததும் இருவரும் புத்துணர்வு பெற்றவர்கள்போல் விளங்கினர். லோகநாதனின் எந்தச் செயலுக்காகக் கோபப்பட்டு வெளியேறினாளோ, அதே செயலுக்கு முன்பின் அறிமுகம் இல்லாத புது ஆசாமியிடம் அடிபணிந்து விட்டாள்.

அவளோடு புதிதாகத் தொடர்புகொண்ட இளைஞன், அவள் சொல்லிய குடும்பக் கதை முழுதும் முழுக்க முழுக்க உண்மையாகவே இருந்ததை உணர்ந்து அதிசயமும் அனுதாபமும் கொண்டான். அந்நகரில் வாழ்ந்துவரும் ஏனைய வேசிப் பெண்களைப்போல் அல்லாமல், மாங்குயில் உயர் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணாக விளங்கியது அவனுக்குப்

பெரும் மனக்கலக்கத்தையே தந்தது. அவன் ஓரள வுக்கு உலக உண்மையை அறிந்தவனுதலின் ஒரு பெண் முதன்முதலாகத் தன்னுல் சீரழிந்து போவதை அவன் விரும்பவில்லை. சீரழிந்து போன பெண்களைத் தன் சிற் றின்பத்துக்காக பயன்படுத்தத் தயங்கமாட்டான் என்ரு லும்கூட, சீருற்று விளங்கும் ஒரு பெண்ணைச் சிறுமைப் படுத்த அவன் விரும்பவே இல்லை!

நள்ளிரவில் அவன் மாங்குயிலைச் சந்தித்ததும் அவ ளைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று, தான் விரும்பி யதை அவளிடமிருந்து பெற்றுக்கொண்டு, அவள் விரும்பு கிற பணத்தையோ பொருளையோ கொடுத்துவிட்டால் அத் தோடு அந்த அத்தியாயம் முடிந்துவிடும் என்று எண்ணி ஞன். ஆனுல் அவ்வத்தியாயமோ முடிவடையாமல் தொடர் கதையாக வளர்ந்து விட்டது,

அவன் அவளை அழைத்து, "பேதைப் பெண்ணே, உனக்கு நான் பெரும்பிழை செய்துவிட்டேன். என்னை மன்னித்துக்கொள். என்னை மறக்க முடியுமானுல் மறந்து விடு. நான் இந்தத் தேசத்தை விட்டே இன்னும் சில வாரங்களில் வெளியேறப் போகிறேன். திரும்பிவராம லேயே இருந்தாலும் இருந்துவிடுவேன்," என்று சொன்ஞன்.

மாங்குயில் அவனது வார்த்தைகளைக் கேட்ட பின்ன ருங் கூடக் கலங்காமல் பதுமைபோல இருந்தாள். காரணம்: அவளுக்கு அந்த நேரத்தில் அவன் மேல் காதல் என்பது சிறிதும் கிடையாது. அவர்களின் ஒரு நாள் உறவு, அவ னைப் பொறுத்தவரையில் உல்லாசப் பொழுதாகவும், அவளைப் பொறுத்தவரையில் வாழ்க்கையின் அனுபவ அறி வாகவும் விளங்கிற்று.

அவ்விளைஞன் அவளை விட்டுப் பிரிந்து செல்லப் போவதாகச் சொன்னபோது, தான் தனிமையிலும் நண் பர்கள் அற்ற முறையிலும் தனித்து வாழ நேரிடுமே என்று எண்ணி மாங்குயில் சிறிது மனவருத்தங் கொண் டாளே தவிர, கருதிய காதல் சிதைந்து விட்டதே என்ரே, ஆசைக்குரியவன் அகன்று விடுகிருன் என்ரே, அவள்

இம்மி அளவுகூட எண்ணி அழவில்லை. ஒரு நாளுக்கும் குறைந்த கால அளவை உடைய அவர்களின் உறவு, ஒரு விபரீத உணர்ச்சியையும் வேதனையையும் பரப்பி நின்றது.

அவள் படுக்கையினின்றும் எழுந்து ஆடைகளைச் சீர் செய்து கொண்டாள். அதற்கப்புறம் எதிரே நின்று கொண்டிருந்த இளைஞனைப் பார்த்து, "நீங்கள் இவ்வூரை விட்டு வெளிநாட்டிற்குப் பிரிந்து செல்லும் காலம் வரையிலும், நான் உங்களோடு தங்கி இருக்கவே விரும்புகிறேன். அதற்கு மட்டும் அனுமதி தந்தால் நல்லது. அது நீங்கள் எனக்குச் செய்கிற பேருபகாரம் ஆகும்," என்று குழைவாகக் கேட்டாள்.

அவள் கேட்டுக் கொண்ட முறையும், எடுத்துச் சொன்ன விதமும் அவனது உள்ளத்தில் அனுதாப உணர்ச்சியைப் பெருக்கெடுத்து ஓடச் செய்துவிட்டன. வாழ்க்கைப் பாறையில் முட்டி மோதுண்டு இன்ப துன்பங்களைச் சரிவரப் புரிந்து கொள்ளாத ஒரு இளம் பெண்ணின் வாழ்வை முதன் முதலாகப் பாழ்படுத்திவிட்ட கொடுமை, சதாகாலமும் அவன் உள்ளத்தில் குமுறிக் கொண்டுதான் இருந்தது!

அவள் அவனைப் ஆதரவாளனாக நம்பி அடைக்கலம் புகுந்தபோது அறியாப் பேதையாகவும் அனுபவமில்லாத பெண்ணாகவும் இருந்து வந்தாள். அதனால்தான் அவன் அவள்மாட்டு அனுதாபமும் அன்பும் கொண்டான். அவளது வேண்டுகோளுக்கும் இணங்கிவிட்டான், அவள் அருகில் சென்று, "அன்பே, இது உன் வீடு. உன் இஷ்டப்படி நடந்து கொள்ளலாம்," என்றும் கூறினான்.

காலை வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்ட பின்னர், மாங்குயில் லோகநாதனின் வீட்டுக்குச் சென்று, அங்கிருந்த தன் உடைமைப் பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு வந்து விடவேண்டும் என்று திட்டமிட்டிருந்தாள். திட்டத்தைச் செயலாற்றும்போது லோகநாதனைச் சந்திக்கும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. அவனிடம் தன் திட்டம் என்ன என்பதை அவள் தெளிவாகச் சொன்னாள். அதைக் கேட்டதும் அக்கிழவன் பெரும் வியாதி

யால் பீடிக்கப்பட்டவனை போல பெருமூச்சு உயிர்த்தான். அவளோ அவனை அலட்சியப்படுத்திவிட்டு புதுக்குடியிருப்பை நோக்கி நடந்தாள். அங்கு பின்னல் வேலைகளில் ஈடுபட்டுப் பொழுதைக் கடத்தினுள். அவளது போக்கில் "புதுமை" தெளிவாகத் தெரிந்தது. நிகழ்கால இன்பத்துள் ஆர்வத்தோடு விளங்கிய அவள், எதிர்காலத்தைப் பற்றிச் சிறிதும் சிந்திப்பவளாகத் தெரியவில்லை!

அவளுடைய காதலனுக்குப் பெண்கள் விஷயத்தில் அலாதியான மரியாதை உண்டு. பிறருக்கு வேண்டுமென்றே தீங்கு செய்யக் கூடாது என்ற நினைப்பும், அன்றன்றைய வாழ்வை ஆனந்தத்தோடு கழிக்க வேண்டுமென்ற ஆசையும் அவனுடைய பிறவிக் குணங்களாகும். நீதி நேர்மை என்று சொல்லிக் கொண்டு அதற்காக துன்பத்தையும் துயரத்தையும் மேற்கொள்ள அவன் தயாராக இல்லை. வாழ்வு இன்பமயம் என்பதே அவன் லட்சியம்.

பழக்கம் அதிகரிக்கவே அவனுக்கு அவள்மேல் அனுதாபம் நிறைந்த பரிவும் அவளுக்கு அவன்மேல் அசைக்க முடியாத ஆசையும் உண்டாகிவிட்டன.

மாங்குயில் ஒரு சிறந்த அழகி. ஆகவே அவளைத் தன் நண்பர்களிடமெல்லாம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தி வைத்தான். பகிரங்கமாகவே அவன் அவளைத் தன் மனைவி என்று சொல்லி வந்தமையால் இருவரும் எல்லா இடங்களுக்கும் இணைபிரியாமல் போய் வந்து கொண்டிருந்தார்கள். நாள் ஆக ஆக அவனுக்கு அவளும் அவளுக்கு அவனும் என்ற முறையில் ஒழுகிவரலாயினர். வாழ்க்கையின் ஆழ்ந்த தத்துவங்களெல்லாம் அவர்கள் வாழ்வில் தவிடு பொடியாயின.

சென்னை நகரில் மருத்துவத் தொழிலில் ஈடுபட்டு விளகிய அவ்விளைஞனுக்கு வெளிநாட்டில் உத்தியோகம் ஒன்று காத்துக் கிடந்தது. அவ்வுத்தியோகத்திற்குரிய உத்திரவை அவன் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். 'இன்றுவரும், நாளைவரும்,' என்று எண்ணியெண்ணி நாட்களைக் கடத்திவரும் அவனுக்கு, மாதங்கள் பலவாகியும் உத்திரவு கைக்கு வந்து சேரவில்லை. 'இன்று போய் விடுவான், நாளை போய்விடுவான்,' என்று எண்ணி

எண்ணிப் பயந்துவாழ்ந்த மாங்குயிலுக்கும் மாதங்கள் பல ஆக ஆக மனப்பயம் முழுதும் மாறிவிட்டது. ஏறத்தாழ ஓராண்டுகாலம் இம்மாதிரியாக ஓடிவிட்டது.

துவக்க காலத்தில் வாழ்க்கைக்கேற்ற நண்பன் கிடைத்துவிட்டான் என்ற நினைப்பில் மாங்குயில் மகிழ்ந்திருந்தாள். மறு மறு மாதங்களில் அவர்களின் நட்பு அன்பாக மாறிவிட்டது. அப்புறம் அவ்வன்பு காதலாக உருவெடுத்து விட்டது!

துவக்க காலத்திலேயே அவன் அவளைவிட்டுப் பிரிந்திருப்பானாயின் அவள் அப் பிரிவை ஒரு சர்வ சாதாரண நிகழ்ச்சியாகக் கருதிச் சமாதானம் பெற்றிருப்பாள். ஆனால் நட்பு காதலாக மாறி, காதல் கரைபுரண்டு ஓடுகையில் பிரிவு நோயைத் தாங்குவதென்பது சாமான்யமான சங்கதி அல்ல! அவளது ஒவ்வொரு அங்கத்திலும் அவன் வாழ்ந்து வரலானான். ஆகவே அவன் அவளைவிட்டுப் பிரிகிறான் என்று சொன்னால் அவளது உடம்பிலிருந்து ஒரு பகுதி பிரிகிறது என்றுதான் பொருள்!

மாங்குயில் ஒருநாள் அதிகாலையில் எழுந்ததும், சென்னை நகரை அடுத்துள்ள சிறு கிராமத்திற்குத் தன் தோழியருடன் சென்றுவந்தாள். லலிதா என்ற சிநேகிதி தன்னுடைய பிள்ளையை ஒரு ஆயாக்காரியிடம் கொடுத்து வளர்த்துவர ஏற்பாடு செய்திருந்தாள். அவ்வாயாக்காரியின் வீட்டுக்குத்தான் போய்வந்தனர். போயிருந்த தோழியருள் இருவர் கிராமத்திலேயே தங்கிவிடவேண்டும் என்று தீர்மானித்தனர். நகர வாழ்வின் உற்சாகத்திலும் ஒய்யாரத்திலும் மயங்கிவிட்ட மாங்குயில், அதற்குச் சம்மதிக்கவில்லை.

மாங்குயில் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து கவலை தோய்ந்த முகத்தோடு உட்கார்ந்துவிட்டாள். 'தன் தோழி லலிதாவைப்போலத் தானும் ஒரு குழந்தைக்குத் தாயாக வேண்டும். தனக்கென ஒரு புருஷன் தன்னை அன்போடு ஆதரிக்கத் தயாராக இருக்கவேண்டும்' என்று எண்ணினாள். இந்தச் சமயத்தில், 'தன் ஆசைக்குரியவன் அயல்நாடு சென்றுவிடுவான்,' என்பதை நினைக்கும்போது நெஞ்சம் நெருப்பாக மாறிக் கொதித்தது.

வாழ்வில் தான் செய்துவிட்ட மகத்தான குற்றத்தை எண்ணியெண்ணி ஏங்கினுள். குணத்துக்கும் பண்புக்கும் மதிப்புத்தராதபடி, இன்பம் ஒன்றையே இலட்சியமாகக் கொண்ட வாழ்க்கையை நினைத்துப் பார்த்துத் தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டாள். கற்பின் சிறப்பை மனதார நினைத்துப் பார்த்துக் கற்பு நழுவிய தன் வாழ்வைத் தானே கண்டித்துக்கொண்டாள். சுருக்கமாகச் சொன்னுல் ஏதோ வியாதியால் பீடிக்கப்பட்டவள் போல வேதனையோடு விளங்கினுள்.

தன் ஆசை நாயகனை அழைத்து அவனிடம் தன்னை மணந்துகொள்ளும்படி மன்ருடிக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று உறுதி செய்துகொண்டாள். கிராமத்தி லிருந்து சென்னைக்கு வந்ததும் தங்கி இருந்த ஓட்டலுக்கு ஓடினுள். 'எந்த இடத்திலும் எந்த வேளையிலும் தங்க ளுக்குள் ஒத்து வாழமுடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விடுமாயின், தாங்களாகவே பிரிந்து செல்லலாம்' என்று தானும் தன் ஆசைநாயகனும் செய்துகொண்ட சபதத்தை அறவே மறந்துவிட்டாள். அதற்கு மாருகத் தன்னுடைய புருஷன் என்று அவனையும், அவனுடைய மனைவி என்று தன்னையும் பாவித்து பிரிக்கமுடியாததொரு பந்தத்தைப் பெற்று வாழ்வதாக எண்ணிவிட்டாள்!

மூடியிருந்த கதவைத் தள்ளிவிட்டு மூர்க்கத்தனமாக நுழைகின்ற பேய்க்காற்றைப்போல, அவ்விளைஞன் நின்று கொண்டிருந்த அறைக்குள் மாங்குயில் நுழைந்தாள். கதவுப் பக்கமாக முதுகுப்புறத்தைத் திருப்பிக்கொண்டு குனிந்தபடியே பெட்டிக்குள் தன்னுடைய பொருள்களை எல்லாம் அடக்கிக்கொண்டிருந்தான் அவளது ஆசை நாயகன். அவனுக்கு அருகில் இன்னும் பல பெட்டிகள் கிடந்தன. அவை நன்கு பூட்டப்பட்டு, ஒன்றின்பின் ஒன்ருகக் கிடந்தன. பெட்டிகளில் எல்லாம் லேபிள்கள் ஒட்டப்பட்டிருந்தன. மாங்குயிலின் பொருள்களோ போட்ட இடத்தில் போட்டபடியே கிடந்தன!

லலிதா என்ற தன் தோழியோடு மாங்குயில் கிராமத் துக்குப் போயிருந்தபோது அவளது ஆசைநாயகனுக்கு அவன் நெடுநாட்களாக எதிர்பார்த்திருந்த உத்திரவு

வந்து சேர்ந்தது. அதனுல்தான் அவன் பயணத்துக்குத் தயாராகிக்கொண்டிருந்தான்.

மாங்குயில் திரும்பி வருவதற்குள்ளாக அறையை விட்டு வெளியேறிவிடவேண்டும் என்று திட்டமிட்டிருந்தான். ஆனுல் அவளோ எதிர்பாராதவிதமாக வந்து சேர்ந்து விட்டாள். இல்லையேல் அவளுக்கு நீண்டதொரு கடிதத்தை எழுதி வைத்துவிட்டுத் தன்னுடைய பயணத்தைத் துவங்கி இருப்பான்.

மாங்குயிலை அவன் முகங்கொடுத்துப் பார்த்தபோது அவள் சோகத்தின் ஒரே வாரிசாக நின்றுகொண்டிருந்தாள். அவள் முகத்தில் வெண்மை படர்ந்திருந்தது. அது ஆற்ருமையின் அறிகுறி. அவள் படும் துயரங் கண்டு அவனும் துன்பப்பட்டான். கைகளை நீட்டிக்கொண்டே அவளை அணுகினுன்:

"பேதைப் பெண்ணே! இன்று நான் உன்னை விட்டுப் பிரியப்போகிறேன். நீ கிராமத்திலிருந்து திரும்புவதற்குள்ளாக நான் பயணப்பட்டுவிடலாம் என்று நம்பி இருந்தேன். ஆனுல் எதிர்பாராதவிதமாக வந்து சேர்ந்து விட்டாய். பாதகமில்லை. நடந்துபோன நிகழ்ச்சிகளை மறந்துவிடு. இனி நீ இன்பத்தோடு வாழ முற்படு. உலகத்தில் இன்னும் எத்தனையோ இளைஞர்கள் இருக்கிருர்கள்," என்று அன்பு கனியப் பேசினுன்.

சிறிது நேரம் மௌனமாக நின்ருன். திரும்பவும் பேசினுன்: "என்னை அரசியலார் வெகு தூரத்துக்கு அப்பால் அனுப்புகிருர்கள். நான் அமெரிக்காவுக்குச் செல்லுகிறேன். எனவே என்னை நினைத்துக்கொண்டிருப்பதில் பயனில்லை."

வெகு சிரமப்பட்டு மாங்குயில் பேசினுள்: "நல்ல வேளையாக உங்களோடு ஸ்டேஷன்வரையில் வந்து பயணப்படுத்துவதற்கு வாய்ப்புக் கிடைத்தமைக்கு மகிழ்ச்சி அடைகிறேன்."—அவனைத் திட்டுவதற்கோ குறைகூறுவதற்கோ அவள் தயாராக இல்லை. ஏனெனில் துவக்க காலத்திலேயே எந்த நிலையிலும் பிரியத் தயாராக இருக்கவேண்டும்

என்பதைச் சொல்லிவிட்டான் அல்லவா? எனவே அவனை அவள் எப்படிக் குறைகூற முடியும்?

அவள் உள்ளம் குமுறிக்கொண்டிருந்தது. அவனை அப்படியே விழுங்கிவிடவேண்டும் என்று விரும்பினாள். 'போகக்கூடாது' என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ள எண்ணினாள். மீறிப் போவதாகச் சொன்னால் விரைவில் திரும்பி வந்துவிடவேண்டும் என்று உறுதி பெற்றுக்கொள்ள நாடினாள். இவ்வரும் உள்ளப் போராட்டங்களை தவிர, அவளால் ஒரு வார்த்தைகூடப் பேச இயலவில்லை. அவன் பயணத்துக்குத் துரிதப்பட்டுக் கொண்டிருந்தான். அவள் பயணத்தைத் துரிதப்படுத்துபவள்போலத் தோன்றினளே தவிர பயணத்தைத் தடுத்து நிறுத்துபவளாக இல்லை!

இந்த நேரத்தில் அவனுடைய நண்பர்கள் அநேகர் அங்கு வந்து சேர்ந்தனர். எல்லோரும் ஸ்டேஷனுக்குச் சென்றனர். அங்கு நடந்த ஆடலிலும் பாடலிலும் துயரத்தை ஓரளவுக்கு மறந்தாள் மாங்குயில். அவனது பிரிவு அவளை வதைத்துக்கொண்டே இருந்தது. அவனைப் பொறுத்தவரையில் அவளது பிரிவுக்கு அவ்வளவு முக்யத்வம் இல்லை!

ரயில் புறப்பட்டுவிட்டது. மாங்குயில் கையெடுத்துக் கும்பிட்டாள். அவனும் கும்பிட்டான். "நீ கெட்டிக்காரி. அறிவுடையவள். ஆகையினால் நம் தொடர்பை மறந்துவிடு. நீ இனிமேல் என்னை எதிர்பார்க்காதே. உன் வாழ்வை இன்பமயமாக ஆக்கிக்கொள்ள நீ இப்போதே ஆயத்தம் செய்துகொள்," என்பதுதான் அவன் அவளுக்குத் தந்த கடைசி அறிவுரை!

ரயில் புறப்பட்டுப் போய்விட்டது. பிரிந்து சென்ற மருத்துவ இளைஞனின் நண்பன் ஒருவன் மாங்குயிலை அழைத்துக்கொண்டு நடக்கலானான். அவனும் மருத்துவ மாணவனே! பதினைந்து நிமிடங்கள் இருவரும் ஒருவரோடொருவர் கைகோர்த்துக் கொண்டே நடந்தனர். அவன் அவளிடம் ஏதேதோ சொன்னான். அவள் அவற்றைச் சரியாகக் காது கொடுத்துக் கேட்கவே இல்லை. ஆனால் அவனே சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்

கொண்டிருந்தான். அவன் சொன்னதின் சாரம் இதுதான்: அவளை அவன் மணந்துகொள்ள விரும்பினான்.

உள்ளத்தில் வேதனை பொங்கி வழிந்தமையால் காதலுக்கு இடம் கிடைக்கவில்லை. எப்படியோ சமாளித்துக் கொண்டு தங்கி இருந்த ஓட்டலுக்கு வந்து சேர்ந்தாள்.

கணவனை இழந்த மனைவி எந்த விதத்தில் கவலைப்படுவாளோ, அதேபோன்று மாங்குயிலும் கவலைப்பட்டாள். மிருகத் தனமாக நடந்துகொள்ள விரும்பிய இரண்டாவது இளைஞனின் தொடர்பு அவளது மனக் கலக்கத்தைப் பன்மடங்காகப் பெருக்கிவிட்டது. வருபவர்களுக்கெல்லாம் வழியைத் திறந்து காட்டிச் சிறிது நேரம் அடைபட்டுக் கிடக்கும் கதவு, வந்தவர்கள் போனபின்பு அடுத்து வருபவர்களை எதிர்பார்த்துத் திறந்து கிடப்பதுபோல மாங்குயில் முதற் காதலுக்கு வரவு கூறி பிரிவு கொடுத்தனுப்பிவிட்ட பின்னர், அடுத்தவனுக்கு வரவு கூறத் தயாராக இருப்பது தான் நல்லது என்று பலரும் கருதக்கூடும்.

உள்ளம் கவர்ந்தவனின் ஆசைக்கு அர்ப்பணித்துவிட்ட தன் உடலை, இனி அன்னியனுக்கு எப்படித் தரமுடியும் என்பதை எண்ணும்போது அவளது ஏக்கம் பேரளவாகப் பெருகிவிட்டது. காதலன் போய்விட்டானே தவிர அவன் உண்டுபண்ணிய களங்கமுமா போய்விடும்? அவன் இட்டுச் சென்ற ஒவ்வொரு முத்தமும் அனலாக மாறி அவளை வருத்திக்கொண்டே இருந்தன. அவள் ஒரு விதவையைப் போல வாழ்ந்து வந்தாள். வேற்று மனிதர்களை அவள் விரும்பிப் பார்க்கவே இல்லை. அடுத்தவனை ஆதரிப்பது என்றால் தன்னை வேசியாக மாற்றிக்கொள்ளுவது என்றுதான் பொருள் என அவள் எண்ணினாள். எனவே அவளது வாழ்வில் வேறொரு ஆடவனுக்கு இடமே கிடையாது. இடம் கொடுக்கவும் அவள் விரும்பவில்லை.

ஜோடியாக வாழ்ந்துவந்த ஒரு இடத்தில், ஜோடியாக இருந்தவனை இழந்துவிட்டு அவனை நினைத்துக்கொண்டே தனியாக வாழ்வது தாங்கொணாத துயரத்தைத் தரக்கூடியது என்பதை அனுபவத்தால் அறிந்துகொண்ட மாங்குயில் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு அருகில்

இருந்த சிறிய ஓட்டலுக்குச் சென்று விட்டாள். யாருமே நெருங்க முடியாதபடி தனிமையாக அவ்விடத்தில் இரண்டு மாதங்கள் வசித்து வந்தாள்.

ஏதாயினும் ஒரு கன்னிகள் மடத்தை அண்டிக் காலத்தையும் பொழுதையும் போக்கிவிடலாமா என்பது குறித்துத் தீவிரமாகச் சிந்தனை செய்தாள். ஆனால் கன்னிகா மடத்தை அடைவதற்குரிய தகுதிகள் சில அவளிடம் குறைவாக இருந்தன என்பதை எண்ணுகையில் அவள் சிறிது கவலைப்படவே செய்தாள்.

இந்த நேரத்தில்தான் மாணிக்கம் அவளைச் சந்தித்தான். இருவரும் பாண்டி நகருக்கு இரயிலில் பிரயாணம் புறப்பட்டனர்!

# 3

தெற்குப் பிரதேசத்தில் வெற்றியூர் என்று ஒரு சிறு நகரம் பிரபலமாக விளங்கிவந்தது. அந்நகரின் ஜனத் தொகை ஏறத்தாழ பத்தாயிரமாகும். நகரத்து வீதிகள் அமைதியாகவும் அழகாகவும் இருந்துவந்தன. அந்நகரத்தி லிருந்து ரயில் மூலம் பிரயாணம் செய்யவேண்டுமென்று விரும்புகிறவர்கள் ஐந்துமைல் தூரம் ரோட்டுப் பாதை யாக வந்து மானூர் என்ற இடத்திலிருந்துதான் ரயில் ஏற முடியும்.

அந்நகரத்தைச் சுற்றி வளமான வயல்கள் விளங்கின. கானுற்று நதிக்கரையை நோக்கி ஒரு சிற்ருறு ஓடிக்கொண் டிருந்தது. அவ்வாற்றங் கரைகளில் வளர்ந்து அடர்ந்து பல மரங்கள் நின்றன.

இந்த மாதிரியான நிலப் பரப்புக்களுக்கிடையே விளங் கிய வெற்றியூர் என்ற நகரத்தில்தான் மாணிக்கம் பிறந் தான். அவனது தந்தை விண்ணூர் என்ற பகுதியின் ஜமீன்தாராகும். அந்த ஜமீன்தார் பதவிக்கு பரம்பரை யாகவே அவர்களின் குடும்பம்தான் வாரிசாக விளங்கிவந் தது. அவர் மலேயா தேசத்தில் பிறந்து வளர்ந்தவர், மலேயாவிலிருந்து நாடு பெயர்ந்து இந்திய தேசத்திற்குள் நுழையும்போது அவரும் இந்திய தேசத்துக்குள் குடியேறி இந்தியராக மாறிவிட்டார்.

தட்டுமுட்டுச் சாமான்களுடன் தட்டுத் தடுமாறி இந் திய தேசத்திற்குள் வந்து காலடி எடுத்துவைத்ததும் மாணிக்கத்தைப் பெற்றுத் தந்துவிட்டு அவனுடைய தாயார் அகால மரணம் எய்துவிட்டாள்.

இந்திய தேசத்தினுள் நுழையும்போது மாணிக்கத்தின் தந்தை இளைஞராகவே இருந்தார். பார்ப்பதற்கு அவர் வாட்ட சாட்டமாகவும் வற்ருத உற்சாகம் உடையவராக

வும் விளங்கினர். மலேயா தேசத்தில் அயராது உழைத்துப் பாடுபட்டதைப்போல இந்திய தேசத்தில் பாடுபட்டு உழைப்பதற்கு வாய்ப்பு இல்லாததினால் அவர் சோம்பேறித்தனமான வாழ்க்கையை நடத்தி வரலானர். உடன் வாழ்ந்துவரும் ஊர் மக்களோடு அவர் நெருங்கிப் பழக விருப்பப்படவில்லை. தான் உண்டு தன் வேலையுண்டு என்று தன் வீட்டிற்குள்ளேயே இருந்து விடுவார். மீன் பிடிப்பதிலும் வேட்டையாடுவதிலும் அவருக்கு விருப்பம் அதிகம். சிந்தனைக்கு ஏதாவது வேலை தரவேண்டும் என்று ஏங்கித் தவித்துக்கொண்டிருந்த அவர், வீட்டிற்குள் இருக்கும்போது இரசாயன ஆராய்ச்சியில் ஈடுபடலானர். இவருடைய தனித்த மனப்பான்மையையும் தளராத அறிவு ஓட்டத்தையும் கண்ட ஊர் மக்கள், இவரை ஒரு அதிசயப் பிறவி என்றே அழைத்து வந்தனர். நாட்டியமாடுவதற்காக ஒதுக்கப்பட்டிருந்த நல்லதொரு மாளிகையை விலைக்கு வாங்கி, இரசாயன ஆராய்ச்சிக்குரிய பண்டம் பாத்திரங்களால் நிரப்பிவிட்டார்.

அவர் ஆராய்ச்சி நடத்திக்கொண்டிருந்த அந்த மாளிகைக்குப் பெயர் 'அறிவகம்' என்பதாகும். வெற்றியூர் நகரத்திலிருந்து ஐந்து நிமிடங்கள் நடந்தால் ஆராய்ச்சி மாளிகையை அடைந்துவிடலாமென்ருலுங்கூட அந்த ஆராய்ச்சியாளரை (அபூர்வப் பிறவியை) காண்பதற்கு ஆயிரம் மைல் நடந்து முடிப்பதற்குரிய காலம் வரையிலும் காத்திருக்கவேண்டி நேரிடும். ஏனெனில் அவர் பார்வைக்கு அரியவராகவே வாழ்ந்து வந்தார். மணிக்கணக்காக, ஏன் நாள் கணக்காகக்கூட அந்த மாளிகையின் கதவை அவர் திறந்து வேலைக்காரர்களைக்கூட உள்ளே வருவதற்கு அனுமதிப்பதில்லை. உணவைக்கூட மறந்துவிட்டு ஒரேயடியாக ஆராய்ச்சியில் ஈடுபட்டு விடுவார்.

அவருடைய இந்தக் கட்டுப் பெட்டியான வாழ்க்கை முறைக்கு நெடுநாட்களுக்கப்புறம் ஒரு நாள் கஷ்டம் ஒன்று வந்து சேர்ந்தது. வெற்றியூர் நகரத்து வாசியான ஒரு பெண் எதிர்பாராத விதமாக அவரது ஆராய்ச்சிச் சாலைக்குள் நுழைந்துவிட்டாள். அவள் அழகும் இளமையும் பொருந்தியவளாகும். அவளது கணவன் வாழ்க்கையில் வெற்றி என்பதையே அறியாத ஒரு வக்கீல் ஆவான்.

தன்னையும் தன் கணவனையும் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணத்தினாலேயே அவள் விண்ணூர் ஜமீந்தாரை அணுகி, அவரது செல்வத்தைக் கொள்ளையிட்டுச் செல்ல வேண்டும் என்ற கருத்தோடுதான் அவள் அந்த மாளிகைக்குள் நுழைந்தாள். அப்போது அந்த ஜமீன்தாருக்கு வயது நாற்பது. அவர் மனைவியை இழந்து ஒண்டிக் கட்டையாக வாழ்ந்து வந்தார். அவருக்கு உற்றார் உற வினரைக் காண நேரிட்டால் ஒரே வெறுப்பாக இருந்தது.

இந்தச் சூழ்நிலையில் அழகும் இளமையும் ததும்பிய ஓர் பெண்ணைப் பார்த்ததும் அவருக்குச் சபலம் தட்டத் துவங்கிவிட்டது. குடும்ப சுகத்தைத் திரும்பவும் பெற ஆசைப்படலானார். ஊரார் தூற்றுவரே என்பதைக் கூட பொருட்படுத்தாமல் அவர் அந்தப் பெண்ணோடு அளவளாவத் துவங்கிவிட்டார். ஊர் முழுவதும் ஒரே பேச்சு. அவரது விபரீதமான குடும்ப விவகாரத்தைச் சுட்டிக்காட்டி ஊர் மக்கள் கேலி பேசினர். ஒருமுறை அவர் அவளோடு கைகோர்த்துக் கொண்டு ஊருக்குள் நடந்து வரும்போது சில விஷமக்காரர்கள் கல்லால் எறிந்து கஷ்டப்படுத்தி விட்டார்கள்.

ஊரார் மத்தியில் தன் கௌரவம் குறையாடப் படக்கூடாது எனப் பயந்த அந்த ஜமீன்தார், தனது கள்ளக் காதலை ரகசியமாகவே வைத்துக் கொண்டார். இந்த ரகசியக் கள்ளக் காதல் ஏறத்தாழ இரண்டாண்டுகள் இனிய முறையில் வளர்ந்து வந்தது. இரண்டாவது ஆண்டின் இறுதியில் அவள் ஒரு பிள்ளையைப் பெற்றுத் தந்து, அவரை அப் பிள்ளையின் தந்தையாகவும் ஆக்கிவிட்டாள். 'அறிவகத்தில்' அப் பிள்ளை வளர்ந்தது.

சில மாதங்கள் சென்றதற்குப்பின் அவள் ஜமீன்தாரின் ஆராய்ச்சி நிரம்பிய வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு, பாழ்பட்டு நின்ற தன் பழையகணவனைத் தேடிக் கொண்டு, ஓடிவிட்டாள். ஓடும்போது பிள்ளையை பிள்ளையின் தந்தையிடமே ஒப்புவித்து விட்டாள். நடந்ததை யெல்லாம் மறந்து விட்டு ஏதோ நெடும் பயணம் சென்று திரும்பியதைப் போல நினைத்துக் கொண்டு, வக்கீலும் தன் மனைவியை ஆசையோடு ஏற்றுக்கொண்டுவிட்டான்.

ஓடிப்போனவளைப்பற்றிக் கொஞ்சங்கூட அக்கறை எடுத்துக் கொள்ளாமல் எப்பவும்போல வாழ்ந்து வரலானார் ஜமீன்தார். ஓடிப்போனவள் திரும்பி வந்து தன் கணவனை அடைந்த நாள் ஞாயிற்றுக்கிழமையாகும். ஞாயிற்றுக்கிழமைகளில் குடும்ப சகிதமாக கடற்கரைக்கு சென்றுவருவது வக்கீலுடைய வழக்கம். அவ் வழக்கத்தையொட்டி வக்கீலும் அவரது வழிதவறிய மனைவியும், கையோடு கை கோர்த்துக் கொண்டு ஊராரின் வியப்புக்கு இலக்காகி, கடற்கரைக்குச் சென்று மனதார மகிழ்ச்சியை அனுபவித்துவிட்டு வீடு திரும்பினர். இதன் பிறகு ஏறத்தாழ இருபது ஆண்டுகள் வாழ்க்கைத் தேரை வளமான முறையில் நடத்தி வந்தனர். இருபது ஆண்டுகளுக்கப்புறம் வக்கீலின் மனைவி இறந்துபோகவே, வக்கீல்மட்டும் தனித்து வாழ்ந்து வந்தார். ஊர் மக்களோ ஓயாமல் ஒழியாமல் அவர்களைப்பற்றி கேலியும் கிண்டலுமே செய்துவந்தார்கள்.

தன்னந்தனியாக விடப்பட்ட கைக் குழந்தைக்கு ஒரு தாதியை நியமித்து வளர்த்து வர ஏற்பாடு செய்திருந்தார் ஜமீன்தார். உடல் அழகு ஒன்றின் காரணமாகவே அக் குழந்தையின் தாயிடத்தில் பாசங் கொண்டிருந்த ஜமீன்தார், ஊர் பழிக்கு அஞ்சி அக் குழந்தைக்கு ஏதோ உதவி செய்ய முன் வந்தாரே தவிர, உள்ளத்தால் அபிமானம் அற்றவராகவே விளங்கினார். தான் செய்த அருவெறுக்கத் தக்க காதல் லீலைகளின் நினைவுச் சின்னமாக அக்குழந்தை வளர்ந்து வருவதை அவர் விரும்பவில்லை.

வேண்டா வெறுப்புக்களிடையே அக் குழந்தை வளர்ந்து பெரியவனாகிக் கொண்டிருந்தது. தாய் வாழ்ந்து வீழ்ந்த காட்சியை அக் குழந்தை அறியவே இல்லை. அக் குழந்தையின் பெயர்தான் மாணிக்கம்.

மாணிக்கம் தன் தாய் என்று ஒரு வயதான கிழவியையே நம்பி இருந்தான். அவள் அவனுடைய தந்தையோடு மலேயா தேசத்திலிருந்து இந்திய தேசத்திற்குக் குடியேறிய ஒரு வேலைக்காரியாகும். அவள் ஒரு மலை தேசத்துப் பிறவியாவாள். ஆழ்ந்த மதப்பற்றும் அசைக்க முடியாத தெய்வப் பற்றும் கொண்டு விளங்கினாள். பார்ப்பதற்கு பயங்கரமான தோற்றமுடையவளாக இருப்பாள்.

மாய ஜாலக்காரிமாதிரி அவள் இந்த வீட்டிலே வாழ்ந்து வரலானாள். அவளிடம் எப்போதும் ஒரு பைபிள் புத்தகம் கையில் இருக்கும். அது தோலால் மூடப்பட்டு இரும்புச் சட்டங்களால் கட்டடம் செய்யப்பட்ட சிறந்த புத்தகமாகும். அதனைக் கையில் எடுத்துக் கொண்டுதான் அவள் எங்கும் போய் வருவாள். உரத்த, விகாரமான குரலில் அவள் அதில் உள்ள வாசகங்களைப் பலரும் கேட்கும்படியாகப் படித்துக் கொண்டே இருப்பாள். தன் தாயார் விட்டுச் சென்ற புனிதமான சொத்துக்களில் அந்தக் கிழவியும் ஒருத்தி என்ற நம்பிக்கையில் ஜமீன்தார் அந்தக் கிழவியைக் கண்ணுங் கருத்துமாகப் போற்றி வந்தார்.

'அறிவகம்' என்ற அந்த மாளிகைக்கு அக் கிழவிதான் பூரணவல்லமை பொருந்திய எஜமானியாவாள். அந்தஸ்த்தால் வேலைக்காரியாக இருந்தாளே தவிர, நடை உடை பாவனைகளில் எஜமானியைப்போலவே தோன்றினாள். அவளுக்கு வயது எழுபது நடந்துகொண்டிருந்தது. இட்ட கட்டளையை எடுத்து நிறைவேற்றுவதற்கு ஏராளமான வேலையாட்கள் காத்திருந்தபோதிலும்கூட அவள் அதிகாலையில் எழுந்து கஷ்டமான வேலைகள் அனைத்தையும் தானே செய்துமுடித்துவிடுவாள். எஜமானன் விநோதமான முறையில் விஞ்ஞானத்தில் ஈடுபட்டிருந்ததுதான் அவளுக்கு வாழ்க்கையில் உள்ள ஒரு பெரும் வருத்தமாகும். பயங்கரமான தேவதைகளைக் கட்டுப்படுத்துகிற காரியத்தில் அவர் ஈடுபட்டிருக்கிறார் என்றே அவள் நம்பிவந்தாள். அவரது ஆராய்ச்சிச்சாலைக்குள் அவள் ஒரு முறைகூட நுழைந்தது கிடையாது. ஒருமுறை ஜமீன்தாரிடம் சென்று, "ஐயா இந்த ஆராய்ச்சியை விட்டுவிடுங்கள். கடவுள்பற்று மிகுந்த உங்கள் தாயாரின்மீது ஆணையாகக் கூறுகிறேன். நீங்கள் ஏதாவது நல்லகாரியத்தில் ஈடுபட்டு, கடவுளின் அனுக்கிரகத்தைத் தேட முற்படுங்கள்," என்று பணிவோடு கேட்டுக்கொண்டாள். அதற்கு அவர், "ஆகட்டும், என் இறுதிக்காலம் இறைவனுக்கு உகந்ததாகவே இருக்கும்," என்று பதில் கூறிவிட்டார்.

அதிலிருந்து அக்கிழவி ஜமீன்தாரின் நல் வாழ்வுக்காக நாள்தோறும் பிரார்த்தனைசெய்து வரலானாள். ஜெனி வீ வீ என்பதுதான் அக் கிழவியின் பெயர். வக்கீல் மனைவியுடன்

ஜமீன்தார் நடத்திய சல்லாபத்தைக்கண்டு, அவள் அடைந்த சஞ்சலத்திற்கு அளவே கிடையாது. பழிக்குப் பழி வாங்கும் படலத்தில் பகவான் இறங்கிவிட்டான் என்று பயந்து நடுங்கினாள். ஒருமுறை ஜமீன்தாரிடம்போய், "தூய்மையற்ற உங்கள் கள்ளக் காதலியோடு நான் வாழமுடியாது. ஒன்று அவளை விட்டுவிடுங்கள்; இல்லையேல் என்னை மறந்து விடுங்கள்" என்று கேட்டுக்கொண்டாள். காம மயக்கத்தில் மூழ்கிக் கிடந்த ஜமீன்தார். அக்கிழவியின் கேள்விக்குப் பதிலே தரவில்லை. எனவே சிற்றமடைந்த கிழவி, மாளிகையை விட்டுவிட்டு ஊர் ஒதுப்புறமாக இருந்த ஒரு சிறு குடிசை வீட்டுக்குக் குடியேறிவிட்டாள். வக்கீலின் மனைவி ஜமீன்தாரை விட்டுப் பிரிந்து சென்ற காலம்வரையிலும்-அதாவது ஏறத்தாழ இரண்டாண்டுகள் முழுதும்-அக்கிழவி ஆராய்ச்சி மாளிகைக்குள் அடியெடுத்து வைக்கவேயில்லை.

களங்கம் நிறைந்த தன் வாழ்க்கைக்கு ஒரு விடிவு காலம் ஏற்படவேண்டுமானால், வீட்டிற்குள் காலடி எடுத்து வைக்கும்படி ஜெனிவீவீயைக் கேட்டுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினார் ஜமீன்தார். ஒரு தடவை அவரும் அவரது கள்ளக் காதலியும் தோட்டத்தினுள் உலாவிக் கொண்டு வரும்போது, ஜெனிவீவீ பைபிளை உரக்கப் படித்துக்கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டார்கள். அக்கிரமத்தின் சின்னமாக விளங்கிய அவர்களைக் கண்ணுற்றதும், அடங்காத கோபங்கொண்ட ஜெனிவீவீ ஒரு பெரும் கல்லை எடுத்து வக்கீலின் மனைவியின் காலை ஒடிக்க எத்தனித்தாள். நல்ல வேளையாகத் தப்பி ஓடிவிட்டார்கள் அக் கள்ளக் காதலர்கள். இனியும் இங்கிருத்தல் ஆபத்து, என்ற நினைப்பிலும், ஆராய்ச்சி நிறைந்த வாழ்வில் ஏற்பட்ட அலுப்பிலும் சிரமப்பட்ட வக்கீலின் மனைவி அதற்கப்புறம் சில நாட்களுக்குள்ளாக அவ்விடத்தை விட்டே வெளியேறி விட்டாள்.

கள்ளக்காதலி ஜமீன்தாரை விட்டுவிட்டு ஓடிவிட்டாளென்ற பேச்சு ஊர் முழுவதும் பரவிவிடவே ஜெனிவீவீ ஊரின் ஒதுப்புறமாக வாழ்ந்துவந்த குடிசையை விட்டுவிட்டு, 'அறிவகம்' என்ற மாளிகைக்கு வந்துசேர்ந்தாள். புதிதாக வளர்ந்துகொண்டிருந்த பிள்ளையைத் தவிர அம் மாளிகையில் எவ்வித மாறுதலும் ஏற்படவேயில்லை.

அச்சிறு குழந்தையைப் பயங்கரப் பக்தியுடன் அவள் கண்காணித்து வந்தாள். பாவத்தின் சின்னம் அக் குழந்தை என்பது அக் கிழவியின் கருத்து. அக் குழந்தை அவ் வீட்டில் வளரும் வரையிலும் அவ் வீட்டிற்கு விமோசனமே கிடையாது என்பது அவளது மற்ருெரு அபிப்ராயம்.

இங்ஙனம் அக் குழந்தையிடம் ஆத்திரமும் அவநம்பிக்கையும்கொண்டு வாழ்ந்துவந்த ஜெனி வீ வீ அக்குழந்தையின்பால் ஒழுகும் முகத்தையும், பசுமை துள்ளும் சிரிப்பையும் பார்த்தவுடன் மனம் இளகி பச்சாதாபங் கொண்டு, அக் குழந்தையைக் காப்பாற்ற வேண்டுமென்று மனமாற்றம் கொண்டுவிடுவாள். நாள் ஆக ஆக அவள் அக் குழந்தையின் வாழ்வில் அக்கரையும் அனுதாபமும் காட்டத் துவங்கிவிட்டாள். சுருக்கமாகச் சொன்னல், ஒரு குழந்தைக்குத் தேவைப்படும் தாயன்பையும் உபசரிப்பையும் தருவதற்குரிய மனப் பக்குவத்தை ஜெனி வீ வீ பெற்றுவிட்டாள். பையப் பைய அக் குழந்தையை தன் குழந்தையைப்போலப் பாவித்து அக்குழந்தையின் வளர்ப்புக்காக நியமிக்கப்பட்ட தாதியையும் வெளியே அனுப்பிவிட்டாள். அக்குழந்தையைப் பொருத்தவரையில் அவள்தான் தாய், தந்தை, சகலமும்!

குடும்ப நடப்பு விவகாரங்களில் அலுப்படைந்துவிட்ட ஜமீன்தார், ஜெனி வீ வீ எதுசெய்தாலும் சரி என்று ஒப்புக்கொள்ளுகிற அளவுக்குப் பணிவுடையவராக மாறிவிட்டார். தன்னுடைய பிள்ளைக்கு அவள் என்னென்ன செய்துதர வேண்டுமென்று விரும்புகிருளோ அதை எல்லாம் செய்து கொள்ளுதற்குரிய பொருளையும் பொறுப்பையும் அவளிடமே ஒப்புவித்துவிட்டார். அக் குழந்தைக்குச் சரியாக எட்டு ஆண்டுகள் முடிவடையும் காலம்வரையிலும் அக் கிழவியே குழந்தையைச் சீரான முறையில் பராமரித்து வந்தாள். குழந்தை பெரியவனகி, மாணிக்கம் என்று பெயரிடப்பட்டுச் சுற்றி இருந்தவர்களால் அழைக்கப்பட்ட நேரத்தில், அக் குழந்தைக்கு ஜெனி வீ வீ ஒருத்தியே கண் கண்ட தெய்வமாகக் காட்சியளித்து வந்தாள்!

மாணிக்கத்திற்கு ஏழு வயது நிரம்பிய உடனேயே தன்னிடமிருந்த புனிதமான பைபிளிலிருந்த கருத்துக்களை

யெல்லாம் போதிக்கத் துவங்கிவிட்டாள். ஆனல் மாணிக்கமோ அந்தப் புத்தகத்தைப் பார்த்த அளவிலேயே பயந்து நடுங்கிவிட்டான். வயது நிறைந்த மனிதர்களாலேயே பின்பற்றி நடக்க முடியாத மதக் கருத்துக்களால் தாக்கப்பட்டு, வயது குறைந்த மாணிக்கம் வாடி வதங்கினுன். நன்கு உறங்கிக்கொண்டிருக்கும்போது ஆண்டவன் உருவத்தைக் கனவிலே கண்டு அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்து விடுவான் சில சமயங்களில். இன்னும் பல சமயங்களில், "ஆண்டவனே, இறைவனே," என்று தனக்குள்ளாகக் கூறிக்கொண்டு பயந்து செத்துக்கொண்டிருந்தான். சிரிப்பதற்கும் விளையாடுவதற்குங்கூட சரிவரப் பக்குவப்படாத வயதில் கடவுளைப்பற்றிச் சிந்திப்பதில் மாணிக்கம் ஈடுபட்டுவிட்டான்.

'அறிவகம்' என்ற அந்த மாளிகை நான்கு அடுக்குகளைக்கொண்ட பெரியதொரு கட்டிடமாகும். அதில் ஆராய்ச்சிச் சாலையாகப் பயன்படுத்தப்பட்ட சிறுபகுதியைத் தவிர ஏனையப் பகுதிகளை எல்லாம் பேணிப் பாதுகாத்துக் கொள்ளவேண்டுமென்ற அக்கரையே இல்லாமல் வாழ்ந்து வந்தார் ஜமீன்தார். வேலைக்காரர்களுக்கும்கூட அதைப் பற்றி அக்கரையே கிடையாது. மூடிக்கிடந்த வீட்டிற்குள் சிறியவனுகிய மாணிக்கமும் நுழைவதற்கு அஞ்சவே செய்தான். பிறந்ததிலிருந்து முதல் ஐந்தாண்டுகள் ஜமீந்தாரின் கண்களில் படாமலேயே மாணிக்கம் வளர்ந்து வந்தான் அந்த மாளிகையில். தனக்கென ஒரு பிள்ளை இங்கு வளர்ந்து வருகின்ருன் என்கின்ற எண்ணமே இல்லாத முறையில்தான் ஜமீன்தாரும் வாழ்ந்து வந்தார். மாணிக்கம் தன்னுடைய வாரிசு என்பதை ஊரார் ஒப்புக்கொண்டாலுங்கூட ஜமீன்தார் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. ஊர் பேர் தெரியாத அனுதையைப் போலவே அவனை அவர் எண்ணி வந்தார்.

அவரோடு பழகிய பலரும் மாணிக்கத்தை வாரிசாக எடுத்துக்கொள்ளுவதுதான் நல்லது என்று இடித்துச் சொல்லிய பிறகு, அவர் அவர்களிடம் தாம் பிறிதொரு சமயம் அது குறித்துக் கவனித்துக்கொள்ளப் போவதாகச் சொல்லிவிட்டார்.

ஒருமுறை ஜெனி வீ வீ மாணிக்கத்தை இடுப்பில் தூக்கிக்கொண்டு தோட்டத்தில் சுற்றி வருவதைப் பார்க்கலானார். ஐந்தாண்டுகளுக்குள்ளாக அச்சிறு குழந்தை எவ்வளவு அழகிய முறையில் வளர்ந்திருக்கிறதென்று அவரே ஆச்சரியப்பட்டுவிட்டார். அக் குழந்தையை அவளிடமிருந்து தான் தன் இரு கைகளாலும் வாங்கிக்கொண்டு கண் அளவுக்குத் தூக்கிக் கனிவோடு மேலும் கீழும் பார்த்தார். ஜமீன்தாரின் தாயாருடைய முகத்தை அச் சிறு குழந்தை பிரதிபலித்துக் காட்டியது. உள்ளத்தில் ஒருவித நல்லுணர்ச்சி பீறிட்டு எழவே அக்குழந்தையின் நெற்றியில் ஒரு முத்தம் கொடுத்தார் ஜமீந்தார்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அந்தக் குழந்தையை எங்கு கண்டாலும் முத்தம் கொடுக்கத் தயங்குவதில்லை. அவர் பிள்ளையினிடத்து ஆவலோடு நெருங்க நெருங்க, பிள்ளையோ அவரைக் கண்டு வெறுப்போடு ஒதுங்கிக்கொண்டே இருந்தான். வழியில் தந்தையாரைக் கண்டால் தப்பியோட மார்க்கம் இருக்குமாயின் தப்பியோடி விடுவான். ஆக அவனுடைய வெறுப்புக்கும் பயத்துக்கும் ஆளாக விளங்கினார் ஜமீன்தார்.

எப்படியோ கண்ணுப்பின்னுவென்று வெறுப்புக்கும் பயத்துக்கும் ஊடாக எட்டாவது பிறந்தநாளை எட்டிப் பிடித்துவிட்டான் மாணிக்கம். இனியும் அவனைப் படியாத பிள்ளையாக வளர்த்துவருவது தகாத செயலாகும் என்று உணர்ந்த ஜமீன்தார், அவனை வெற்றியூர் நகரில் இருந்த ஒரு பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி, அங்கேயே தங்கி இருப்பதற்குரிய வசதிகள் அனைத்தும் செய்துதர முன்வந்தார்.

மாணிக்கத்திற்குப் பள்ளி வாழ்வு ஒரு புரியாத புதிரா இருந்துவந்தது. பிறந்த நாளிலிருந்து தனியாகவே வாழ்ந்துவந்த அவனுக்குத் தன்னையொத்த மாணவர்களின் சூழ்நிலை தவிர்க்கமுடியாததொரு சங்கடத்தையே தரலாயிற்று. கூண்டில் அடைக்கப்பட்ட குருவியைப்போல தான் பள்ளியில் அடைபட்டுக் கிடப்பதாக எண்ணினான் அவன். எவ்விதக் குற்றமும் செய்யாத தன்னை, குற்றவாளியாக்கிக் கூண்டிலடைத்துவிட்டார்கள் என்று மனம் குமுறினான் அவன். . மொத்தத்தில் பள்ளி வாழ்க்கை

அவனுக்குச் சிறை வாழ்க்கையாகத் தோன்றியது. அனுதைப் பிள்ளையை அடையாளம் தெரியாத இடத்தில் அடைத்துவைத்து ஆதரவு தருவதுபோல நடித்துவந்த ஜமீன்தாரை அவ்வூர் மக்கள் கண்டபடி ஏசினர்கள். ஜமீன்தாரின் போக்கு அவ்வளவு நல்லதல்ல என்ற கருத்து அவ்வூர் மக்களிடையே வேரூன்றிவிட்டது. என்ன இருந்தாலும் மாணிக்கத்தைத் தன் வாரிசாக ஜமீன்தார் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும் என்ற எண்ணம் வலுப்பெறலாயிற்று.

பள்ளியில் பயந்து ஒடுங்கி வாழ்ந்துவந்த மாணிக்கத்தைப் பற்றிய கதையை ஏறத்தாழ அப்பள்ளி மாணவர்கள் அனைவருமே அறிந்திருந்தார்கள். அப்பன் பேர் தெரியாத ஓர் அனுதை தங்களோடு சமமாக இருந்து கல்வி கற்பதை அப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள்கூட விரும்பவில்லை. விரும்பாத காரணத்தால் அவ்விளைஞனை அவர்கள் அனைவரும் ஒன்றுகூடிக் கேலி செய்து வேதனைக்கு ஆளாக்கி வந்தார்கள். இதைத் தடுத்து நிறுத்துவதற்குப் பிள்ளைகளைப் பெற்ற பெற்றேர்களோ, அல்லது பிள்ளைகளைக் கண்காணிக்கும் ஆசிரியர்களோ முன்வரத் தயாராக இல்லை.

மாணிக்கம் ஒருநாள் விளையாட்டு நேரத்தின்போது தனியே உட்கார்ந்தபடி ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான். அப்போது இரண்டு முரட்டு மாணவர்கள் அவனை நெருங்கி, "உன் பெயர் என்ன?" என்று கேட்டார்கள். "என் பெயர் மாணிக்கம்," என்ருன் அந்தப் பயந்தாங்கொள்ளி பையன். "இல்லை, உன் பெயர் மாணிக்கம் இல்லை", என்ருன் வந்த இரண்டு முரடர்களுள் ஒருவன். மற்ருெருவன், "உன் பெயர் அப்பனில்லா அனுதை," என்று உரத்துக் கத்தினுன்.

செய்வது என்னவென்றறியாத மாணிக்கம், தன் நிலை குறித்துத் தானே வெட்கப்பட்டுக் கொண்டு கண்ணீரை ஆருகப் பெருக்கி நின்ருன். ஜாதியில் இருந்து தள்ளிவைக்கப்பட்டவன் எந்தவிதமான துன்பங்களுக்கு ஆளாவானே, அந்த விதமான துன்பங்களுக்கு ஆளாகி நின்ருன் மாணிக்கம். துன்பத்தில் மூழ்கி நின்ற அவனைக்

கரை சேர்ப்பதற்கு அவனது ஆசிரியர்கள்கூட முன் வர வில்லை போதாக்குறைக்கு அவர்களும் அவனுக்கு அதிகப் படியான துன்பச் சுமையைக் கொடுத்து வந்தார்கள். அவிழ்த்து விடமுடியாத முடிச்சைப்போல பின்னிச் சிக்கிக்கிடந்தது அவனது வாழ்வு. அடியும் உதையும் ஆபாசமான திட்டுக்களும் அவனைப் படாதபாடு படுத்தி வந்தன. ஆறுதல் தருவதற்கு யாருமே முன் வராத நிலை யில் அவ்விளைஞன் தன்னைச் சங்கடம் துன்புறுத்திய நேரத்திலெல்லாம் படுக்கையில் படுத்துக் கொண்டு அழு வதைத் தவிர வேறு வகை அறியாதவனாக இருந்து வந் தான். சில சமயங்களில் உண்ணாமலும் உறங்காமலும் கூட அழுது கொண்டே இருந்து விடுவான்.

அவனுக்குப் பன்னிரெண்டு ஆண்டுகள் நிறைந்து விட்டன. எதையும் தர்க்க ரீதியாக அறிந்து கொள்ளுகிற ஆற்றலை அடைந்து விட்டான். தன்னை ஏனைய மாணவர் கள் கேலி செய்வதற்கும், தன்னுடைய துன்பத்தைத் துடைப்பதற்கு ஆசிரியர்கள் முன்வராமல் இருப்பதற்கும் அடிப்படையான காரணங்கள் இருக்க வேண்டும் என்பது குறித்துச் சிந்திக்கத் துவங்கிவிட்டான். தன்னைப் பொறுத்தவரையில் தான் தவறான வழிகளில் செல்லுப வன் அல்லன் என்பதை அவன் நன்கு உணருவான். ‘அப் பன் கேடுகளை அவனது பிள்ளைகள் அனுபவித்தே தீர வேண்டும்,’ என்று பைபிளில் இருந்து ஜெனி வீ வீ படித் துச் சொன்ன வாசகம் அவன் கருத்தில் படம் போல நிழ லாடியது. அவ்வாசகத்தின் உட்பொருளை அறியவே அவன் படாத பாடுபடலானான்

தந்தையாரிடம் எதிர் நின்று கேட்டு விளக்கம் பெற முடியாத நிலையில் ஜெனி வீ வீயிடம் சென்று ‘அப்பனில்லா அனாதை’ என்ற சொல்லுக்கு விளக்கம் கேட்டான் அவ்விளைஞன்.

தன்னிடமிருந்து பிரித்து எடுத்துச் செல்லப்பட்ட குழந்தை, பள்ளி மாணவர்களால் படாத வேதனைப்பட்டு வருவதை எண்ணி அவ் வேலைக்காரக் கிழவிகூட வேதனைப் படலானாள். பெற்றெடுத்த தந்தையே பிரியத்தோடு முன் வந்து, செய்யவேண்டிய மதச் சடங்குகளையெல்லாம்

செய்து, சட்டபூர்வமாக மாணிக்கத்தைத் தன் மகனென ஏற்றுக் கொள்ள முன்வராததைக் குறித்து வருந்திய கிழவி, "மாணிக்கத்திற்கு ஆண்டவன்தான் கதி" என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள். மேலும் மேலும் அப்பனில்லா அனாதை என்ற சொல்லுக்குப் பொருள் கேட்டுக் கேட்டு மாணிக்கம் தொந்தரவு செய்ததைப் பொறுக்கமாட்டாத கிழவி, சுற்றி வளைத்துக் கொண்டு பொருள் சொன்னாள். "நீ ஒரு பாவத்தின் சின்னம். உன் அப்பன் செய்த அநியாயத்திற்குரிய அவமானச் சின்னம் உன் உடல்," என்று! மாணிக்கத்திற்குக் கிழவி சொன்னது எதுவுமே விளங்கவில்லை. ஆனால் கிழவி பொருள் சொன்ன தோரணையிலிருந்து இனி அவளிடமிருந்து எவ்வித விளக்கத்தையும் பெற முடியாது என்பதை அவன் தெளிவாகத் தெரிந்து கொண்டான்.

மாணிக்கத்திற்கு வயது பதினைந்தாகி விட்டது. இந்த வயதில் நடந்த ஒரு சம்பவம் வாழ்நாள் முழுதும் அவன் உள்ளத்தில் அணையாத ஓவியமாக அமைந்து விட்டது. ஒரு வரிசைக்கு இரண்டு பையன்கள் வீதம் ஒரு நீண்ட இரட்டைச் சங்கிலித் தொடர்போல பள்ளி மாணவர்கள் அத்தனை பேரும் வெற்றியூர் நகரத்தினுள் கடைவீதி வழியாகச் சென்று கொண்டிருந்தனர். மாணிக்கமும் அந்த வரிசையினுள் சென்று கொண்டிருந்தான். அப்போது அவனுக்கு அடுத்தாற்போல் வந்து கொண்டிருந்த ஒரு மாணவன் அவனது முகத்தை இடித்து, "அதோ பாரடா அனாதைப் பயலே, உன் தாய் போய்க் கொண்டிருக்கிறாள்," என்று இரைந்து சொன்னான், ஒரு பெண் ஒரு ஆடவனோடு கையோடு கைகோர்த்து நடந்து கொண்டிருந்தாள். அந்த ஆடவன் குட்டையாகவும், தாட்டியாகவும் இருந்தான். மாணிக்கம் அவர்களைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான். அந்தத் தம்பதிகள் எதையுமே லட்சியம் செய்யாமல் அங்கிருந்து போய் விட்டார்கள்.

மாணவர்களிடையே ஒரு பெரும் குழப்பம் ஏற்பட்டு விட்டது. மாணிக்கத்தை நோக்கி எல்லோரும் கேலி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அரிவாளால் வெட்டுண்டவன் போல அவன் வேதனையோடு நடந்து கொண்டிருந்தான். பெற்றெடுத்த தாயின் தோற்றம் அவன்

உள்ளத்தில் பெரியதொரு வேதனையை உண்டுபண்ணி விட்டது. கட்டிய கணவனைக் கைவிட்டுவிட்டு கள்ளக் காதலனோடு சில காலம் வாழ்ந்திருந்து, திரும்பவும் கட்டிய கணவனையே ஒட்டி வாழ முற்படுகின்ற பெண்ணின் மனப்பண்பையும், மனைவி செய்த தவறுகளை மறந்து விட்டுத் திரும்பவும் மகிழ்ச்சியோடு வாழ்கின்ற கணவனின் மனப்போக்கையும் மாணிக்கம் நினைத்து நினைத்து நிலை தடுமாறிக் கொண்டிருந்தான். இப்படியாக அன்றைய ஊர்வலம் முடிவுக்கு வந்தது. பள்ளிப் பருவத்தில் மாணிக்கத்தோடு நெருங்கிப் பழகிய ஒரே ஒரு நண்பன் சங்கரன் என்பவன் ஆவன். அவன் அப்பொழுதுதான் அந்தப் பள்ளிக்கூடத்திற்கு வந்து சேர்ந்திருந்தான். ஆள் உயரமாகவும், வலுவுள்ள தேகக் கட்டோடும், வனப்பு மிக்க அமைப்போடும் விளங்கினான். அவனுக்குப் பதினெட்டு, அல்லது பத்தொன்பது வயது இருக்கலாம். அவன் சித்தப்பா வெற்றியூர் நகரத்தில் ஒரு பிரபலமான வக்கீலாக விளங்கி வந்தார். அவருடைய தூண்டுதலின் பேரில்தான் அவன் அந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்க முன் வந்தான். சென்னை நகரத்தில் தான் கற்றுக்கொண்ட பாடங்களை இன்னும் அதிக ஆழத்தோடு வெற்றியூர்ப் பள்ளியில் படிக்க முடியும் என்பது அவனது நம்பிக்கை. பதினெட்டு வயது நிரம்பிய அவன் பருவகாலப் பெண்களோடு பழகித் திரியும் பண்புடையவன் என்பதை அவன் சித்தப்பா நன்கு அறிவார். எனவே அவனைத் தகுந்த கண்காணிப்போடு கவனித்துக் கொள்ள விரும்பினார்.

சங்கரன் ஒரு புறம்போக்குப் பேர்வழி. எதையுமே வேடிக்கை மயமாகக் கருதுபவன். உலகத்தில் எதையுமே அவன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. அவனுடைய நுழைவு அந்தப் பள்ளிக்கூடத்தையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது. எதிலும் தான்தான் நிபுணன் என்பது மாதிரி அவன் நடந்துகொண்டான். பலதரப்பட்ட பெண்களோடு உலவித் திரியும் அவனை, பள்ளி மாணவர்கள் கௌரவத்தோடும் மரியாதையோடும் நடத்திவர முன் வந்தார்கள்.

எந்தத் துறையிலும் வெற்றி என்பதையே அடைந்து நின்ற சங்கரன் அந்தப் பள்ளிக்கூடத்தில் ஒரு வீராதி வீரனைப்போல விளங்கிவந்தான்.

ஆள் முரடனுக இருந்தானே தவிர, எளியவர்களைக் கண்டால் இரக்கச் சுபாவம் உள்ளவனுகவே இருந்துவந் தான். ஒரு முறை ஒரு முரட்டு மாணவன் மாணிக்கத்தை அடித்துக் கொண்டிருப்பதைச் சங்கரன் பார்த்துவிட்டான். உடனே அங்கே சென்று மாணிக்கத்தை விட்டுவிட வேண்டுமென்றும் இல்லாவிடில் விலா எலும்பை முறித்து விட நேரிடும் என்றும் சொன்னுன். அந்த முரட்டு மாண வன் சங்கரனின் பேச்சுக்குச் செவிசாய்க்காத காரணத்தால், சொன்ன சொல்லை செயலாக்கிக் காட்டிவிட்டான் சங்கரன். அன்றிலிருந்து மாணிக்கமும் சங்கரனும் இணைபிரியாத நண்பர்களாக மாறிவிட்டார்கள்.

ஏழு ஆண்டுகள் பள்ளியில் இன்னலும் துன்பமும் இடையருது அனுபவித்துவந்த மாணிக்கத்திற்கு, முதன் முதலாக அன்பும் ஆதரவும் காட்டிய ஆசாமி சங்கரன் தான்!

இதுகாறும் துணையில்லாத காரணத்தால் மாணிக்கத் தைக் கேலிசெய்து வந்த மாணவர்கள், சங்கரனின் அடி உதைக்குப் பயந்து பக்குவமாக நடந்துகொண்டனர்.

சில மாணவர்கள் சங்கரனிடம் சென்று மாணிக்கம் அப்பன் பெயர் தெரியாத அனுதை என்பதுபோன்ற பற்பல செய்திகளை எடுத்துச் சொல்லி சங்கரனுக்கும் மாணிக்கத் துக்கும் இடையே பகைமையை உண்டுபண்ணத் துவங்கி னர். செய்திகளைச் சொல்லிமுடிக்குந் தொட்டியும் அமைதி யோடு கேட்டுக்கொண்டிருந்த சங்கரன், விஷயங்கள் அனைத் தையும் கேட்டுக்கொண்ட பின்னர், ஆத்திரம் பொங்க அவர் களைப் பார்த்து, "இனி யாராவது மாணிக்கத்தைக் குறித்து இழிவாக என்னிடம் சொன்னுல் நான் அவர்களின் தோலை உரித்து எடுத்துவிடுவேன்," என்று சொன்னுன்.

இப்படியாக சங்கரன் மாணிக்கம் இருவரின் நட்பும் வலுப்பெற்று விட்டது. சங்கரனின் மற்ருெரு நண்ப னுகிய சென்னை நகரவாசியுங்கூட அப்பன் பெயர் தெரி யாத அனுதையேயாகும். ஆகையால்தான் அவனுக்கு மாணிக்கத்தின்பேரில் அன்பும் அபிமானமும் ஏற்பட லாயிற்று.

மாணிக்கத்தை அழைத்து, "தம்பி, இனி உன்னை யாரேனும் கேலிசெய்தாலும் அல்லது அடிக்கவந்தாலும் என்னிடம் உடனே தெரிவி. நான் அவர்களுக்குத் தகுந்த பாடம் கற்பித்துவிடுகிறேன்," என்று கனிவோடு சொன்னான் சங்கரன்.

அந்த நாளில் இருந்து மாணிக்கத்தின் வாழ்க்கையில் புது மாறுதல் ஏற்படலாயிற்று. ஒரு நாள் மாணிக்கத்தைக் கேலிசெய்த ஒரு மாணவனை நையப் புடைத்துவிட்டான் சங்கரன். அது மாணிக்கத்திற்கு மாணவர்களிடையே நல்லதொரு மரியாதையை ஏற்படுத்தி விட்டது.

புதிய வாழ்வில் புத்துணர்ச்சியோடு, புதிய உற்சாகமும் கொண்டு பள்ளிப் பாடங்களில் அதிக ஆர்வம்காட்டத் துவங்கினான் மாணிக்கம். உள்ளத்தில் அமைதி ஏற்பட்டுவிட்டதால் பாடத்தில் கெட்டிக்காரனாக விளங்க அவனுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. மாணிக்கம் சங்கரனைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றிப் புகழ்ந்துவந்தான். சங்கரன் என்ன கட்டளை இட்டாலும் அதனை முடித்துக் கொடுத்துவிட வேண்டும் என்று ஆசைப்பட்டான் மாணிக்கம்.

சங்கரன் தன்னுடைய அந்தரங்கக் கதைகளையும், லீலை விவகாரங்களையும் மாணிக்கத்திடம் ஒளிவு மறைவு இல்லாமல் சொன்னான். சென்னை நகரில் பருவப் பெண்களோடு அவன் நடத்திய காதல் வாழ்வைக் கேட்டுக்கேட்டு புளகாங்கிதம் அடைந்தான் மாணிக்கம். ஆண்டவனின் அருளாலேயே சங்கரனின் தொடர்பு தனக்குக் கிடைத்ததாக எண்ணி ஆண்டவனை அனவரதமும் தொழுதுவந்தான் மாணிக்கம்.

ஓராண்டு காலம் கழிந்தது. வெற்றியூர்ப் பள்ளியில் படித்துத் தேறிய சங்கரன், சென்னை நகரத்தில் மருத்துவத் துறையில் படித்துப் பட்டம் பெறுவதற்காக மாணிக்கத்தை விட்டுப் பிரியவேண்டிய நிலைமை ஏற்பட்டது. சங்கரனின் பிரிவை நினைந்து நினைந்து பெரிதும் வேதனைப் பட்டான் மாணிக்கம்.

'அறிவகம்' என்ற மாளிகையில் தங்கியபடியே மேலும் மூன்று ஆண்டுகள் வெற்றியூர்ப் பள்ளியில் மாணிக்கம் படித்துவந்தான். அப்போது வேட்டை ஆடுவதிலும், மீன் பிடிப்பதிலும் உலாவி வருவதிலும் ஈடுபட்டுவந்தான் அவன். குடும்பப் பொறுப்பும், செல்வப் பெருக்கும் அடைந்துவிட்ட மாணிக்கத்தை, மாணவர்களும் ஆசிரியர்களும் தகுந்த மரியாதையோடும் கௌரவத்தோடும் நடத்தி வந்தார்கள். முன்போல அவனை அப்போது அங்கு கேலி செய்ய யாருமே இல்லை. ஜமீன்தாரின் ஒரே வாரிசு என்ற நிலையில் அவன் பெருமைக்கும், மதிப்பிற்கும் உரியவனாக விளங்கிவந்தான்.

மேலும் இரண்டாண்டுகள் ஓடிவிட்டன. சங்கரன் வெற்றியூர் நகரத்துக்குத் தனது விடுமுறை நாட்களைக் கழிப்பதற்காக வந்து சேர்ந்தான். மாணிக்கமும் சங்கரனும் விடுமுறை நாட்களை மிக மகிழ்ச்சிகரமாகக் கழிக்கலாயினர். ஒருவரிடமிருந்துப் ஒருவரை பிரிப்பது இயலாத காரியம் என்கிற அளவிற்கு இறுக்கம் பெற்றுவிட்டது அவர்களின் நட்பு.

எப்போதாவது வழியில் பெண்களைப் பார்க்க நேரிட்டு விட்டால், சங்கரன் பெண்களைப் பற்றி ஒரு பெரிய புராணமே சொல்லத் துவங்கிவிடுவான். மாணிக்கம் ஆவலோடு அவ்வளவையும் கேட்டுக் கொண்டிருப்பான். சங்கரனைப் பொறுத்தவரையில் பெண்கள் கேளிக்கைப் பொருள்களேயாகும். ஆனால் மாணிக்கமோ அவர்களைத் தெய்வமாகக் கருதிவந்தான்.

இந்த ஒரு விஷயத்தில்-அதாவது பெண்களைப் பற்றிய அபிப்பிராயத்தில்—இருவருக்கும் பெருத்த வேறுபாடு இருந்து வந்தது.

ஒருத்திக்கு ஒருவன் என்ற வாழ்க்கை முறையை ஆதரித்தான் மாணிக்கம். அதை அவமதித்தான் சங்கரன்.

"பெண்கள் ஒரு புரியாத புதிர். அதை நாளாவட்டத்தில் தான் உணர்ந்துகொள்ள முடியும்" என்று கூறி தன் கருத்துக்களுக்கு வலு ஊட்டினான் சங்கரன்.

இருவரும் ஒருவரையொருவர் உள்ளன்போடுதான் நேசித்து வந்தனர். ஒரு சில கருத்துக்களில் அபிப்பிராய பேதம் இருந்தாலுங்கூட இருவரும் அன்னியோன்யமாகப் பழக விரும்பினர்.—பழகி வந்தனர்!

சங்கரனின் சித்தப்பாவிடமிருந்து சங்கரன் இந்திய தேசத்தைவிட்டு வெளியூருக்கு மருத்துவச் சேவைக்காகப் போகப்போகிறான் என்பதை அறிந்துகொண்டான் மாணிக்கம். 'அறிவக' வாழ்க்கை மாணிக்கத்திற்கு அலுப்பைத் தரலாயிற்று. வாழ்வில் ஒரு மாற்றத்தை அவன் விரும்பினான். இதை அறிந்துகொண்ட அவனது தந்தையாராகிய ஜமீன்தார், "தம்பி, உனக்கும் சங்கரனுக்கும் உள்ள நட்பின் ஆழத்தை நான் நன்கு அறிவேன். நீ விரும்பினால் நாளையே சென்னை நகருக்குப் புறப்படு. அங்கு உல்லாசமாக உன் நண்பனோடு சில மாதங்களைப் போக்கிவிட்டுத் திரும்பி வா. உனக்குச் செலவுக்கு வேண்டிய தொகையை நான் தருகிறேன்," என்று உள்ளன்போடு கூறினார்.

தந்தையாரின் வேண்டுகோளுக்கிணங்கி மாணிக்கம் சென்னை நகருக்குச் சென்றான். ஆனால் அவன் சென்னை நகரை அடைவதற்குள் அவனது நண்பன் சங்கரன், வெளிநாட்டிற்குப் புறப்பட்டுப் போய்விட்டான். சங்கரன் வெளிநாடு போவதற்கு முன்பே 'அறிவக' விலாசத்திற்கு மாணிக்கத்திற்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பியிருந்தான். அதில் தான் அமெரிக்காவிற்குப் போகப் போவதாகவும், அமெரிக்காவிலிருந்து திரும்புவதற்கு அநேக ஆண்டுகள் ஆகலாமென்றும் தெரிவித்திருந்தான். அக்கடிதம் ஜெனீவீயால் திருப்பி அனுப்பப்பட்டு மாணிக்கம் சென்னை நகரில் இருக்கும்போதுதான் அவன் கைக்குக் கிடைத்தது.

கடிதத்தைப் படித்ததும் ஏமாற்றமும் கவலையும் அடைந்த மாணிக்கம், 'அறிவகம்' என்ற தன் வீட்டிற்கே சென்னையிலிருந்து திரும்பிவிட்டான்.

நண்பனைப் பிரிந்து வாழுகிற துக்கம் மேலும் மேலும் மாணிக்கத்தை உறுத்தவே, அவன்மேல் பரிவுகொண்ட

அவனது தந்தையார் அவனை அழைத்து, "தம்பி உன் உள்ளம் மகிழ்ச்சி அடையவேண்டுமானால் நீ இன்னும் ஓராண்டு காலம் சென்னை நகரில் வாழ முற்படுவதுதான் சிறந்தது," எனக் கூறினர்.

அது உண்மைதான் என்பதை உணர்ந்த மாணிக்கமும் சென்னைக்குப் பயணப்படலானன், பணத்தோடும் பொருளோடும்!

# 4

மாணிக்கத்தை மாங்குயில் சந்தித்தபொழுது அவள் தனிக் குடித்தனம் நடத்துவதற்காக தனியான ஒரு அறையை வாடகைக்காகத் தேடி அலைந்துகொண்டிருந்தாள். ஏனெனில் அவள் சங்கரனோடு தங்கியிருந்த அறையைச்சுற்றி ஏராளமான குடித்தனக்காரர்களும் கல்லூரி மாணவர்களும் தங்கி யிருந்தார்கள். அவர்களின் தொல்லை அவளுடைய அமைதியைக் குலைத்துக்கொண்டிருந்தது. அவளுக்குப் பின்னல் வேலைகளில் நல்ல திறமை இருந்தது. ஆகவே பின்னல் வேலையை தன் தொழிலாக மாற்றிக் கொண்டு வாழ்க்கையைக் கடத்திவிட விரும்பினாள். அத் தொழிலில் அமோகமான வருவாய் இல்லையென்றாலும்கூட, அவளிடமிருந்த கைப்பணத்தைக் கொண்டே அவள் காலத்தையும் பொழுதையும் கழித்துவிட முடியும்.

அவளுடைய எதிர்காலம் இருளால் கவிழ்ந்து விடாதபடி காப்பாற்றிக் கொள்ளுவதற்கு ஏற்ற திறமையும், பணமும் அவளிடம் இருக்கத்தான் செய்தன. தனிமையாக ஒரு பெண் ஒரு பெரிய நகரத்தில் காலத்தைக் கடத்துவது கஷ்டமான காரியம் என்பதை அவள் நன்கு அறிவாள். இருந்தாலும் நிர்ப்பந்தத்தின் காரணமாக அவள் தனித்தே வாழ்ந்து வரலானாள். தனிமையான வாழ்வு அவளுக்குச் சங்கடத்தையும், சஞ்சலத்தையும் தரலாயிற்று.

ஒரு நாள் இரவு அவள் தனிமையாக உலவிக்கொண்டிருக்கும்போதுதான், மாணிக்கத்தைச் சந்திக்கும்படி நேரிட்டது. அன்று பகற்பொழுதின் போதுதான் அவன் அந் நகருக்கு வந்திருந்தான். தான் தங்கி இருந்த அறையிலிருந்து கீழ்கட்டுக்கு மாங்குயில் இறங்கிக்கொண்டிருந்தாள். மாணிக்கம் கீழ் கட்டிலிருந்து மேல் மாடிக்கு ஏறிக்கொண்டிருந்தான். இருவரும் இடைவெளியில் சந்தித்து ஒருவருக்கொருவர் ஒதுங்கி வழி விட்டுக்கொண்

டனர். எதிர்த்து வருபவரை இன்னுர் என்றுகூடப் பாராமல் இடித்துத் தள்ளிக்கொண்டு இளைஞர்கள் வாழும் அந்த நகரத்திலே ஓர் பெண்ணைக் கண்டதும் ஒதுங்கி நிற்கின்ற அளவுக்கு உயர்ந்த பண்பு வாய்ந்த மாணவன் ஒருவன் இருக்கிறுன் என்பதை அனுபவத்தால் அறிய நேரிட்ட மாங்குயில், சிறிது நேரம் மாணிக்கத்தைப் பார்த்தபடியே திகைத்து நின்றுவிட்டாள். அவள் தங்கியிருந்த அறைக்கு அடுத்த அறையிலேதான் மாணிக்கம் தனக்கென ஒரு அறையை வாடகைக்குப் பிடித்திருந்தான். இரவு முழுதும் அவன் தன் சாமான்களையெல்லாம் பிரித்து, அவ்வறையில் அடுக்கிக்கொண்டிருந்த சப்தத்தை அவள் கேட்டுக்கொண்டேதான் படுத்திருந்தாள்.

வெளியிலே சந்தித்த பெண்ணின் அழகிலே மயங்கிய மாணிக்கம், தன் சாமான்களையெல்லாம் எடுத்து அடுக்கி வைத்துவிட்டு, அவளைப் பற்றி சிந்தித்துக்கொண்டே இருந்தான். அவள் அடுத்த அறையில்தான் தங்கியிருக்கிறுள், அதுவும் தனிமையிலே, என்பதை எண்ணும்போது அவன் பட்ட அவதியை எத்தகையது என்று சொல்ல இயலாது. அவள் தங்கியிருந்த அறையிலிருந்து கிளம்பிய ஒவ்வொரு ஓசையும் அவனுக்குச் சிந்தனையைக் குழப்பிக்கொண்டே இருந்தது.

மறுநாள் காலையில் அவள் தனிமையிலே உலவிக்கொண்டிருந்தாள், தன் அறையை அடுத்த மாடி வெளியில்! அப்போது அவளைத் தேடிக்கொண்டே மாணிக்கம் அங்குவந்து சேர்ந்தான். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். பார்வை சிரிப்பாக மாறியது. சிரிப்பு பேச்சாக மாறியது. பேச்சு பெரும் பேச்சாக உருவெடுத்தது. பேசினுர்கள், பேசினுர்கள், அன்றெல்லாம் பேசிக்கொண்டே இருந்தார்கள்! கொஞ்ச நாட்களுக்குள்ளாகவே அவர்கள் உறவு பலப்பட்டுவிட்டது. ஒருவரையொருவர் பிரிந்து வாழமுடியாது என்ற நிலைக்கு அவர்களின் நட்பு வேரூன்றி இருந்தது. உயர்ந்து வளர்ந்து அளவோடு விளங்கிய மாணிக்கத்தை அவளுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. மேலும், அவனது சமயமும் சந்தர்ப்பமும் அறிந்துகொள்ளும் பண்பு, அவளை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. ஆகையால் அவன் அவளை கடற்கரைக்கோ, அல்லது கடை-

வீதிக்கோ அழைத்துச் செல்ல விரும்பும்போது அவள் மகிழ்ச்சியோடு அவனது விருப்பத்திற்கு அடிபணியலானாள். அவள் பகலெல்லாம் பட்டணத்தைச்சுற்றித் திரிந்துவிட்டு, மாலை நேரத்தில்தான் அறைக்குத் திரும்புவாள். அவனும் அவளைப்போலவே பகலெல்லாம் நகரத்தைச் சுற்றிச் சுற்றி அலைந்துவிட்டு மாலை நேரத்தில் தன் அறைக்குத் திரும்புவான். பிறகு இருவருமாகச் சேர்ந்து கடற்கரைக்குச் சென்று காற்று வாங்கிவிட்டு தத்தம் அறையில் வந்து படுத்துக்கொள்வர்.

அந்யோன்யமாகப் பழகியதாலும், அருகருகே இருந்ததாலும் இருவரும் ஒருவரைப்பற்றி ஒருவர் அடிக்கடி கனவு காணத் துவங்கினர். விதவையின் நிலையிலே வாழ்ந்த மாங்குயிலுக்கு, மாணிக்கத்தின் உறவு, உள்ள அமைதியையும், உலகப் பற்றையும் உண்டு பண்ணலாயிற்று. உண்மையான அன்பு என்ன என்பதை சங்கரனின் தொடர்புமூலம் சரிவர அறிந்துகொள்ள முடியாத மாங்குயில், மாணிக்கத்தின் தொடர்பின்மூலம் அதனை அறிந்துகொள்ள வாய்ப்புக் கிடைத்தது. அவனை அவள் அளவுக்கு மிஞ்சிக் காதலிக்கவும் செய்தாள். பெண்களை மகிழ்ச்சி தரும் பண்டங்களாகப் பாவித்துவந்த சங்கரனின் போக்கிற்கும், பெண்களைத் தெய்வமாகப் போற்றிவரும் மாணிக்கத்தின் போக்கிற்கும் இருந்த ஏற்றத் தாழ்வுகளை அனுபவத்தால் அறிய நேரிட்டபோது அவளின் உள்ளம் மாணிக்கத்தின்பால் அதிகமாக ஈடுபாடுகொள்ள ஆசைப்பட்டது. பெண்மைக்குரிய பண்புகள் பெரிதும் அமையப்பெற்ற மாங்குயிலைப் பெரிதும் புகழ்ந்து அவளுடைய பிரியத்தைச் சம்பாதித்துவிட வேண்டுமென்ற ஆசை மாணிக்கத்திற்கும் நிறைய இருந்தது. இவ்விதமாக ஒருவரையொருவர் அந்தரங்கமாகக் காதலிக்கத் தொடங்கினர். ஆகவே அதன் பயனாக ஒன்றாய் இருவரும் பழகலாயினர்.

மாணிக்கத்தைப் பொறுத்தவரையில் அவன் கனவு உலகத்திலேயே வாழ்ந்து வந்தான். மாங்குயிலைப் பற்றி மதிப்பான அபிப்பிராயமும் கொண்டிருந்தான். அவளது மேன்மையான குணங்களில் மயங்கிவிட்ட அவன், அவள் எங்கிருந்து வந்தாள், அவள் ஏன் தனிமையிலே வாழ்ந்து வருகிறாள் என்பதை அறிந்துகொள்வதில் அக்கரை

செலுத்தவேயில்லை. அவள் சிரித்தால் அவன் தன் சிந்தனையையே மறந்துவிடுவான்!

இப்படியாக இருவரும் இரண்டு வாரங்கள் அந்யோன்யமாகப் பழகினர். அந்தரங்கக் காதலைப் பற்றி யாருமே பிரஸ்தாபித்துக் கொள்ளவில்லை. மக்கள் பெருத்திருந்த நகர வாழ்வு அவர்களுக்கு அலுப்பையூட்டியது. ஆகவே, பசுமைநிறைந்த கிராமாந்திர வெளிகளில் வாழ்ந்து வரவேண்டும் என்கின்ற ஆசை இருவருக்கும் ஏக சமயத்தில் ஏற்படலாயிற்று.

முதன் முதலில் இந்த விருப்பத்தைச் சொன்னவன் மாணிக்கந்தான். அதனை ஏற்றுக்கொண்டாள் மாங்குயில். அதன் பிறகுதான் இருவரும் ரயில் ஏறி பாண்டிப் பகுதிக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கு ஒருநாள் இரவு முழுதையும் போக்கிவிட்டு, மறுநாள் விடிந்ததும் இருவரும் சென்னை நகருக்குத் திரும்பினர். திரும்பும்போது அவர்களின் முகம் அதிகப்படியான ஆனந்தத்தோடு திகழ்ந்தது. சுற்றி வாழ்ந்தவர்கள் எல்லோரும் கூட அவர்கள் இருவரையும் கணவன் மனைவி என்றே கருதிவந்தனர்.

மாணிக்கம் மாங்குயிலை மணந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானமான முடிவிற்கு வந்துவிட்டான். சென்னை நகரத்தில் தன் தந்தையாருக்குத் தெரிந்த பாங்கர்களின்மூலம் ஒரு கட்டிடத்தை விலை பேசி வாங்கிவிட்டான். அக் கட்டிடத்தின் பெயர் 'அருளகம்'. விலை தீர்த்து வாங்கிய கட்டடத்தைத் தன் விருப்பத்திற்கு ஏற்றபடி பெரும் பணம் செலவு செய்து மாற்றி அமைத்தான். அழகு நிறைந்து விளங்கிய அக் கட்டிடம் குடியேறுவதற்கு ஏற்ற நிலையை எய்தியவுடன் மாங்குயிலை அன்போடு அழைத்து, "உனக்கு இந்தக் கட்டிடத்தில் என்னோடு வாழ்வதற்குச் சம்மதந்தானே?" என்று கேள்விகேட்டான்.

பாண்டி நகரத்தை அடுத்திருந்த ஓட்டலில் ஒருவரையொருவர் நன்கு அறிந்துகொண்டபின்பு அவர்களுக்குள் தாம்பத்ய உறவு பலப்பட்டுவிட்டது. ஆவலோடு தன்னை அழைத்துச் செல்ல விரும்பிய மாணிக்கத்திற்கு அவள்

மறுமொழி சொல்லவோ, மறுப்புரை கூறவோ தயாராக இல்லை. மௌனமாக இருந்தாள். மௌனம் சம்மதத்தின் அறிகுறி அல்லவா?

திருமணமாகிய மணமக்கள் முதல் இரவுக்காக புது இடத்தில் சந்திப்பதுபோல மாணிக்கமும் மாங்குயிலும் 'அருளகம்' என்ற கட்டிடத்திற்குள் காலெடுத்து வைத்தனர். இதுதான் அவர்கள் ஊர் அறியும்படி செய்த முதல் சடங்கு ஆகும்.

மாணிக்கத்தை தான் எந்த அளவில் காதலிக்கிறேம் என்பதை எடுத்துச் சொல்ல மாங்குயிலுக்கே திறமை போதாது. புது வீட்டில் அன்பு கெழுமிய காதலர்கள் ஆறு மாத காலத்தை அமைதியோடு கழித்துவிட்டனர்.

அவர்களது வாழ்வில் கவலைக்கோ, கஷ்டத்திற்கோ இடமே கிடையாது. இறந்த காலத்தில் அனுபவித்த இன்னல்களைப் பற்றியோ, எதிர்காலத்தில் அனுபவிக்க வேண்டிய இன்னல்களைப் பற்றியோ அவர்கள் சிறிதுகூட சிந்தித்துப் பார்க்கவில்லை. நிகழ்காலம் நிம்மதியாகக் கழிந்தால் போதும் என்பதுதான் இருவரின் ஏகோபித்த எண்ணமுமாகும்.

காதல் என்ன என்பதைச் சரிவர அறியாத மாங்குயில், மாணிக்கத்தை அளவுக்கு மிஞ்சிக் காதலிக்கத் துவங்கி விட்டாள். தனிமையிலே வாழ்ந்து பழகிய அவள், இனி மாணிக்கத்தை விட்டுவிட்டுத் தனிமையிலே வாழ முடியாது என்கின்ற நிலைமைக்கு ஆளாகி விட்டாள். அவனது ஒவ்வொரு தோற்றமும், அவளுக்கு ஒவ்வொரு விதமான உவகையைத் தரலாயிற்று. தனக்கெனவே இத் தரையில் அவள் பெண்ணுக அவதரித்து உள்ளாள் என்று எண்ணி மாணிக்கம் அவள் மாட்டு அளவுக்கு மிஞ்சிய அக்கரை செலுத்தலானுன். பழமையை மறந்துவிட்டு அவளும் அவனேடு பக்குவமாக நடந்து கொண்டாள்.

நடப்பு விவகாரங்கள் நல்லவிதத்தில் நிகழ்ந்து கொண்டிருந்ததால் மாணிக்கத்தின் பூர்வாங்கத்தை அறிந்து கொள்ளவேண்டும் என்கின்ற எண்ணம் மாங்குயிலுக்கோ, மாங்குயிலின் பூர்வாங்கத்தை அறிந்து கொள்ள வேண்டு

மென்ற எண்ணம் மாணிக்கத்திற்கோ அறவே இல்லாமல் இருந்தது. இருவரும் நிகழ் காலத்தைச் சந்தோஷமாகக் கழித்துவந்தால் போதுமென்ற திட்டத்திலேயே வாழ்ந்து வந்தனர். 'உபத்திரவம் அணுகக் கூடாது; குடும்பச் சுமை தாக்கக் கூடாது; பிள்ளைகுட்டிகள் என்ற பந்தம் விரியக் கூடாது; ஆனால் இன்பம் சுரந்தபடியே இருக்கவேண்டும்' என்பதுதான் அவர்களின் ஒரே இச்சை. லோகநாதன் இறந்துவிட்டான் என்கின்ற செய்தி மாங்குயிலின் காதில் விழுந்தது. பழமையில் நிகழ்ந்த துக்ககரமான சம்பவங்கள் பலவற்றை மறந்துவிட்டதைப் போல இதையும் மறந்து விட முயன்றாள். ஆனால் இது சம்பந்தமாக அவள் சொன்ன கருத்து இதுதான்: 'லோகநாதன் ஒரு பயங்கரமான மிருகம். அவனது சாவால் இவ்வுலகத்தில் புனிதம் தாண்டவமாட முடியும்.'

வெற்றியூர் நகரத்திலிருந்து மாணிக்கத்திற்கு அடிக்கடி கடிதங்கள் வந்தன. அவன் அவற்றைப் படித்துவிட்டு, படித்த மறுநிமிடமே மறந்து விடுவான். அக்கடிதங்கள் யாரால் எழுதப்படுகின்றன; அக்கடிதத்தில் என்னென்ன விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்பதை அறிந்து கொள்ள மாங்குயில் எவ்வித முயற்சியையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஆறு மாத காலம் நெருங்கிப் பழகியும் கூட அடுத்தவரின் வாழ்க்கை ரகசியங்களை அறிய வேண்டும் என்கின்ற ஆசை அவர்களுக்குள் ஏற்படவே யில்லை.

ஒரு நாள் மாலை மாணிக்கம் எங்கோ வெளியே போயிருந்தான். அவனுடைய மேசையில் ஒரு போட்டோ ஆல்பம் விரித்துக் கிடந்தது. அதனை ஆவலோடு புரட்டிப் பார்த்தாள் மாங்குயில். தன் தந்தையாரின் படத்தையும் 'அறிவகம்' என்ற தன் தந்தைக்குரிய மாளிகையின் படத்தையும் மாங்குயிலுக்குக் காட்ட வேண்டுமென்ற ஆசையில் தான் மாணிக்கம் அந்த போட்டோ ஆல்பத்தை தன் மேசையின்மீது விரித்து வைத்திருந்தான். ஒவ்வொரு படமாகப் புரட்டிக் கொண்டிருந்த மாங்குயில், அதில் ஒரு படத்தைப் பார்த்ததும் தன்னையும் அறியாமல் 'ஐயோ!' என்று அலறி விட்டாள். காரணம்: அப்படம் சங்கரனின் படமாகும்!

அப்படத்தைப் பார்த்ததும் ஆல்பத்தை கையில் தூக்கிக் கொண்டு ஆவலோடு கண்ணருகே வைத்து மேலும் கீழும் பார்த்தாள். சங்கரனின் ஒவ்வொரு அங்கமும் அவளது உள்ளத்தில் ஒருவித உணர்ச்சியை உண்டுபண்ணின. அவனைப் பார்க்கப் பார்க்க அவளுக்குப் பயம்தான் அதிகரித்தது. அவனை அவள் அறவே மறந்திருந்தாள். ஆனால் அவனே மாணிக்கத்தின் ஆத்ம நண்பனாக விளங்கினான். அமைதியோடு நடந்து கொண்டிருந்த அவளுடைய வாழ்க்கையில் இப்படி ஒரு அவதி ஏன் நுழைந்ததோ தெரியவில்லை! இன்பத்தை அடுத்துத் துன்பம் வரத்தானே செய்யும்?

கையில் இருந்த சங்கரனின் படம் மாங்குயிலைப் பார்த்து, 'அடி, பைத்தியக்காரப் பெண்ணே, ஏன் அலறுகிறாய்?' என்று கேட்பதுபோல அவள் உணர்ந்தாள். 'உலகம் எத்தனையோ வித ஆடவர்களால் நிறைந்தது. மாணிக்கமும் நானும்தானா உனக்கு உரியவர்கள்? இன்னும் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்களே? அவர்களைப் பற்றி உனக்குத் தெரியாதா? அப்புறம் என்ன? அவர்களைத் தேடி ஓடு. இந்த வீட்டில் அடைபட்டுக் கிடக்காமல் வெளியுலகை நோக்கி இப்போதே விரைவாக ஓடு!' என்று கையிலிருந்த படம் அவளைப் பார்த்துப் பலப்பலவாகப் பரிகசித்துச் சொல்லிற்று.

உணர்ச்சியை அடக்கிக் கொண்டு ஒன்றும் அறியாதவளைப் போல இருக்க அவள் முயன்றாள். ஆனால் அவளையும் அறியாமல் 'ஐயோ! ஐயோ!' என்ற வார்த்தைகள் வெளி வரலாயின. பழங்கால நிகழ்ச்சிகள் அவளது உள்ளத்தில் படம் போல நிழலாடத் துவங்கி விட்டன.

சங்கரன் வந்தான். அவளது தோளில் உரிமையோடு கை வைத்தான். அவளை இழுத்துத் தன் அருகே அணைத்துக் கொண்டான். அன்பு முத்தங்கள் சொரிந்தான். 'அறக்குன்ற'த்தை அடுத்திருந்த அறையில் இருவரும் ஒன்றாக இருந்தனர். பக்கத்து அறையிலிருந்த மாணவர்கள் ஆளுக்கு ஒருத்தியாக, நாளுக்கு ஒரு பெண்ணை அழைத்து வந்து அட்டகாசம் செய்தனர்.

இந்த நிகழ்ச்சிகள் அவளது உள்ளத்தில் நிழலாடத் துவங்கவே, அவள் நிம்மதியின்றித் தவித்தாள். நல்ல ரோட்டில் நடந்து போய்க் கொண்டிருந்த அவளைச் சகதி நிறைந்த பாதையில் நடந்து போகும்படி செய்து விட்டது சங்கரனின் படம்.

சங்கரன் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான், அந்தப் படத்தில். அவனது கால்கள் இரண்டையும் கைகளால் அணைத்துக் கொண்டு ஆணவத்தோடு வீற்றிருந்த அந்தத் தோற்றம் பார்ப்பதற்கு அழகாகவே இருந்தது. அகன்று விரிந்த மார்பை அவன் மூடிக் கொள்ளக்கூட முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. வாயில் சிகரெட்டுப் புகைந்து கொண்டு இருந்தது. அவனை இத்தகைய கோலத்தில் அவள் எத்தனையோ முறை பார்த்திருக்கிறாள். ஒருமுறை அவன் இத்தகைய கோலத்தில் இருக்கும்போது, அவனிடம் கண்ணு மூச்சி விளையாடிய நிகழ்ச்சி ஒன்று அவளது நினைவுக்கு வந்து மறைந்தது.

சாதாரணக் காகிதத்தில் தோன்றிய அந்த உருவம், அவளைச் சொல்ல முடியாத அளவுக்குத் தொல்லைப்படுத்தி விட்டது. தன்னுடைய பழங்காலச் சரித்திரத்தை அறிந்து கொண்டு, நிகழ்காலக் காதலன் நிந்திப்பது போலப் பகற் கனவு காணத் துவங்கினாள். சாய்வு நாற்காலியில் தோன்றிய சங்கரன், தன்னை அருகில் இழுத்து அணைத்துக் கொள்வது போலவும், இதைக் கண்ட மாணிக்கம் வீறிட்டு எழுந்து, 'சதிகாரி' என்று சழக்குரைப்பது போலவும் கனவு காண ஆரம்பித்தாள். இப்படியாகப் பலப்பலவான நிகழ்ச்சிகளுக்கும், நினைப்புகளுக்குமிடையே அவள் நின்று கொண்டிருக்க இயலாதவளாகி, அருகில் இருந்த நாற்காலியில் அவளையும் அறியாமல் சாய்ந்து விட்டாள். தான் செய்தது தவறே அல்லவோ, என்பதைக் கூடத் தீர்மானிக்க முடியாமல் விபச்சார வாழ்வில் ஈடுபட்டு விட்டதாக எண்ணி வேதனை கொள்ளத் துவங்கியதுதான் அவளது அலுப்புக்கும் அயர்வுக்கும் காரணமாகும். சிறிது நேரம் கழித்து கண்விழித்துப் பார்த்தபோது வீட்டு முற்றத்தில் தொங்கிக் கொண்டிருந்த மாணிக்கத்தின் பெரிய உருவப்படம் மாங்குயிலைப் பார்த்து, 'பேதைப் பெண்ணே, நீ எதற்காகப் பேதலிக்க வேண்டும்?' என்று சமாதானம்

செய்வது போலக் காட்சியளித்தது. மாணிக்கத்தின் உயர்ந்த பண்பையும், இளகிய உள்ளத்தையும் எண்ணி எண்ணி மாங்குயில் நாணமும் நரக வேதனையும் கொண்டாள். தன் உடலைச் சங்கரன் ஆக்கிரமித்து விட்டதாக எண்ணி அவள் தன்னைத் தானே நொந்து கொள்ளவும் துவங்கிவிட்டாள்.

எவ்விதச் சஞ்சலமும் இல்லாமல், சமாதானமான முறையிலே நடந்து கொண்டிருந்த வாழ்க்கை, சங்கரனின் சிறு படத்தினால் அவதி காணலாயிற்று.

சென்னை நகரைவிட்டு அமெரிக்காவுக்குப் போகும் போது, சங்கரன் அவளிடம் தன்னுடைய சிறு படம் ஒன்றைத் தந்து சென்றான். சிறிது காலம் அப்படத்தை சீரோடு பாதுகாத்துவந்த அவள், மாணிக்கத்தோடு நெருங்கிப் பழகத் துவங்கியதும் நெருப்பிலிட்டுக் கொளுத்திவிட்டாள். பழங்கால வாழ்வு பற்றிய குறிப்பு எதுவுமே வீட்டில் இருக்கக்கூடாது என்று சர்வ ஜாக்கிரதையாக வாழ முற்பட்ட அவளை, சங்கரனின் சிறு படம் பெரிதும் அலைக் கழியச் செய்துவிட்டது. 'மாணிக்கத்தின் புகைப்பட ஆல்பத்தில் சங்கரனின் படம் எப்படி இடம் பெற்றது?' என்பது குறித்து யோசித்துப் பார்க்கலானாள் மாங்குயில்.

ஆல்பத்திலிருந்து அப்படத்தை அடி தெரியாமல் பெயர்த்தெடுத்து விட்டாள். அப்படத்தின் பின்புறம் கீழே கண்ட சொற்றொடர் சங்கரனின் கையாலேயே எழுதப்பட்டிருந்தது:

'இப்படத்தை எனது அருமை நண்பனும், சகோதரனுமாகிய மாணிக்கத்திற்கு அர்ப்பணிக்கிறேன்!'

இச்சொற்கள் ஒவ்வொன்றும் அம்புகளாக மாறி, அவளது உள்ளத்தில் சொல்லொணாத துயரத்தைக் கொடுத்தன.

சங்கரன் தன்னுடைய நெருங்கிய நண்பனென்பதை மாணிக்கம்கூட நெடுநாட்களாக வெளிப்படுத்தாமல் இருந்ததை எண்ணுகையில் மாங்குயிலே வியப்படைந்தாள்.

இனியும் அங்கு நின்றுகொண்டிருக்க விரும்பாத மாங்குயில், ஆல்பத்தை ஆத்திரத்தோடு மூடி வைத்துவிட்டு,

தோட்டத்திற்குக் காற்று வாங்கப் போய்விட்டாள். நெறி தவறி வாழ முற்பட்ட தனக்கு, ஆண்டவன் தகுந்த தண்டனையைத் தர விரும்புகிறார் என்பதைத் தனக்குள்ளாகவே சொல்லிக்கொண்டாள்.

தன்னுடைய உடலை அவள் இரண்டே இரண்டு ஆடவர்களுக்குத்தான் அர்ப்பணித்திருக்கிறாள். அவர்கள் இருவரும் சகோதரர்கள் என்று சொல்லிக்கொள்ளும் அளவிற்கு நெருங்கிய நண்பர்களாகும். இது விந்தைதானே ?

'அண்ணனுக்கும் தம்பிக்கும் ஒரே ஆசைநாயகி!' அவளையும் அறியாமல் அவ் வார்த்தைகள் வெளிவந்தன. தன்னைத்தானே எண்ணி அவளே சிரித்துக்கொண்டாள்.

சங்கரனைத் தனக்கு நன்கு தெரியும் என்ற ரகசியத்தை மாணிக்கத்திற்குச் சொல்லாமலேயே மறைத்துவிடவேண்டுமென்ற முடிவுக்கு அவள் வந்துவிட்டாள்.

யாரோ கதவைத் திறந்துகொண்டு வீட்டிற்குள் நுழைந்துவரும் காலடிச் சத்தம் அவளின் காதுகளில் விழுந்தது. மாணிக்கம் எதையோ பறிகொடுத்துவிட்டவன்போல, ஏக்கம் முகத்தில் கொஞ்சி விளையாட, குழம்பிய உள்ளத்தோடு வந்துகொண்டிருந்தான். நடக்க முடியாதவன்போல முகப்பிலிருந்த நாற்காலியில் அலுப்போடு உட்கார்ந்தான். கண்கள் நீரை ஆறுகப் பெருக்கிக்கொண்டிருந்தன. அவனது அத்தகைய அலங்கோலத் தோற்றத்தை இதுவரை என்றுமே கண்டறியாத மாங்குயில், முதன் முதலாக மருண்டுவிட்டாள். சங்கரனுக்கும் தனக்கும் இருந்த தொடர்பை இவன் ஒரு வேளை அறிந்ததின் காரணமாக அவதிப்படுகிறானே என்னவோ என்று எண்ணிப் பயந்தும் விட்டாள். எனவே, தள்ளாடித் தடுமாறிக்கொண்டு அவன் இருந்த இடத்தை நோக்கி மெதுவாக நடந்துவரலானாள்.

முகத்தைக் கைகளால் மறைத்துக்கொண்டு முக்கி முணகிக்கொண்டிருந்தான் மாணிக்கம். மழைத் துளிகளைப் போல முழங்கையின் வழியாக கண்ணீர்த் துளிகள் சிந்திக்கொண்டிருந்தன. மாங்குயில் அருகே வந்து நின்றுகொண்டிருப்பதை உணர்ந்த மாணிக்கம், "பெண்ணே, என்னைக்

காப்பாற்று. நான் பெருந் துயரத்துள் கிடந்து அவதிப்படு கிறேன்'' என்று சொன்னான்.

மாணிக்கம் படும் வேதனையைக் கண்ட மாங்குயில், தான் கொண்ட துயரத்தைக்கூட மறந்துவிட்டு அவனது காலடியில் வீழ்ந்து, ''அன்பே, உங்களுக்கு வந்த அவதி என்ன? என்னால் இயன்ற அளவு அத்துன்பத்தைத் துடைப்பதற்கு வழி தேடுகிறேன்'' என்று மெதுவான குரலில் சொன்னாள்.

''இந்தச் செய்தியைக் கேட்டதும் நான் வீட்டிற்கு ஒரே ஓட்டமாக வந்து சேர்ந்துவிட்டேன். வழியில் நின்று கூப்பாடு போட்டால், மரியாதை கெட்டுவிடும் என்பதற் காகவே வழியில் என் அவதியை யாருமே அறிந்துகொள் ளாதபடி அவசர அவசரமாக ஓடி வந்துள்ளேன். இப் போது அழுது தீர்த்தால்தான் என் அவதி சிறிதாவது தீரும்'' என்று விஷயத்தைச் சரியாகச் சொல்லாமல் அரை யும் குறையுமாகச் சொல்லி முடித்தான் மாணிக்கம்.

அழுது அழுது ஓய்ந்தபின்பு, அவன் திரும்பவும் பேச லானான்: ''அவனை நான் மனதார நேசித்தேன். முழுக்க முழுக்க நம்பி இருந்தேன். அவன் என்னை மோசஞ்செய்து விட்டுப் போய்விட்டான்'' என்று திரும்பவும் விபரமில் லாமல் விஷயத்தை வளர்த்துக் கொண்டிருந்தான் மாணிக்கம்.

மாங்குயில் மாணிக்கத்தின் பேச்சைக் கேட்டு அதிகப் படியாகப் பயந்துவிட்டாள். இருந்தாலும் மனதைத் திடப் படுத்திக்கொண்டு ''அவன் யார்? அவன் உங்களை எப்படி மோசம் செய்துவிட்டான்? தயவு செய்து விஷயத்தைச் சற்று விபரமாகச் சொல்லுங்கள்'' என்று பணிவோடு கேட்டாள்.

''அவன்தான் என் ஆருயிர் நண்பன் சங்கரன்! அவன் என்னை விட்டுவிட்டு அயல்நாட்டுக்குப் புறப்பட்டுப் போனான். போன வழியில் புயலுக்கு இலக்காகி மாண்டு விட்டான்'' என்று அழுதுகொண்டே விபரத்தைத் தெரியப் படுத்தினான் மாணிக்கம்.

சங்கரனின் மரணத்தைக் கேட்டு மாங்குயில் முதலில் அதிர்ச்சிகொண்டாள் என்றாலும், சிறிது நேரத்திற்குள் ளாக மன அமைதி அடைந்துவிட்டாள். அமைதியான வாழ்வுக்கு யாரால் அவகேடு வந்து சேரும் என்று அஞ்சி நடுங்கினாளோ, அவன் புயலுக்கு இலக்காகிப் போக்கிழந்து விட்டான், என்பதை அறிந்ததும் அவளால் எப்படிச் சமாதானம் அடையாமல் இருக்க முடியும்? அவன் சாகவேண்டுமென்பதைத்தான் அவள் அந்தரங்கமாக விரும்பினாள். ஆகவே, அவன் செத்துவிட்டான் என்ற செய்தி அவளுக்குச் சீனி கலந்த பானமாக இனித்தது.

கவலை தோன்றவேண்டிய முகத்தில் களிப்புக் களி நடமாடுவதைக் கண்ட மாணிக்கம் மாங்குயிலைப் பார்த்து, "பெண்ணே, உனக்கு என் நண்பன் சங்கரனைத் தெரியாது. அவனைப் பற்றி நான் இதுகாறும் ஒரு வார்த்தைகூட உன்னிடம் சொன்னதில்லை. அவன் தங்கமான மனதுடையவன். உல்லாசப் பிரியன். யாருக்குமே உபத்திரவம் தரமாட்டான். இந்த உலகத்தில் நான் உன்னைக் காதலிப்பதற்கு முன்பு வேறு யாரையாவது நேசித்தது உண்டு என்று சொன்னால், அது சங்கரனையே ஆகும்" என்று சொன்னான்.

அவன் சொன்னதை ஆமோதிப்பவள் போல தலையை அசைத்த மாங்குயில், "கடைசியாக உங்களுடைய வாழ்வுக்குக் கஷ்டத்தை ஊட்டிவிட்டான் உங்கள் ஆருயிர் நண்பன் சங்கரன்" என்று அவலச்சுவைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாள்.

சங்கரன் உயிரோடு இருக்கும்பட்சத்தில் மாங்குயிலுக்குத் துன்பம். உயிரிழந்த நிலையில் மாணிக்கத்திற்குத் துன்பம்!

துன்பத்தோடு போராடிக் கொண்டிருந்த மாணிக்கத்தை எந்த விதத்தில் தேற்ற முடியும் என்று யோசித்துப் பார்த்த அவள், "சங்கரன் எப்படிச் செத்தான்? உங்களுக்கு அந்தச் செய்தியை யார் சொன்னது?" என்று கேட்டாள்.

"சங்கரன் அமெரிக்காவுக்குக் கப்பலில் சென்றான். அவனை ஏற்றிச் சென்ற கப்பல் கரை சேருவதற்குமுன்பாக நடுக் கடலில் பெரும் புயலால் தாக்கப்பட்டுக் கவிழ்ந்து

விட்டது. கப்பலில் பிரயாணம் செய்தவர்களைக் காப்பாற்ற முடியவில்லை' என்ற பத்திரிகைச் செய்தியை எடுத்து நீட்டினுன் மாணிக்கம்.

"சட்ட பூர்வமாக அறிவிக்கப்பட்ட செய்தியாதலின், சங்கரன் நிச்சயமாகச் செத்துத்தான் போயிருக்க வேண்டும்" என்று மாங்குயிலும் பத்திரிகைச் செய்தியை ஊர்ஜிதப்படுத்தினுள்.

அன்று இரவு இருவரும் உணவை மறந்துவிட்டு உறங்கலாயினர். சங்கரன் மாணிக்கத்திற்கு நெருங்கிய நண்பனுக இல்லாத நிலையில், கப்பல் விபத்திற்குள்ளாகிக் காலமடைந்திருந்தான் என்ருலும், அல்லது மாணிக்கத்தின் உறவு ஏற்படாத நிலையில் செத்திருந்தான் என்ருலும் அவனது பிரிவை மாங்குயிலால்கூடத் தாங்கியிருக்கவே முடியாது. ஆனுல் மாணிக்கத்தின் ஆசைநாயகியாக வாழும்போது சங்கரன் உயிருடன் இருப்பதைவிட உயிரிழந்து போவதில்தான் அவளுக்கு விருப்பம் அதிகம்.

மாணிக்கம் பொருமிப் பொருமிக் கொண்டே புரண்டு புரண்டு படுப்பதைப்பார்த்து, அவனுக்காகப் பச்சாத்தாபப் பட்டாள். சங்கரனின் பிரிவைப் பெரிதாக எண்ணி அவன் கலங்காதிருப்பதற்கு என்னென்ன முறைகளைக் கையாளலாம் என்பது குறித்துச் சிந்தித்தபடியே படுக்கையில் படுத்திருந்தாள்.

திடீரென்று படுக்கையை விட்டு எழுந்தாள். காதலன் படும் துயரம் அவளையும் கலக்கி விட்டது. இதுகாறும் இருகிய மனதோடு விளங்கிய மாங்குயில், இறந்துபோன சங்கரனைக் குறித்து சிறிது இரக்கம் கொள்ளலானுள். நேராகப் படிக்கும் அறைக்குச் சென்று அங்கிருந்து மேசையில் விரித்துக் கிடந்த ஆல்பத்தை எடுத்து சங்கரனின் படத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள்.

'அட அபாக்கியவானே, என்னேடு இன்பமாகக் காலத்தை கடத்த வேண்டிய நீ, கடலுக்கு இரையாகி விட்டாயே? எல்லாம் உன் தலைவிதிதான்!' என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள்.

'உயிரோடு இருந்தபோது நீ என் உள்ளத்திற்கு இன்பம் அளிப்பாய் என்று எண்ணியிருந்தேன். ஆனல் நீயோ, உன் உயிரைப் பறிகொடுத்த பின்புதான் என் உள்ளத்திற்கு இனிமையை அளித்தாய். எப்படியேனும் ஒரு விதத்தில் எனக்கு இன்பமளித்த உன்னை நான் மனதார வாழ்த்துகிறேன்' என்று அப்படத்தைப் பார்த்துக் கொண்டு மெதுவான குரலில் சொன்னுள். தான் சொன்னதை யாரேனும் கேட்டிருப்பார்களோ என்று சுற்று முற்றும் பார்த்தாள். யாரையுமே காணவில்லை.

'மாணிக்கம் இளைஞனுக இருந்தபோது நான் அவன் உள்ளத்தில் நிறைந்திருந்தேன். அவனுக்கு வேண்டிய எல்லாவித உதவிகளையும் செய்து வந்தேன். இப்போது அவன் வாலிபனுகிவிட்டான். அவனுக்கு வேண்டிய உதவிகளை இனி நீதான் செய்து தர வேண்டும். அது உன் கடமையுங்கூட!' என்று மாங்குயிலைப் பார்த்து சங்கரனின் படம் பேசியது. இல்லை; பேசுவதாக அவள் உணர்ந்தாள். அச்சொற்களைச் சங்கரனே சொல்லுவதாகப் பாவித்துக் கொண்டு மாங்குயில் மன அமைதி கொண்டாள். பின்பு சங்கரனின் படத்தை ஆவலோடு முத்தமிட்டு விட்டுப் படுக்கை அறைக்குத் திரும்பி விட்டாள்.

அவள் திரும்பவும் தன் படுக்கையில் படுக்க முயற்சிக்கும்போது பொழுது நன்ருகப் புலர்ந்து விட்டது. மாணிக்கம் இன்னும் அயர்ந்து தூங்கிக் கொண்டே இருந்தான். இனித் தங்களின் வாழ்வில் சங்கரன் குறுக்கிட்டுச் சங்கடத்தை உண்டு பண்ண முடியாது என்ற திடமான நம்பிக்கையோடு மாங்குயிலும் நன்கு உறங்கினுள்.

அதற்கப்புறம் அவ்வீட்டில் எவ்வித அமளியும் இல்லை. பெரும் புயற் காற்று அடித்து ஓய்ந்து விட்டது. தென்றல் தவழ்ந்தது.

ஒரு நாள் மாணிக்கம் தன்னையுமறியாமல், "இந்த வீடு சுடுகாடாகத் தெரிகிறது", என்று கூச்சலிட்டான். சிறிது நேரத்திற்குள்ளாக, இப்படி ஏன் கத்தினேம்; எதற்காகக் கத்தினேம், என்பதை அறிய முடியாதவனுகி, அருகில்நின்று கொண்டிருந்த மாங்குயிலிடம் "பெண்ணே, என்னையும் அறியாமல் ஏதோ உளறி விட்டேன். நீ அதைப் பொருட்

படுத்த வேண்டாம். இந்த வீடு ஒரு இன்ப லோகமாகும். இதில் நாம் என்றும் இன்பமாக வாழ வேண்டும்'' என்று கூறினான்.

அவன் உள்ளத்தில் எதையும் ஒளிக்காமல் உண்மையையே பேசினான்.

அன்றாட வாழ்வில் ஏதாவது மாற்றம் உண்டென்று சொன்னால், அது மாங்குயிலின் வாழ்விலேதான் இருந்தது. பழங்கால நினைப்புக்கள் அவளைப் படாதபாடு படுத்தின. மாணிக்கத்தோடு கைகோர்த்துக் கொண்டு வீதி வழியே வரும்போது, சங்கரனின் நினைப்புக் குறுக்கிட்டு விடும். அதனால் சஞ்சலமடைவாள் மாங்குயில். தன்னைச் சங்கரன் சஞ்சலப்படுத்தி வருவதைப் போல, தான் சங்கரனின் வாழ்வில் குறுக்கிட்டுச் சஞ்சலத்தை உண்டு பண்ணினால் என்ன? என்று கூட சில வேளைகளில் எண்ணுவாள். சங்கரன் இறந்த பின், அந்தப் பிரச்னைக்கு இடமில்லை என்ற அளவில் சமாதானம் அடைவாள். என்ன இருந்தாலும் நெறி கெட்ட வாழ்வை நினைத்துப் பார்த்து, அவள் தனிமையான ஒரு இடத்தில் நின்று அழுது அழுது தன் துக்கத்தைப் போக்கிக் கொள்ளுவாள்.

ஒருநாள் மாணிக்கம் வைரம் பதித்த தங்க நகை ஒன்று வாங்கிக் கொண்டு வந்து மாங்குயிலின் கழுத்தில் அணிந்து அழகு பார்த்தான். இதுபோலவே முன்பு ஒரு தடவை சங்கரனும் செய்திருக்கிறான். அதை நினைத்துக் கொண்டு மாங்குயில் மனம் கலங்கி நின்றாள், மகிழ்ச்சி கொள்ள வேண்டிய நேரத்தில்! "உனக்கு இந்த நகை பிடிக்கவில்லையா?'' என்று கேட்டான் மாணிக்கம். மாங்குயில் பதில் சொல்லுவதற்கு வார்த்தைகள் கிடைக்காமல் திண்டாடினாள். சிறிது நேரம் சென்றதும் உள்ளத்தைத் திடப்படுத்திக் கொண்டு பேசலானாள்: "அன்பே, நீங்கள் வாங்கி வந்த நகையை நான் மிகவும் விரும்புகிறேன். எனக்காக நீங்கள் இவ்வளவு பணம் செலவழிக்கக் கூடாது. என் பொருட்டு நீங்கள் அதிகப்படியான பணம் செலவு செய்வதை நான் விரும்பவில்லை. என் பொருட்டு சிறிது கூடச் செலவு செய்யாத நிலையில், நான் உங்களைப் பெரிதும் காதலிக்கும்படி செய்ய வேண்டும். அதுதான் உண்மை

யான அன்பின் அடையாளம்.'' இப்படிச் சொல்லிவிட்டு அவள் அழ ஆரம்பித்து விட்டாள்.

விஷயத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ளாத மாணிக்கம், அவளைத் தன் கைகளால் அணைத்துக் கொண்டு, "நீ எதற்காக அழுகிருய்? உனக்கு உயர்ந்த ஆடைகளும், அணிகளும் வாங்கித்தர வேண்டியது கணவனுகிய நான் செய்ய வேண்டிய கடமையல்லவா? நீ என்னுடைய மனைவி தானே?'' என்று கேட்டான்.

மாணிக்கத்தின் கண்களில் தன் முழு உருவத்தையும் பார்த்தபடியே மாங்குயில் பதில் சொன்னுள்: "இல்லை; நான் உங்களுடைய மனைவி இல்லை.'' இவ்வார்த்தைகளைக் கேட்டதும் ஏதோ விஷப் பிராணி தீண்டி விட்டதைப் போலத் துடிதுடித்தான் மாணிக்கம். இதுவரை ஆன செலவுகளில் பேர்பாதியைப் பங்கிட்டு, தன் சொந்த வருமானத்திலிருந்து மாணிக்கத்திற்குக் கொடுத்து விட வேண்டும் என்ற தன் விருப்பத்தை வெளிப்படுத்த விரும்பினுள் மாங்குயில். ஆனுல் விருப்பத்தை வெளிப்படுத்துவதற்குரிய தைரியம்தான் அவளிடமில்லை. மாணிக்கம் கொஞ்ச நாட்கள் சென்ற பின்பு மறுமுறையாக வெல்வெட் ஆடை ஒன்றும் வாங்கிவந்தான். அப்போது அவள் சிரித்துக்கொண்டே, "அன்பே, நான் காசு பணமில்லாத ஏழை என்று கருதிவிடாதீர்கள். என்னிடமும் கொஞ்சம் பொருள் வளம் உண்டு. ஆகவே எனக்குத் தேவையான பொருள்களை நானே வாங்கிக் கொள்ளுகிறேன். எனக்கு என்ன வேண்டுமென்பது உங்களுக்குத் தெரியாது. மேலும் கடைக்காரர்கள் ஒவ்வொரு முறையும் உங்களை ஏமாற்றி விடுகிருர்கள் என்பதை நான் தெளிவாக அறிகிறேன்'' என்று சொன்னுள்.

அன்றிலிருந்து அவளுக்குரிய சாமான்களை, அவளே தேர்ந்தெடுத்துக் கொண்டாள். அவற்றிற்குரிய பணத்தை மாணிக்கம் கொடுக்க முன் வந்தால், கெட்டிக்காரத்தனமாக அவனைக் கொடுக்க விடாதபடி தடுத்து, தானே கொடுத்து விடுவாள்.

அருளகத்தில் இதுகாறும் இன்பமயமாகத் தோன்றிய வாழ்க்கை இப்போது இன்னல் மயமாக மாறிவிட்டது.

மாணிக்கம் கணவன் என்ற ஸ்தானத்தை அடைவதை அவள் கனவில் கூட விரும்பவில்லை. சங்கரன் செய்ததைப் போல இவனும் தன்னைப் புறக்கணித்து விட்டால், என்னென்ன பொல்லாங்குகள் சூழுமோ என்று பயந்த அவள், மாணிக்கத்தோடு கணவனும் மனைவியுமாக வாழ விரும்பவேயில்லை.

மாங்குயிலின் விபரீதப் போக்குக்குரிய அடிப்படைக் காரணம் என்னவென்பதை அறியாது அவதிப்பட்டான் மாணிக்கம். அவள் எதிர்பார்க்கிற அளவிற்குத் தன்னால் அவளைக் காதலிக்க முடியவில்லையோ, என்று தன்னைத் தானே சந்தேகித்துக்கொண்டான். அல்லது அவளது உள்ளம் நோகும்படியாக ஏதேனும் உபத்திரவம் செய்துவிட்டோமோ என்று சில சமயங்களில் சிந்தித்தான். எவ்வளவு முயன்றும் அவனால் சரியான விடையை அறிந்துகொள்ள முடியவில்லை.

மாங்குயில் உள்ளத்தில் எதையோ மறைத்து வைத்துக் கொண்டு, அதை வெளியே சொல்ல முடியாமல் வேதனைப் படுகிறாள் என்பதை விளக்கமாகத் தெரிந்துகொண்டான் மாணிக்கம். அவளின் அச்செயலை அவன் அறவே வெறுத்தான்.

"நான் உன்னுடைய அன்பிற்கு அருகதையற்றவனாக ஆகிவிட்டேன். உன்னை எப்படிக் காதலிப்பது என்பது எனக்குத் தெரியவில்லை. என்னிடத்தில் நீ என்னென்ன குறைகளைக் காணுகிறாய் என்பதைத் தெரியப்படுத்தினால், நான் அக் குறைகளினின்று என்னை விடுவித்துக்கொண்டு உன்னை இன்னும் அதிகமாகக் காதலிக்க முற்படுவேன்" என்று ஒருமுறை மாணிக்கம் அவளிடம் அன்புததும்பப் பேச்சுக் கொடுத்தான்.

ஆனால் மாங்குயிலோ அவனது உள்ள வேதனையை உணர்ந்துகொள்ளாமல், "நீங்கள் என்னை அளவுக்கு மிஞ்சிச் சோதிக்கிறீர்கள். உங்களிடம் அன்பில்லை என்று நான் என்றாவது கூறியதுண்டா? அப்புறமேன் என்மீது அபாண்டமாகப் பழி சுமத்துகிறீர்கள்? ஒருவரையொருவர் நன்கு தெரிந்துகொள்ளாமல் பழகுவதால் ஏற்படும் ஆபத்

துத்தான் இதற்கெல்லாம் காரணம்" என்று படாடோப மாகப் பதில் சொன்னாள்.

அவள் என்ன சொல்லுகிறாள் என்பதைக் கூட நின்று கேட்க நிதானமிழந்த மாணிக்கம், நேராகத் தன் அறைக் குள் சென்றுவிட்டான். இனி அவளைப் பற்றி அனாவசிய மாகச் சந்தேகப்படக்கூடாது என்று தனக்குள்ளாகத் தீர்மானித்துக்கொண்டான்.

மாங்குயிலின் அன்பை முழுதும் பெறமுடியவில்லை என்று கலங்கினான் மாணிக்கம். தன்னை முழுதும் ஆக்கிர மித்துக்கொள்ளும் உரிமையை மாணிக்கத்திற்குத் தரக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டாள் மாங்குயில். ஆக இருவரும் ஒன்றோடு ஒன்று பொருந்தாமல் இரு துருவங்களாகவே வாழ்ந்து வந்தனர்.

இறந்துபோன நண்பனுக்கு மரியாதை செய்ய விரும்பிய மாணிக்கம் சங்கரனின் படத்தை ஆல்பத்தி னின்று எடுத்துக் கண்ணாடி போட்டு மேசையின்மீது வைத்தான். ஏற்கனவே மாணிக்கத்தின்மீது வெறுப்புக் கொண்டிருந்த மாங்குயில், சங்கரனின் படத்தைப் பார்க்க நேரிட்டபின்பு மாணிக்கத்தின் அறைக்குள் நுழைவதை அறவே நிறுத்திவிட்டாள்.

இங்ஙனமாக வாழ்வில் வெறுப்பு வேரூன்றத் துவங்கிய நிலையில், மாணிக்கத்திற்கு ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அக் கடிதத்தில் அவன் தந்தை சாகக் கிடப்பதாகவும், ஆகவே அவன் வெற்றியூருக்கு உடனே திரும்பவேண்டு மென்பதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தது.

அக் கடிதத்தைப் படித்ததும் மாங்குயிலிடம் காட்டி விடை பெற்றுக்கொண்டு மாணிக்கம் வீடு திரும்பத் தயா ரானான். திரும்பும்போது, அடிக்கடி கடிதம் எழுதுவதா கவும், அன்பை மறந்துவிடக்கூடாது என்றும், அவளிடம் அவன் உறுதி பெற்றுக்கொண்டான்.

பூசல் குறுக்கிட்ட நேரத்தில் பிரிவு நேரிட்டதும் ஒரு விதத்தில் நல்லதாகவே முடிந்தது.

எல்லாம் நன்மைக்கே என்ற கருத்தில்தான் இருவரும் ஒருவரையொருவர் பிரிந்தனர்!

# 5

மாணிக்கம் வெற்றியூர் நகரத்திற்குப் போய்ச் சேருவதற்குள்ளாக அவனுடைய தந்தையார் இறந்துவிட்டார். உண்மையைத் தந்தியின் மூலம் தெரிவித்தால் மாணிக்கம் எதிர்பாராதவிதமான அதிர்ச்சிக்கு ஆளாகக்கூடுமென்று எண்ணி, தந்தையார் சாகக் கிடப்பதாகக் கடிதத்தின் மூலம் தெரிவித்திருந்தார்கள்.

ஜமீன்தார் சாவதற்கு முன்தினம் வழக்கமாக ஆராய்ச்சிச் சாலைக்குப் போவதைப்போல போயிருந்தார். போனவர் மத்தியான உணவுக்கோ, மாலை உணவுக்கோ திரும்பவேயில்லை. ஜெனிவீவீ எஜமானன் ஏன் இன்னும் வீடு திரும்பவில்லை என்பதை அறிந்துகொள்ள ஆராய்ச்சிக் கூடத்திற்குள் சென்று வெளிக்கதவைத் தட்டினுள். உள்ளேயிருந்து எவ்விதப் பதிலுமே கிடைக்கவில்லை. கதவே இடிந்து கீழே விழுந்துவிடும் அளவுக்குப் பலம் கொண்டமட்டும் தட்டினுள். அப்போதும் எவ்விதப் பதிலும் கிடைக்கவில்லை. ஆகவே தன்னிடமிருந்த புழக்கடைச் சாவியின் மூலம் வீட்டிற்குள் நுழைந்தாள். இரத்த வெள்ளத்திற்கு ஊடே எஜமானன் மாண்டுகிடந்தான். அப்போது அவள் போட்ட கூச்சல், அருகேயிருந்த வேலைக்காரர்கள் அனைவரையும் ஒன்று திரட்டிவிட்டது.

எஜமானன் சாவுக்கு, பொல்லாத பேய் ஒன்றுதான் காரணமாக இருக்கவேண்டும் என்ற கருத்தை எல்லோரும் ஏகமனதாக ஒப்புக்கொண்டனர். ஏற்கனவே அவ்வீட்டில் பேய் ஓட்டம் இருப்பதாக நம்பி வந்த ஊர் மக்களும்கூட, ஜமீன்தாரின் சாவுக்கும் பேய்க்கும் சம்பந்தம் உண்டு என்ற பேச்சை சரியென்றே நம்பிவிட்டனர்.

ஆனல் மருத்துவரோ ஜமீன்தாரின் சாவுக்கு வேறு ஒரு காரணம் கற்பித்தார். அவருடைய கருத்துப்படி ஜமீன்தார் ஒரு நூதனமான விஷப்பொருளை உட்கொண்டு

உயிர் துறந்து இருக்கவேண்டும். அந்த நூதனமான விஷப்பொருளை ஜமீன்தார் தன் நீண்ட ஆராய்ச்சியின் காரணமாகக் கண்டுபிடித்திருக்க வேண்டும். டாக்டரின் இந்தக் கருத்தை, படித்தவர்களும் பழமையில் நாட்டம் கொள்ளாதவர்களும் ஒப்புக்கொண்டனர். உண்மை எப்படி இருந்தபொழுதிலும் ஜமீன்தாருக்கு மாசு கற்பிக்கக்கூடாது என விரும்பிய அனைவரும், அவர் இருதயக் கோளாறினால் இறந்துவிட்டார் என்று ஊர்ஜிதப்படுத்தி விட்டனர்.

இறந்தவர்க்குரிய ஈமச் சடங்குகள் முடிந்து ஒரு மணி நேரம் காலந் தாழ்த்தி, மாணிக்கம் வீடு வந்து சேர்ந்தான். தந்தையாரின் சாவு அவனுக்குத் தாங்கொணாத துயரத்தைத் தந்தது.

ஜெனி வீ வீ மாணிக்கத்தை ஜமீன்தாரின் ஏக வாரிசாக அறிமுகப்படுத்தி அவனையும் ஜமீன்தாராக ஆக்கிவிட்டாள்.

மாணிக்கமும் ஜெனி வீ வீயும் 'வீட்டிற்குள் இருந்தபடியே எதிர்காலத்தைப்பற்றித்திட்டமிட்டுக்கொண்டிருந்த போது, வெளிக்கதவை ஒரு வேலைக்காரன் பலமாகத்தட்டினான். 'ஏன்' என்று விசாரித்தபோது, யாரோ ஒரு ஆசாமி மாணிக்கத்தைத் தேடிக்கொண்டு வந்திருப்பதாக வேலைக்காரன் அறிவித்தான். மாணிக்கம் மேல் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து பார்த்தபோது. ஒரு டாக்டர் நின்று கொண்டிருந்தார், மாணிக்கத்தின் தந்தையார் இறந்ததற்கு இருதய நோய்தான் காரணம் என்று சான்றுப் பத்திரம் வழங்கிய ஆசாமி அந்த டாக்டர்தான். டாக்டர், மாணிக்கத்திடம் உண்மையை மறைத்து வைக்கக்கூடாது என்ற எண்ணத்துடன் அவனைத் தனியே அழைத்துச் சென்று தந்தையாரின் சாவுக்குக் காரணம், இருதய நோய் அல்லவென்பதையும், அவர் தற்கொலை செய்துகொண்டே இறந்துவிட்டார் என்பதையும் தெரியப்படுத்திவிட்டார்.

டாக்டர் தன்னிடம் கொண்ட உண்மையான அன்புக்காக அவருக்கு நன்றி செலுத்திவிட்டு, அங்கிருந்து புறப்படத் தயாரானான் மாணிக்கம். ஆனால் அவனைத் தடுத்து நிறுத்திவிட்டார் டாக்டர்.

டாக்டர் அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இறந்துபோன ஜமீன்தாரின் இரசாயனச் சாலையைச்

சுற்றிப் பார்த்துவிட விரும்பினர். மாணிக்கம் டாக்டரின் மேல் கொண்டிருந்த அபிமானத்தின் காரணமாக, அவரை அழைத்துச் செல்ல ஒப்புக்கொண்டான்.

ஆராய்ச்சிச் சாலைக்குரிய சாவிக்கொத்துகளை கையில் எடுத்துக்கொண்டு டாக்டரையும் அழைத்தபடியே புறப் பட்டான். ஆராய்ச்சிச் சாலையைத் திறந்து டாக்டரும் மாணிக்கமும் ஏறத்தாழ எல்லா இடத்தையும் சுற்றிப் பார்த்துவிட்டனர்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு அவன் தன் தந்தையா ருடன் நுழைந்தபோது இருந்த மாதிரியாக, அப்போது அந்த ஆராய்ச்சிச் சாலை இருக்கவில்லை. அங்கிருந்த ஒவ் வொரு பொருளும் அவனுக்கு அதிசயத்தையும், ஆச்சரி யத்தையும் உண்டுபண்ணின. மேலும் அப்பொருள்கள் கண்ணுபின்னுவென்று சிதறிக் கிடந்தன. போதாக் குறைக் குச் சில பாத்திரங்கள் உடைந்து தூள் தூளாகக் கிடந்தன.

இவற்றையெல்லாம் பார்த்த மாணிக்கத்திற்கு அழுகை வந்துவிட்டது. தன் தந்தையாரின் பைத்தியக்காரத்தனத்தை எண்ணிக் கண்ணீரை ஆறுக வடிக்கலானுன். ஒருமுறை அவன் தந்தையார், 'நான் இந்த ஆராய்ச்சிச்சாலையில்தான் என் உயிரை மாய்த்துக்கொள்ளப் போகிறேன்' என்று சொன்ன வார்த்தைகள் அவன் காதுகளில் ரீங்காரம் செய் யத் துவங்கின. தனிமையில் இருந்த தணியாத ஆசையின் காரணமாகவும், பலருடன் பாசத்தோடு பழகாததின் காரணமாகவும், ஜமீன்தார் ஏன் இறந்தார் என்பதை யாராலுமே தீர்மானிக்க முடியவில்லை. ஆனுல், அங்கு ஒரே ஒரு சாமான் மட்டும் அழகு குலையாமல், வைத்தது வைத்தபடியே விளங்கியது. அதன்கீழ் 'நச்சுப் பொருள்கள்' என்று எழுதித் தொங்கவிட்டிருந்தார். நச்சுப் பொருள்கள் என்ற பெயரைப் படித்ததும் நடுநடுங்கிய மாணிக்கம், அவற்றை நெருங்குவதற்குப் பயந்தவண்ணம் அங்கிருந்து அகன்றுவிட்டான். ஏறத்தாழ எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்துவிட்ட பின்பு, டாக்டர் மாணிக்கத்தைப் பார்த்து, "உன் தந்தை ஒரு பைத்தியக்கார மனிதன். அவரது செய்கைகளை எவனுலுமே அறிந்துகொள்ள முடியாது" என்று தன் ஏமாற்றத்தை வெளிப்படுத்தினர்.

அவர்கள் கீழே இறங்கி வந்தபோது இரண்டாவது விருந்தாளி ஒருவர் காத்துக் கொண்டிருந்தார். அவர் வெற்றியூர் நகரத்தைச் சேர்ந்த ஒரு நீதிபதி. அவர் இறந்து போன ஜமீன்தாரின் உடமைப் பொருள்களைப் பாதுகாப்ப தற்காக வந்திருப்பதாகத் தெரிவித்துக்கொண்டார். உண்மை யான வாரிசுதார் யார் என்பதைத் தீர்மானிக்கும் காலம் வரையிலும், பொருள்கள் அனைத்தும் தம் மேற்பார் வையிலேயே இருக்கு மென்பதையும் தெரியப்படுத்திக் கொண்டார்.

மாணிக்கம் தன் தந்தையார் தன் பெயருக்கு எழுதி வைத்திருந்த உயிலை எடுத்து வந்து நீதிபதியிடம் கொடுத்து, ஜமீனைப் பொறுத்த வரையில் தான்தான் ஏக வாரிசு என்பதை நிரூபிக்கலானான், நீதிபதியும் மாணிக் கத்தை வாரிசாக ஒப்புக் கொண்டு அங்கிருந்து போய் விட்டார்.

மாணிக்கம் வீடு திரும்பியபோது அவனுக்கு ஆறுதல் சொல்லுவதற்காக அநேகர் காத்துக் கொண்டிருந்தனர். மேலும் அனுதாபக் கடிதங்கள் ஆயிரமாயிரமாக வந்து குவிந்தன. தந்தையார் உயிருடன் இருந்தபொழுது தன்னை ஒரு மனிதனாகக்கூட மதிக்காத உற்றாரும் உறவின ரும் இப்போது அவனுக்கு ஆறுதல் சொல்லுதற்கு ஆவ லோடு முன்வந்தனர். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பும் உறவினர்களின் மோசவலையில் வீழ் வதற்கு விரும்பாத மாணிக்கம், ஜெனி வீ வீயிடம் எல்லாப் பொறுப்புகளையும் ஒப்புவித்துவிட்டு ஒதுங்கி இருக்க லானான்.

ஜமீன்தார் சாகும்போது மாணிக்கத்திற்கு ஒரு உயிலை எழுதி வைத்தது போலவே ஜெனி வீ வீக்கும், சில பொருள்களை எழுதி வைத்திருந்தார். அப்பொருள்களிலி ருந்து கிடைக்கும் வருமானத்தைக் கொண்டே அவள் ஆயுள்காலம் பூராவும் ஆனந்தமாக வாழலாம் என்றாலுங் கூட, பாடுபட்டு வேலை செய்து தன் வயிறை வளர்க்கவே ஜெனி வீ வீ விரும்பினாள். ஆகவே, அவளிடம் வீட்டு விவ காரங்களைப் பொறுத்த வரையில் எல்லாவிதப் பொறுப்புக் களையும் கொடுத்திருந்தான்.

வீட்டுத் தொல்லைகளை ஒருவாறு சமாளித்துவிட்டு மாணிக்கம் தனிமையிலே இருக்கும்போது தன் தந்தையார் ஏன் தற்கொலை செய்து கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியும், இரசாயனச் சாலையில் தான் கண்ட நச்சுப் பொருள்களைப் பற்றியும் தீவிரமாகச் சிந்திக்கலானான். இத்தகைய சிந்தனைகளிலிருந்து விடுபடுவதற்கும், இன்பமாக வாழ்வதற்கும் மாங்குயிலின் உறவை அவன் பெரிதும் விரும்பினான். மாங்குயிலுக்கு ஒரு கடிதம் எழுதி உடனே புறப்பட்டு வந்து சேரும்படி கேட்டுக் கொண்டான்.

அக் கடிதத்தைக் கண்டதும் மாங்குயில் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டாள். 'அருளக' மாளிகையில் சங்கரனின் பேய்த் தோற்றம் நிறைந்திருந்ததால், அம் மாளிகையை விட்டுவிட்டு வெற்றியூருக்குப் புறப்படுவது அவளுக்கு அளவிலாத ஆனந்தத்தையே கொடுத்தது. பதினைந்து நாட்கள் தனிமையிலே சங்கரனைப்பற்றி எண்ணி எண்ணிச் சங்கடப்பட்டுக் கொண்டிருந்த மாங்குயில், மாணிக்கத்தை நோக்கி விருப்பத்தோடு புறப்படலானாள்.

மாங்குயிலின் வருகைக்காக ரயில்வே நிலையத்தில் மாணிக்கம் காத்துக்கொண்டிருந்தான். எதிர்பார்த்தது போல மாங்குயிலும் வந்து சேர்ந்தாள். இருவரும் வெற்றியூரில் இல்லற வாழ்வைத் துவங்கினர்.

அப் பகுதியினருக்கு மாங்குயில் ஒரு விருந்தாளியாகவே தோன்றினாள். முன்பு ஒரு தடவை இறந்துபோன ஜமீன்தாருடன் கோபித்துக்கொண்டு ஜெனி வீ வீ தனிமையிலே வாழ்ந்து வந்த ஊரின் ஒதுப்புறமாக இருந்த கட்டிடத்தில், மாங்குயில் தங்கலானாள். மாளிகையிலேயே தங்கலாம் என்ற மாணிக்கத்தின் விருப்பத்திற்கு அவள் இணங்கவேயில்லை.

காரணம் ஊரார் தன்னைப்பற்றி இல்லாததையும் பொல்லாததையும் சொல்ல நேரிடுவதை அவள் விரும்பவில்லை. மேலும் தன் வருகையால் மாணிக்கத்தின் பெயருக்கு இழுக்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்று ஆசைப்பட்டாள். ஆகவேதான் அவள் மாணிக்கத்தினிடமிருந்து விலகி ஊரின் ஒதுப்புறமாக வாழலானாள்.

வெற்றியூர் நகரத்திலேயே, மாணிக்கத்தினிடமிருந்து விலகி வாழ்ந்தாலுங்கூட ஊரார் அவச்சொல் பேசுவதை கட்டுப்படுத்தமாட்டார்கள் என்பதைப் புரிந்துகொண்ட மாங்குயில் அருகேயிருந்த வேறு ஒரு ஊருக்குப் போய்விட ஆசைப்பட்டாள்.

அவளது ஆசையை ஆமோதித்த மாணிக்கம், அவளை யும் அழைத்துக்கொண்டு பக்கத்துக் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு ஒரு ஓட்டலில் தங்கலாமா என்பது குறித்து இருவரும் யோசித்தனர். இறுதியில் ஒரு பண்ணை வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அவள் தனித்து வாழலானாள். ஆறு மாத காலத்துக்கு வாடகைப்பத்திரம் எழுதப்பட்டது. அந்தவீடும் அதைச் சுற்றியிருந்த பண் ணையும் அவளுக்குப் பரம திருப்தியளித்தன. 'இது என் வீடு. இந்த வீட்டுக்கு நானே சொந்தக்காரி' என்று பல தடவை சொல்லிக்கொண்டாள்.

ஓய்வு கிடைத்தபோதெல்லாம் மாணிக்கம் மாங் குயிலைத் தேடிக்கொண்டு ஓடிவருவான். மாங்குயிலும் மாணிக்கமும் உல்லாசமாகப் பொழுதைப் போக்குவார்கள். ஊர்க் கதைகளை விடிய விடியப் பேசுவார்கள். பின்பு மாணிக்கம் வீடு திரும்பி விடுவான். இது அவர்களுக்கு வாடிக்கையாகிவிட்டது.

மாணிக்கத்தினிடமிருந்து எவ்விதப் பொருளையும் பெற் றுக்கொள்ளாமலேயே தன் கைப்பொருளைச் செலவு செய்து அந்தப் பண்ணை வீட்டை அழகுபடுத்தி இருந்தாள் மாங் குயில். சிலகாலம் இப்படியாக இன்பமயத்தோடு வாழ்ந்து வந்த மாணிக்கம், மாங்குயிலைத் தன் மனைவியாக்கிக் கொள்ளவேண்டுமென்று உறுதியான தீர்மானத்திற்கு வந்து சேர்ந்தான், அவளது அடக்க ஒடுக்கமான சுபாவ மும், அறிவு மிகுந்த பண்பாடும் அவனை வெகுவாகக் கவர்ந்திருந்தன. மேலும் பருவக் கோளாறு அவனைப் படாதபாடு படுத்திற்று. ஆகவேதான் அவன் அவளை மனைவியாக்கிக்கொள்ள உறுதிகொண்டான்.

ஒருமுறை அருகிருந்த பண்ணையாள் ஒருவனின் பிள்ளை யைத் தூக்கிக்கொண்டு வந்து மாங்குயில் சிறு குழந்தை

யைப்போல சிரித்து விளையாடிக்கொண்டிருந்தாள். அப்போது அங்கு வந்துசேர்ந்த மாணிக்கம், "நமக்கும் இப்படி ஒரு பிள்ளை வேண்டாமா?" என்று கேட்டான். அதற்குப் பதில் சொல்லாமலேயே மாங்குயில் முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே ஓடிவிட்டாள். தன் கருத்தை அவள் விரும்புகிருளா, வெறுக்கிருளா என்பதைப் புரிந்து கொள்ளமுடியாத நிலையில் வேதனைப்பட்டான் மாணிக்கம்.

குளிர்காலம் நெருங்கிக்கொண்டிருந்தது. காதலின் வெம்மையைக் கொண்டு குளிர்காலத்தின் கூதலைக் குறைத்துக்கொள்ள விரும்பிய மாணிக்கம், மாங்குயிலிடம் திரும்பவும் தன் கல்யாண விஷயத்தைப் பேச முன்வந்தான்.

இவ் விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்கு முதலில் அவன் பயந்தான் என்ருலுங்கூட, காதலின் வேகம் அவன் பயத்தை அறவே அகற்றிவிட்டது. வருங்காலத்தைப் பற்றி அவன் அடிக்கடி சிந்திக்கும் சுபாவமுடையவன்.

அவனது புதிய போக்கைக் கண்டு அவள் அசையாத பதுமையாக நின்றுகொண்டிருந்தாள். மீறி எழுந்த விம்மலைக்கூட கையில் இருந்த கை குட்டையால் அழுத்தி அடக்கிக்கொண்டாள். அவளைத் தன் அருகே அழைத்துக் கையோடு கை கோர்த்துக்கொண்டு, தன் விருப்பத்தை மெதுவான குரலில் வெளிப்படுத்தினன்.

உடலிலிருந்த வலுவையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு அவள் அவனுக்குப் பதில் சொன்னுள்:—"நாம் இன்று வாழ்வதுபோல எப்போதும் தனித்தனியாகவே வாழ வேண்டும். நான் உங்களைக் காதலிக்கிறேன். நீங்களும் என்னைக் காதலிக்கிறீர்கள். காதலைக் கல்யாணமென்ற கயிற்ருல் கட்டி பலப்படுத்த நினைப்பது பைத்தியக்காரத்தனமாகும். நான் உங்களைக் குறைகூறுவதாகக் கருதாதீர்கள். கல்யாணம் செய்துகொண்ட பின்பு என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லை என்ருல், உங்கள் காதலின் அளவு சிறிது குறைந்துவிடும். அப்போது நான் அளவிலா சங்கடத்திற்கு ஆளாக நேரிடும். ஆகையால் தம்பதிகளாக வாழ்வதைவிடக் காதலர்களாக வாழ்வதுதான் நம்மைப் பொறுத்தவரையில் நன்மை பயப்பதாகும்."—இப்படிச்

சொல்லிவிட்டு அவள் அவனது முகத்தில் தோன்றிய கடுமையை மறைப்பதற்காக புன்னகை பூத்து நின்றாள். அவள் மனதை எப்படியாவது மாற்றிவிடலாம் என்று எவ்வளவோ வழிகளில் முயன்றும், முடியாத காரணத்தால் வேதனை கொண்டான் மாணிக்கம்.

‘நீ இல்லை என்றால் எனக்கு இந்த உலகமே இல்லை. இந்த உலகத்திலே எனக்கு இஷ்டமான ஒரே பொருள் நீதான். நீ என்னை விட்டு விலகி வாழ விரும்பினால், நான் இந்த உலகத்தை விட்டே விலகிவிட வேண்டியது தான். நீ என் உள்ளத்தில் எழுப்பிவந்த இன்பக் கனவுகளுக்காக உனக்கு நன்றி செலுத்துகிறேன். என்னை வாழ வைப்பதும், மாள வைப்பதும் உன் கையில்தான் இருக்கிறது. என்னை மறுக்காதே. நாம் காதலிக்கிறோம் என்பதற்கு ஒரே முத்திரைதான் கலியாணம். ஆகவே, நம் கல்யாணத்தை நீ உதறித்தள்ளாதே. இதுதான் நான் உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்வது எல்லாம்’’ என்று கூறினான் மாணிக்கம்.

மாணிக்கத்தின் வார்த்தைகளைக் கேட்டு அதிசயத்தாலும், ஆத்திரத்தாலும் மோதுண்ட மாங்குயில், ‘‘நீங்கள் சிறுபிள்ளைத்தனமாகப் பேசுகிறீர்கள். முன்பின் தெரியாத ஒருத்தியை நீங்கள் எப்படி மணந்துகொள்ள முன்வரலாம்? நான் யார்? நான் எங்கிருந்து வந்தேன்? என் குடும்ப சரித்திரம் என்ன? என் முந்திய வாழ்க்கைச் சம்பவங்கள் என்னென்ன? இதையெல்லாம் புரிந்து கொள்ளாமல், ஏன், அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையே இல்லாமல் நீங்கள் கலியாணம் செய்துகொள்ள விரும்புவது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா?’’ என்று கேள்விக்குமேல் கேள்வி கேட்டுக்கொண்டே போனாள்.

அவளை மேலும் பேசவிடாமல் இடைமறித்து, ‘‘போதும் நிறுத்து. நான் உன்னை நன்கு அறிவேன். நீ என்னைவிட அறிவாலும், திறத்தாலும் மேம்பட்டவள். உன் வாழ்வில் நீ ஒரு குற்றத்தைக்கூடச் செய்திருக்க முடியாது. மேலும், பழமையைப்பற்றிய அக்கரை எனக்குக் கிடையாது. வருங்காலம் இன்பமாக அமைய வேண்டும். அது உன்னால்தான் அமைய முடியும். ஆகையால்தான் நான்

உன்னை மணந்துகொள்ள விரும்புகிறேன்" என்று தன் கருத்தை வெளிப்படுத்தினான் மாணிக்கம்.

அவனது பேச்சு மாங்குயிலைப் பொறுத்தமட்டில் எவ் வித மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. அவள் அவனைப் பார்த்து, "நான் சொல்லுவதை நீங்கள் கூர்ந்து கவனியுங் கள். நீங்கள் பணக்காரர். மேலும் நீங்கள் இளைஞர். நீங்கள் சீரும் சிறப்பும் உள்ளவர். நான் உங்களுக்குத் தகுதியற்றவள் என்பதை என்றாவது ஒரு காலத்தில் உண ரக் கூடும். நானோ ஏழை. ஒன்றுமில்லாதவள். அப்போது என்னை நீங்கள் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டால், நான் நடுத்தெருவில் நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிடும். நான் வெளிப்படையாகப் பேசுகிறேன். எதையும் ஒளித்து மறைக்கவில்லை. என்னிலும் சிறந்த பணக்காரியை மணந்துகொண்டு, இன்னும் சீமானாக வாழ்ந்திருக்க முடியு மென்ற எண்ணம் உங்கள் உள்ளத்தில் தோன்றிவிட்டால், என் வாழ்வு தாழ்வாகிவிடும். ஆகவேதான் நான் உங்கள் தீர்மானத்தை மாற்றிக்கொள்ளும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று சொன்னாள்.

அவளது வார்த்தைகள் அவனது கண்களிலிருந்து நீரை வரவழைத்துவிட்டன. மாணிக்கத்தின் காதலை அதிகப்படுத்த வேண்டுமானால், இதைவிட அழகான வேறு வழியே கிடையாது.

"உன்னை அதட்டிக் கேட்க இந்த உலகத்தில் ஆளே கிடையாது. நானும் உன்னைப் பொறுத்தவரையில் ஒரு அடிமையே. ஆகவே என் பேச்சுக்களுக்கு தயவு செய்து மதிப்புத் தா. பழங்காலத்தைப் பற்றியோ, அல்லது கடந்துபோன சம்பவங்களைப் பற்றியோ கவலைப்படவேண் டாம். நீ யாரையேனும் ஒருவனைக் காதலித்திருந்தாலும் சரி, அல்லது வேறு யாராவது ஒருவன் உன்னைக் காதலித் திருந்தாலும் சரி, நீ அவனை மறந்துவிட்டு என் அன்பை ஏற்றுக்கொள். நானும் கணவனை இழந்த விதவையை காதலித்து ஏற்றுக் கொள்ளுவதைப்போல உன்னை ஏற் றுக் கொள்ளுகிறேன்" என்று சொன்னான். விதவை என்ற வார்த்தை அவளுக்கு பெரியதொரு வேதனையைத் தந்தது.

இருள் சூழ்ந்துகொண்டு வரவே, அவள் அவனை அழைத்து, "இன்று நாம் இந்த அளவோடு பேச்சை நிறுத்

திக் கொள்ளுவோம். என்னுடைய அபிப்ராயத்தை நாளை உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன்'' என்று சொன்னாள்.

மாணிக்கம் அவளது கைகளைப் பற்றி முத்தமிட்டு விட்டு, எதுவுமே சொல்லமுடியாமல் ஏக்கத்தோடு பிரிந்து விட்டான். அவளும் பேச வார்த்தைகள் கிடைக்காமல் திண்டாடினாள். இப்படியாக இருவரும் பிரிந்தனர்.

மாங்குயில் இரவெல்லாம் தூங்காமல் மாணிக்கத்தின் அபிப்ராயத்தை எல்லாக் கோணங்களிலும் சிந்தித்துப் பார்க்கலானாள். காதலனைக் கணவனுக்கிக்கொள்ளும் எண்ணம் அவளுக்குக் கசப்பையே தந்தது. தன் உறுதியான கருத்தை மாணிக்கத்திடம் எப்படித் தெரிவிப்பது என்பது குறித்து வேதனைக்குள்ளானாள்.

'அவள் யாருக்காக பயப்படவேண்டும்? அவளைக் கட்டுப்படுத்த யார் இந்த உலகத்தில் இருக்கிறார்கள்' என்றெல்லாம் மாணிக்கம் சொன்ன வார்த்தைகள் அவள் காதுகளில் ரீங்காரம் செய்தன. 'சங்கரன்! அவனுக்கு நான் பயப்படுகிறேன். அவன் என்னை எல்லாவிதத்தாலும் கட்டுப்படுத்த முடியும். அவனுக்கு நான் அடிமை. அவன் என் எஜமானன். அவன் செத்துவிட்டான். இருந்தாலும் அவனின் பேய் உருவம் என்னைப் பயமுறுத்துகிறது' என்றெல்லாம் தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள் மாங்குயில்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. இரவெல்லாம் தூங்காத காரணத்தால் மாங்குயில் பொழுது புலர்ந்ததும் நன்கு கண் அயர்ந்துவிட்டாள். அவளது கனவில் சங்கரன் தோன்றினான். மாணிக்கமும் அவளும் மண அறையில் அடுத்தடுத்து நிற்பதைச் சங்கரன் பார்த்தான். உள்ளம் பதறினான். மாங்குயிலைக் கொல்ல முன் வந்தான். 'ஐயோ' என்று அலறிக்கொண்டு மாங்குயில் படுக்கையைவிட்டு எழுந்தாள். இதுகாறும் தான் கண்டது கனவு என்பதைத் தீர்மானமாகத் தெரிந்துகொண்ட பின்புதான் அவளது உள்ளப் பதட்டம் ஓய்ந்தது.

'சங்கரனை அறவே மறந்து சந்தோஷமாக வாழ விரும்பினால், அவனுக்கு அளித்த ஸ்தானத்தை மாணிக்கத்

திற்கு அளிப்பதுதான் சரியான வழி. அதாவது: மாணிக்கத்தை மணந்துகொள்ளுவதின் மூலமே சங்கரனை மறந்து விடமுடியும்,' என்ற புதிய எண்ணம் அவளது உள்ளத்தில் ஊசலாடத் துவங்கியது.

மாலைப் பொழுது நெருங்கவே மாங்குயிலைத் தேடிக் கொண்டு ஓடி வந்தான் மாணிக்கம், அவனை அன்போடு வரவேற்று அணைத்துக்கொண்டு "அன்பே, நான் உங்களின் மனைவியாக ஆகிவிடச் சம்மதிக்கிறேன். உங்களைக் கல்யாணம் செய்துகொள்வதற்கு நான் தயாராக இருக்கிறேன்," என்று முந்திக்கொண்டு தன் கருத்தைத் தெரியப்படுத்தினுள் மாங்குயில்.

அவ் வார்த்தைகளைக் கேட்டதும் மாணிக்கம் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே கிடையாது. கரை புரண்டோடும் ஆறு, மரங்களை உருட்டித் தள்ளிக்கொண்டு ஓடுவதைப் போல களிப்புக் கரைபுரண்டோடிய காரணத்தால், மாணிக்கம், மாங்குயிலைத் தூக்கிக்கொண்டு அங்குமிங்கும் ஓடினுன்.

மறுநாளே திருமணத்திற்குரிய ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்யத் துவங்கினுன் மாணிக்கம். ஜெனி வீ வீயிடம் தான் கல்யாண விஷயத்தை முதன் முதலாகத் தெரியப்படுத்தினுன். ஆனுல் அந்தக் கிழவியோ, "ஊர்ப் பேச்சு உண்மையாகிவிட்டது. ஏதோ பொல்லாத காலம்" என்று தனக்குள்ளாகச் சொல்லிக்கொண்டாள்.

கிழவி சொன்ன வார்த்தைகளிலிருந்து தனக்கும் மாங்குயிலுக்கும் இருக்கும் உறவை ஊர் மக்கள் அனைவரும் அறிந்திருக்கிறுர்கள் என்ற உண்மையைப் புரிந்துகொண்டான். ஆனுல் அவன் ஊராரை லட்சியம் செய்யவில்லை.

சில வாரங்கள் சென்றன. இரகசியமாக அவர்களின் திருமணம் முடிந்துவிட்டது. ஊரிலுள்ள ஒரு சில சோம்பேறிகளுக்கு மட்டும் இவ்விஷயம் வெளிப்படையாகத் தெரிந்திருந்தது.

'அறிவகம்' என்ற மாளிகையில் அவர்கள் தங்களின் இல்லற வாழ்வைத் துவங்கினர்.

# 6

நான்கு ஆண்டுகள் அமைதியும் இன்பமும் சிறக்க இனிதே கழிந்தன. 'அறிவகம்' என்ற மாளிகையில் தம்பதிகள் இனிய முறையில் வாழ்ந்து வந்தனர். இன்னும் இன்பமாக வாழவேண்டும் என்ற கருத்தோடு, இத்தாலிய தேசத்திற்காவது, ஜெர்மன் தேசத்திற்காவது உல்லாசப் பிரயாணம் போய்வரவேண்டுமென்று அவர்கள் அடிக்கடி திட்டமிடலாயினர். ஆனால் இப்போது அடைகின்ற இன்பத்தைவிட, வெளிநாட்டுப் பிரயாணத்தின்மூலம் அதிகப்படியான இன்பத்தை அடைந்துவிட முடியாது என்று அவர்கள் உள்ளூர எண்ணியதால் பிரயாணத்தைத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தனர்.

மேலும், நகர வாழ்வு அவர்களுக்கு வெறுப்பையே ஊட்டி வந்தது. ஆகவே வெற்றியூர் நகரத்தை விட்டுவிட்டு அவர்கள் சென்னை நகரத்திற்குச் செல்லவேயில்லை. சென்னையில் இருந்த 'அருளகம்' என்ற மாளிகை நெடுங்காலமாகப் பூட்டியே கிடந்தது.

ஊராருக்குப் பயந்து ஊரின் ஒதுக்புறமாகவும், ஊரையடுத்த சிறு கிராமத்திலும் வாழ்ந்துவந்த மாங்குயில், மாணிக்கத்தின் மனைவியாக ஆகிவிட்ட பின்னர், வெற்றியூர் நகரத்துச் சொத்துக்களுக்கெல்லாம் தானே உரிமையாளர் என்ற கருத்தோடு வீறுடன் வாழ்ந்து வந்தாள்.

மனித சஞ்சாரமற்ற 'அறிவகம்' என்ற மாளிகையின் அமைப்பு, அவளுக்கு அகமகிழ்வைத் தந்தது. ஆங்காங்கு சில பகுதிகளைமட்டும் இடித்துத் தள்ளிவிட்டுக் காலத்திற்கு ஏற்றபடி புதிதாக அமைத்துக்கொண்டனர். தங்கியிருந்த மாளிகை மிகப் பெரிதாக இருந்தமையால் அதில் சில பகுதிகளைமட்டும் உபயோகத்திற்கு வைத்துக்கொண்டு, ஏனையப் பகுதிகளைப் பூட்டியே வைத்திருந்தனர். அம்மாளிகையை நான்கு முறைகள்தாம் மாங்குயில் முழுதும் சுற்றிப் பார்த்திருக்கிறாள்!

கெடிகாரமும் தன் வேலையைக் கணத்திற்குக் கணம் தவருது செய்து வருவதைப்போல, மாங்குயிலும் மாணிக்க மும் அவரவர்கள் வேலையை ஒழுங்காகச் செய்துவந்தனர். நேரத்தைச் சொல்லிவிட்டால் அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிருர்கள் என்பதைத் தப்பில்லாமல் சொல்லி விட முடியும். வேலைகள் ஒய்ந்த பிறகு அவர்கள் இரு வரும் உல்லாசமாகப் பேசிக்கொண்டே பொழுதைப் போக்கி விடுவார்கள்.

'அறிவகம்' என்ற மாளிகையில்தான் அவர்கள் பெரும் பாலும் தங்கியிருப்பார்கள். ஏதாயினும் மாற்றம் தேவை யென்று உணர்ந்தால், ஊரின் ஒதுப்புறமாக இருந்த சிறு குடிசை வீட்டுக்குச் சென்று விடுவார்கள். அக் குடிசையி லும் அவர்கள் தங்களுக்குத் தேவையான படுக்கை முதலிய வற்றை எப்பவும் தயாராக வைத்திருந்தனர். மாங்குயி லைக் கல்யாணம் செய்துகொள்ளும் போதுதான் அவன் அக் குடிசையை விலைக்கு வாங்கினுன். அதற்கப்புறம் அநேகர் அதனை விலைக்கு வாங்க முன்வந்தனர். ஆனல் மாணிக் கமோ விலைக்குக் கொடுக்கத் தயாராயில்லை. மேலும் தன் வேலைக்காரர்களுக்கெல்லாம் அக் கட்டிடத்தைத் தூய்மை யாகப் பாதுகாக்க வேண்டுமென்ற கட்டளையையும் போட் டிருந்தான். எத்தனையோ இராப் பொழுதுகளையும், பகற் பொழுதுகளையும் தம்பதிகள் இச்சிறு வீட்டில் இன்பமாகக் கழித்திருக்கிருர்கள்.

''உள்ளத்திற்கு உற்சாகம் தேவை என்றுல், நாங்கள் குடிசை வீட்டிற்குள் குடியேறிவிடுவோம்'' என்று மாணிக்கம் சில சமயங்களில் சொல்லுவதுண்டு.

திருமணமாகி ஓராண்டு கழிந்துவிட்டது. மாங்குயில் ஒரு பெண் பிள்ளைக்குத் தாயாகிவிட்டாள். பிள்ளையைப் பெற்றதும் மாணிக்கம் அடைந்த ஆனந்தம் அளவிறந்த தாகும். பிள்ளைப்பேற்றைத் தந்ததின்மூலம் ஆண்டவன் தங்களுக்குப் பெரும் பாக்கியத்தைத் தந்துவிட்டான் என்று நம்பினர் அத் தம்பதிகள் இருவருமே!

மாங்குயில் திடகாத்திரத்தோடு இருந்தாலுங்கூட பிள்ளைக்குப் பாலூட்டும் வலுவை இழந்தவளாகவே

விளங்கினாள். ஆகவே அப் பிள்ளையைத் தன் வீட்டுப் பண்ணைக்காரன் ஒருவனின் மனைவியிடம் கொடுத்துப் பாலூட்டி வளர்க்கும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப் பிள்ளைக்கு பெற்றவர்கள் இட்ட பெயர், **தேன்மொழி** என்பதாகும். வீட்டு வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு மாலை நேரத்தில் ஒருவரோடொருவர் கை கோர்த்துக் கொண்டு தேன்மொழியைப் பார்த்து வருவதற்காக நித்தமும் போய்வருவார்கள்.

பிள்ளையும் பையப் பைய வளர்ந்து வரலாயிற்று. பெற்றவர்களைவிடப் பாலூட்டி வளர்த்த தாயிடம் அதிக காலம் வாழ்ந்து வந்தாலுங்கூட, பெற்றவர்களைக் கண்டதும் பிரியத்தோடு ஓடி அணைத்துக்கொள்ளும். எப்போதாவது தன்னைப் பார்ப்பதற்குப் பெற்றோர்கள் வந்து சேரவில்லை என்றால், அப்போது அப்பிள்ளை பெரிதும் கலங்கிக் கண்ணீர் வடித்து நிற்கும்.

தேன்மொழியின் தோற்றம் பார்ப்பவர்களையெல்லாம் பரவசப்படுத்திவிடும் என்றால், பெற்றவர்களைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

பெற்றவளின் தோற்றத்தில் பிள்ளையும், பிள்ளையின் தோற்றத்தில் பெற்றவளும் உயிரையே வைத்திருந்தார்கள். தேன்மொழியின் ஒவ்வொரு சொல்லும் மணிபோல 'கணீர்' என்று ஒலிக்கும். அவளது ஒவ்வொரு அங்கமும் மாவினால் திரட்டப்பட்ட பதார்த்தம் மாதிரி, கொழுகொழுவென்று இருந்தன. சிறு வயதில் அவளின் அழகைப் பார்த்தவர்கள் பருவ காலத்தில் அவள் எத்தகைய எழிலோடு விளங்குவாள் என்பதை எண்ணி ஏக்கத்தில் ஆழ்ந்துவிடுவர்.

தேன்மொழியை உள்ளத்தாலும், உடலாலும் வலுவுள்ளவளாக வளர்க்கவேண்டுமென்பதில் மாணிக்கம் கண்ணும் கருத்துமாக இருந்தான். தேன்மொழியைத் தன் இடுப்பில் எடுக்கிக்கொள்ள நேர்ந்தபோதெல்லாம் தங்கப் புதையலை அள்ளிக் கொண்டதைப்போல மாணிக்கம் ஆனந்தப்படுவதுண்டு. 'உலகத்திலேயே தேன்மொழியைப் போன்று அழகிலும் அறிவிலும் சிறந்த வேறு

பிள்ளை பிறந்திருக்கவே முடியாது' என்று கூட அவன் சில சமயங்களில் நினைப்பதுண்டு.

பாலூட்டி வளர்க்கவேண்டிய பருவ நிலையைக் கடந்து விட்டாள் தேன்மொழி. ஆகவே அவளை மாணிக்கம் தன் வீட்டிற்கு அழைத்து வந்துவிட்டான். எனவே 'அறிவகம்' என்ற மாளிகையில் மூன்று ஜீவன்கள் வாழ்ந்து வந்தன: தேன்மொழி, மாங்குயில், மாணிக்கம்!

மாங்குயிலின் ஒவ்வொரு ஆசையும் மாணிக்கத்தைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு சட்டமாகும். அச் சட்டத்தை மீறுவதற்கு அங்கு யாருக்குமே அதிகாரம் கிடையாது.

ஜெனி வீ வீ மத சம்பந்தப்பட்ட விஷயங்களில் தீவிர வாதியாக இருந்தமையால், மாங்குயிலுக்கும் அவளுக்கும் சில்லரைச் சச்சரவுகள் ஏற்படுவதுண்டு. கூடுமானவரை யில் மாங்குயிலும் ஜெனி வீ வீயும் ஒதுங்கியே வாழ்ந்து வந்தனர். மாங்குயிலின் வருகையை முதலில் வெறுத்துப் பிறகு சமாதானம் அடைந்துவிட்ட ஜெனி வீ வீ, இப் போது தேன்மொழியின் வருகையைக் கண்டதும் அள வுக்கு மிஞ்சிய ஆத்திரங் கொள்ளலானாள். இரவு உணவை முடித்துக்கொண்டு தம்பதிகள் இருவரும் தங்கள் படுக்கை அறைக்குப் படுக்கப்போனதும், ஜெனி வீ வீ பக்கத்து அறைக்குள் நுழைந்து பைபிளை உரக்கப் படிக்கத் துவங்கி விடுவாள். இப்படிச் சதாகாலமும் சாடைமாடையாகச் சச்சரவு கிளப்பிவந்த ஜெனி வீ வீயை மாங்குயிலுக்கு அறவே பிடிக்கவில்லை. "ஜெனி வீ வீ ஒரு பிசாசு. அவள் வணங்கும் தெய்வம் அவளைவிடப் பெரிய பிசாசு. ஆகவே அந்தப் பிசாசுக் கும்பல்களை வீட்டை விட்டே துரத்த வேண்டும்," என்று மாங்குயில் தன் கருத்தை மாணிக்கத் திடம் மாறிமாறிக் கூறிவந்தாள். ஆனால் ஜெனி வீ வீயோ "மாங்குயில் ஒரு பிசாசு. அவள் பெற்ற பிள்ளையோ, ஒரு குட்டிப் பிசாசு. ஆகவே இந்தப் பிசாசுகளைத் தொலைத்துக் கட்டவேண்டும்," என்று தனக்குள்ளாகக் கூறிக் கொண்டாள்.

ஜெனி வீ வீயின் கொடூர வார்த்தைகளுக்கிடையே கிடந்து குமுறிக்கொண்டிருந்தாள் மாங்குயில். ஒரு இரவு

மாணிக்கத்தோடு தனிமையாகப் படுக்கை அறையிலே இருக்கும்போது. மாங்குயில் ஜெனி வீ வீயோடு தன்னால் வாழ முடியாது என்பதைத் தெரியப்படுத்தினாள். அதற்கு மாணிக்கம் அவள் கன்னத்தை ஒரு தட்டுத்தட்டி, "நீ எதற்காகப் பயப்படவேண்டும்? அவள் நம்மைப் பொறுத்த வரையில் ஒரு வேலைக்காரிதானே? அதுவும் வயதான கிழவி. நானும் ஒரு காலத்தில் அவளைக் கண்டு பயந்த துண்டு. அவளைவிட அவளது பைபிளைப் பார்த்த உடனேயே குலை நடுக்கம் எடுத்துவிடும். நாள் ஆக ஆக எல்லாம் சரியாகிவிட்டது. அதுபோல நீயும் சரிப்பட்டு விடுவாய். எனவே, அவளை மறந்துவிட்டு என் அருகில் வா," என்று அன்போடு அழைத்தான். மாங்குயில் அவன் அருகே சென்று, "ஒன்று, அவள் இந்த வீட்டைவிட்டுப் போய்விடவேண்டும், இல்லை, நாமாவது இந்த வீட்டை விட்டுப் போய்விடவேண்டும்," என்று தன் ஆத்திரத்தைத் திரும்பவும் தெரியப்படுத்தினாள். இவ் வார்த்தைகளைக் கேட்டதும் மாணிக்கம், "வேலைக்காரிக்காக வீட்டுக்காரி வெளியே போவதா? வேலைக்காரியை வெளியே போகச் சொல்லலாம் என்றாய், அது லேசான காரியமா? நான் பிறப்பதற்கு முன்பே அவள் இந்த வீட்டில் குடியேறி இருக்கிறாள். குடும்பத்தைப் பொறுத்தவரையில் அவளும் ஒரு அங்கத்தினளே. மேலும், வீட்டு விவகாரங்களில் அவள் நிபுணத்துவம் வாய்ந்தவள். ஆகவே, மாங்குயில், நான் உன்னை ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். நீ அவளோடு அன்பாகப் பழக ஆரம்பித்துவிடு. அவளும் உன்னோடு அன்பாகப் பழக ஆரம்பித்து விடுவாள்," என்று புதிய யோசனை கூறினான்.

இப்படியாகப் பேச்சுக்கள் வளர்ந்தனவே தவிர, காரியத்தில் எதுவுமே நடைபெறவில்லை. ஜெனி வீ வீ ஒருத்தியைத் தவிர ஏனையக் காரியங்களெல்லாம் இன்ப மயமாகவே தோன்றின.

ஜனவரி மாதம் ஒருநாள் காலையில், மாணிக்கம் தன் சொந்தத் தொழில் காரணமாக வேற்றூர் சென்று விட்டான். செல்லும்போது "நான் மாலையில் கண்டிப்பாக வந்துவிடுவேன்" என்று உறுதி சொல்லிவிட்டுச் சென்றான்.

எதிர்பார்த்ததைப்போல மாலையில் மாணிக்கம் திரும்பவில்லை. எனவே, இரவு உணவை முடித்துக்கொண்டு மாங்குயில் தன் படுக்கை அறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள்.

வழக்கம்போல ஜெனி வீ வீ பைபிளை எடுத்துக் கொண்டு பக்கத்து அறைக்குள் நுழைந்தாள். ஒரு பெண் தான் செய்த குற்றத்திற்காக இறைவனின் காலடியில் விழுந்து மன்னிப்புக் கேட்கின்ற பகுதியை எடுத்து உரத்துப் படிக்கலானாள். ஏறத்தாழ அது மாங்குயிலின் குற்றப் பத்திரிகையாகவே அமைந்திருந்தது. வேதனையைப் பொறுக்க முடியாத மாங்குயில், மாணிக்கத்தின் உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். கிழவியோ படித்ததை நிறுத்தவில்லை. கிழவியின் ஒவ்வொரு சொல்லுக்கும் மாங்குயிலின் கண்களிலிருந்து ஒவ்வொரு துளி நீராக விழுந்து கொண்டிருந்தது.

பைபிளிலிருந்து கடைசி வரியைப் படித்துவிட்டு, அன்றையப் பிரார்த்தனையை முடித்துக்கொண்டாள் ஜெனி வீ வீ. "போதும், போகலாம். இனி நீ இம்மாதிரி இழிச் செய்கைகளில் ஈடுபடாதே," என்ற ஆண்டவனின் அருள் வாக்கே பைபிளின் கடைசி வரியாகும். அவ் வார்த்தைகளைக் கேட்டதும் மாங்குயில் தனக்குள்ளாக நினைத்துக் கொண்டாள்:

'என்னையும் என் ஆண்டவனாகிய மாணிக்கம் மன்னிப்பதற்குத் தயாராக இருக்கும் பட்சத்தில், நான் சங்கரனுடன் வாழ்ந்திருந்த குற்றங்களை எல்லாம் முறையாகச் சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.'

பிரார்த்தனையை முடித்துக்கொண்டு ஜெனி வீ வீ புறப்படத் தயாராக இருந்தபோது அவளை இடைமறித்து, "ஜெனி வீ வீ, இன்று நீ எனக்கு உண்மையிலேயே மிக உயர்ந்த கதை ஒன்றைப் படித்துக் காண்பித்து விட்டாய். ஆகையால் உனக்கு நன்றி கூறுகிறேன். நாளையும் இதே கதையை எனக்குப் படித்துக் காட்டுவாயானால், நான் மிகவும் நன்றி உள்ளவளாக இருப்பேன்," என்று சொன்னாள்.

மாங்குயிலின் புதிய போக்கைக் கண்டு ஆத்திர மடைந்த ஜெனி வீ வீ, "ஆண்டவன் இம்மாதிரியான குற்றங்களை மன்னிக்கவே கூடாது" என்று அடாபிடித்தனமாகச் சொல்லிவிட்டு அங்கிருந்து போய்விட்டாள்.

"ஆண்டவன் அருள் மயமானவன். நிச்சயமாகக் குற்றங்களைச் செய்துவிட்டு, அதற்காக வருந்துகிறவர்மாட்டுக் கருணைபுரியத் தயங்கமாட்டான்," என்று ஜெனி வீ வீக்குக் கேட்கும்படியாக இறைந்து சொன்னாள் மாங்குயில். தனிமையில் நின்ற மாங்குயிலுக்கு ஒரே ஒரு கவலைதான், அதாவது: மாணிக்கம் வீடு வந்து சேர்ந்துவிட வேண்டுமென்பது தான் அந்தக் கவலை!

# 7

வீதிப்புறத்திலிருந்து எழும்பிய ஓசையைக் கேட்டு ஜெனி வீ வீ வாசலுக்கு ஓடிவந்தாள். மாணிக்கம் வந்து விட்டான் என்று தனக்குள்ளாகச் சொல்லிக்கொண்டாள்.

'மாணிக்கம்' என்று ஜெனி வீ வீ மெதுவாகச் சொன்ன வார்த்தை, மாங்குயிலின் காதில் தேனருவி மாதிரிப் பாய்ந்தது.

கதவைப் படீரென்று திறந்துகொண்டு மாங்குயிலைத் தேடி ஓடிவந்தான் மாணிக்கம். அவனை எதிர்பார்த்துத் தான் அவளும் ஏங்கிக்கொண்டிருந்தாள். நுழைந்ததும் நுழையாததுமாக, மாணிக்கம் மாங்குயிலின் கைகளைப் பிடித்துக்கொண்டு, "பெண்ணே, இன்று நான் வெளியூருக்குப் போயிருந்த இடத்தில், என் உயிருக்கு உயிரான சிநேகிதன் ஒருவனைச் சந்தித்தேன். அவன் யாராக இருக்கக் கூடும் என்று உன்னால் சொல்ல முடியுமா?" என்று கேட்டான்.

அவனது ஆனந்தத்தைக் கண்டு மாங்குயில் ஆத்திரப் பட்டாளே தவிர ஆனந்தப்படவில்லை. அவனை இத்தகைய ஆனந்தத்தோடு அவள் இதுநாள்வரை பார்த்ததே இல்லை. அவன் தன் உள் எழுந்த இன்பத்தை அடக்கிக்கொள்ள முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

"பிரியத்திற்குரியவளே, என் நண்பன் யார் என்பதைச் சரியாகச் சொல்லிவிட்டால், உனக்குப் பத்தாயிரம் பொற் காசுகளைத் தருகிறேன். ஒன்றல்ல இரண்டல்ல; பத்தாயிரம்! எங்கே சொல்லு பார்க்கலாம்" என்று அன்புகனிய அவளைப் பார்த்துச் சொன்னான் மாணிக்கம். அவளோ ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருந்தாள். அவன் தொடர்ந்து பேசலானான்: "உன்னால் சொல்லவே முடியாது. ஆறு ஆண்டுகள் முயன்றால்கூட அவனுடைய பெயரை உன்னால் சொல்லிவிட முடியாது."

இனியும் சும்மா நின்றுகொண்டிருக்க விரும்பாத மாங்குயில், "என்னால் எப்படிச் சொல்லமுடியும்? உங்களுக்கு எத்தனையோ நண்பர்கள். அதுவும் உங்களை இவ்வளவு ஆனந்தத்திற்கு ஆளாக்கக்கூடிய நண்பர் யார் என்பதை லேசில் சொல்லிவிட முடியுமா என்ன?" என்று கேட்டாள்.

"உன்னை நேசிப்பதைப் போலவே அவனையும் நான் நேசிக்கிறேன். நீ முதல்; அவன் இரண்டாவது. நண்பனென்றால் சாமான்யப்பட்ட நண்பனல்லன்; எனக்காக எதையும் செய்யக்கூடியவன். ஆப்த நண்பன்!" என்று சிரித்துக்கொண்டே பேசினான் மாணிக்கம்.

"என்னைப்போன்று உங்களின் அபிமானத்திற்குரியவனா அவன்?" என்று கேட்டுவிட்டு மயக்கமுற்றவள்போல தள்ளாடினாள் மாங்குயில்.

கீழே விழுந்துவிடாதபடி அவளைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டான் மாணிக்கம். அவளது கூந்தலைக் கோதியபடியே, "என் ஆப்த நண்பன், அவன்தான் அந்த சங்கரன். அவனை நேற்றுத் தற்செயலாகச் சந்தித்தேன். அவன் சாகவில்லை. உயிரோடுதான் இருக்கிறான். அவன் நீண்ட நாட்கள் வாழவேண்டும் என்பதுதான் என் விருப்பம்," என்று ஏதேதோ பேசிக்கொண்டே போனான் மாணிக்கம்.

மாங்குயில் 'சங்கரன்' என்ற பெயரைக் கேட்டதும் அனலை மிதித்து விட்டவளைப்போலத் துள்ளிக் குதித்தாள். இருப்பினும் சமாளித்துக்கொண்டு, "சங்கரன் உயிரோடு இருக்கவே முடியாது. அவன் செத்து நெடுநாட்களாகிவிட்டன. பத்திரிகைகள் கூட அவன் செத்துவிட்டான் என்றே பிரசுரித்திருந்தன," என்று ஒரே மூச்சில் சொல்லி முடித்தாள்.

அவ் வார்த்தைகளைக் கேட்ட மாணிக்கம் வாய்விட்டுச் சிரித்தான். அவனை நான் ஸ்டேஷனில் சந்தித்தேன். சந்தித்ததும் சங்கரனின் பேய் உருவம்தான் மனித வடிவில் நடமாடுகிறதோ என்று எண்ணிப் பயந்துவிட்டேன். அதற்குள்ளாக சங்கரனே என்னை நெருங்கி வந்துவிட்

டான். அவனேடு நானும் அளவளாவிப் பேசத் துவங்கி னேன். இருவரும் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். ஆகவே சங்கரன் இறந்துவிட்டான் என்ற செய்தியை நீ மறந்துவிடு. என்று சொல்லியபடியே மாங்குயிலின் கைகளை விட்டுவிட்டு எதிர்த்திருந்த சோபாவில் உட்கார்ந் தான் மாணிக்கம். பேயறை உற்றவள்போல மாங்குயில் பேசா மடந்தையாகிவிட்டாள். நடமாடும் சக்தி இருந் திருந்தால், அவள் அந்த இடத்தைவிட்டு நிச்சயமாக அகன்று இருப்பாள். ஒரு அடி எடுத்து வைப்பதற்குக் கூட அவள் உடலில் தெம்பு இல்லை. ஜெனி வீ வீ சொன்ன பைபிள் வாசகங்கள் அவள் காதில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. 'ஆண்டவன் மன்னிக்கவே மாட்டான்' என்று தனக்குள்ளாகப் பல தடவைகள் சொல்லிக் கொண்டாள்.

மாணிக்கம் ஜெனி வீ வீயை அழைத்து, "விருந்தாளி ஒருவன் வரப்போகிருன். அவனுக்கு வேண்டிய உணவு உடை முதலியவற்றைச் சீக்கிரமாகத் தயார்செய்" என்று கட்டளையிட்டான்.

"விருந்தாளி நிச்சயமாக வந்துவிடுவாஞே? வருவது உறுதியாஞல் வேண்டியதைச் செய்து முடிக்கிறேன்," என்று ஜெனி வீ வீ அவனைப் பார்த்துக் கேட்டாள்.

"அதென்ன அப்படிக்கேட்கிருய்? அவன் இப்பொழுது ரயிலில் வந்துகொண்டிருப்பான். நிச்சயமாக வந்துவிடு வான். ஆகவே ஆகவேண்டியவற்றைத் துரிதமாகக் கவனி," என்று ஆவல் ததும்பச் சொல்லி முடித்தான். மாங்குயில் இடிக்குமேல் இடி விழுந்ததைப் போல அவதி யுறலாஞள். மாணிக்கத்தின் ஒவ்வொரு வார்த்தைகளும் வேலாக மாறி வேதனை அளிக்கலாயின. இதை உணராத மாணிக்கம் மேலும்மேலும் பேசலாஞன்: "இன்னும் அரை மணி நரேத்திற்குள்ளாக சங்கரன் இந்த அறைக்குள் நுழைந்துவிடுவான். என்னையும் என் மனைவியையும் காண வேண்டுமென்று அவன் துடியாய்த் துடித்துவிட்டான். கல்யாணம் ஆகிவிட்டது என்று சொல்லியதுமே அவன் மட்டில்லா மகிழ்ச்சிகொண்டான்."

"நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதானு?" என்று மாங்குயில் அவனைப் பார்த்துக் கேட்டாள். "உண்மையாகத்தான் சொல்லுகிறேன்" என்று அவளுக்கு உறுதி கூறினுன் மாணிக்கம். மேலும் நடேசன் என்ற நண்பனைப் பார்த்துவிட்டு வர விரும்பியதாலேயே சங்கரன் தன் வீட்டிற்கு வருவதற்குத் தாமதமாகிக் கொண்டிருக்கிறது என்பதையும் அவன் தெரியப்படுத்தினுன்.

இப்படியாகப் பேசிக்கொண்டிருக்கும்போதே வெளிக் கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. ஜன்னலைத் திறந்து எட்டிப் பார்த்தான் மாணிக்கம். சங்கரன் வீதியில் நின்றுகொண்டிருந்தான். வீட்டிற்குள் இருந்தபடியே மாணிக்கம் சங்கரனைப் பார்த்து, "நண்பனே, இதோ நான் வருகிறேன். சற்று பொறுத்துக்கொள்" என்று விடை கொடுத்தான்.

மாணிக்கம் தந்த குரல் சங்கரனுக்குத் தேனுகவும், மாங்குயிலுக்கு விஷமாகவும் தோன்றியது. கண்கள் சுழலவே, கருத்து மயங்கி, நாற்காலியில் சுய உணர்வற்று விழுந்துவிட்டாள் மாங்குயில். 'என்னைக் கொன்றுவிடு ஆண்டவனே; என்னை அநியாயமாகச் சோதனைக்கு ஆளாக்காதே. ஆபத்திலிருந்து என்னை விடுவித்துவிடு,' என்று அவள் வாய்மட்டும் புலம்பிக் கொண்டே இருந்தது.

கணவன் என்ற முறையில் மாணிக்கமும் காதலன் என்ற முறையில் சங்கரனும் அவள் கண்முன் மாறி மாறித் தோன்றி மறைந்தனர். வழிமேல் விழிவைத்த வண்ணம் அவர்களின் வருகையை எதிர்பார்த்துக் கலங்கிக் கொண்டிருந்தாள் மாங்குயில்.

மாணிக்கமும் சங்கரனும் வீட்டிற்குள் நுழைந்தார்கள். சங்கரனை ஓர் அறையில் தனிமையில் விட்டு விட்டு மாணிக்கம் மட்டும் மாங்குயில் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தான். மாங்குயில் உள்ளத்தில் புகைந்து கொண்டிருந்த ஏக்கத்தை மறைத்துக் கொண்டு, எதவாகப் பேசத் துவங்கினுள்: "எனக்கு இன்று ஏனே தெரியவில்லை, ஒரே தலைவலியாக இருக்கிறது. உங்களுடைய நண்பனை நான் நாளை சந்தித்துக் கொள்கிறேன். நீங்களும்

உங்கள் நண்பனுமாக இன்றையப் பொழுதைப் போக்கி விடுங்கள். இன்று உங்களோடு உல்லாசமாகப் பொழுதைப் போக்குவதற்கு இயலாமைக்கு வருந்துகிறேன். தயவு செய்து மன்னித்து விடுங்கள்,'' என்று பணிவோடு மாணிக் கத்தைக் கேட்டுக் கொண்டாள்.

ஏமாற்றத்தின் உருவம் மாணிக்கத்தின் முகத்தில் பிரதிபலித்தது. தன் அன்புக்கு இலக்காகிய இருவரையும், அதாவது சங்கரனையும் மாங்குயிலையும் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் காணவேண்டுமென்று ஆசைப்பட்ட மாணிக்கம் ஏமாற்றமடைந்தான். சங்கரனை அழைத்து வந்து மாங்குயிலிடம், 'இதோ உன் அண்ணன் வந்திருக் கிருன். அவனுக்கு உன் வணக்கத்தைத் தெரிவி,' எனக் கூறவேண்டுமென்று கற்பனையில் கனவு கண்டு வந்த மாணிக்கத்தின் எண்ணத்தில் மண் விழுந்து விட்டது. மாங்குயிலிடம் எவ்வளவோ தன் ஆசைகளையெல்லாம் எடுத்துச் சொல்லியும் அவள் சங்கரனை அன்று சந்திப்பதற் குச் சம்மதிக்கவேயில்லை. அவளைச் சமாதானப்படுத்த முடியாது என்ற நிலையை உணர்ந்த பின்னரே மாணிக்கம் அவ்விடத்தை விட்டகன்ருன். மாங்குயிலும் ஒதுப் புறமாக இருந்த ஒரு அறையில் சென்று ஒளிந்து கொண்டாள்.

மாணிக்கத்தின் மனைவியைக் காண வேண்டுமென்ற ஆவலோடு சந்தடி கேட்ட இடங்களிலெல்லாம் கண்களைச் செலுத்தினுன் சங்கரன். சங்கரனின் ஆசையைக் குறிப் பால் உணர்ந்து கொண்ட மாணிக்கம், "நண்பனே, இன்று என் மனைவிக்கு உடல் நலம் குன்றியிருப்பதால் அவள் ஓய்வெடுத்துக் கொள்ளுகிருள். நாளை உன்னைச் சந்திப்ப தாகச் சொல்லியிருக்கிருள்,'' என்று விஷயத்தை விளக்கி ஞன். அப்புறம் அங்கு நின்று கொண்டிருந்த ஜெனி வீ வீ என்ற வேலைக்காரியை அழைத்து, "என் ஆருயிர் நண்பன் சங்கரனுக்கு மேல் மாடியில் ஒரு அறையைக் காலி செய்து, தங்குவதற்கு ஏற்றபடி வசதிகள் செய்து வைத்திருக்கிருய் அல்லவா?'' என்று கேட்டான் மாணிக்கம். சங்கரனும் சந் தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தனக்கு அதிகம் அலுப்பு இருப்பதாகவும், மேல் மாடியில் உள்ள அறைக்கு அழைத்துச் சென்ருல் அங்கே நான் தூங்குவதற்கு வசதி

யாக இருக்கும் என்றும் தன் கருத்தைத் தெரியப் படுத்தினன்.

ஜெனி வீ வீ, அறை தயாராக இருப்பதாகத் தகவலை தெரிவித்துவிட்டு, அங்கிருந்து அகன்று விட்டாள். மாங் குயிலின் திடீர் வியாதிக்கும், சங்கரனின் வருகைக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டுமென்று தெளிவாகத் தெரிந்து கொண்டு, ஜெனி வீ வீ அதனை அறிவதற்கு ஆவலோடு இருந்தாள். மாங்குயிலை அவள் வெறுத்தாள். மேலும் மாங்குயிலின் வாழ்வில் மர்மங்கள் நிறைந்திருக்கின்றன என்பதைப் புரிந்து கொண்ட பின்பு, அவளின் வெறுப்பு பன்மடங்காகப் பெருகிவிட்டது.

சங்கரனும் மாணிக்கமும் காற்றோட்டமான ஓர் இடத்தில் நாற்காலிகளைக் கொண்டுபோய்ப் போட்டுக் கொண்டு கடந்தகால வாழ்க்கைகளைப் பற்றிக் கதை கதையாகப் பேசத் துவங்கினர். மாணிக்கம் கேள்விக்கு மேல் கேள்வி கேட்டு ஏற்கனவே பிரயாணத்தால் அலுப்படைந்திருந்த சங்கரனை மேலும் அலுப்படையும்படி செய்துவிட்டான். கப்பல் பிரயாணத்தில் கஷ்டம் எப்படி ஏற்பட்டதென்றும், விபத்திலிருந்து தப்பிய விதம் எவ்வாறு என்றும், இதைக் குறித்து ஏன் ஒரு கடிதம் கூட எழுதவில்லை என்றும், இன்னும் என்னென்னவெல்லாமோ கேட்டான். கேட்டதையே திரும்பத் திரும்பவும் கேட்டான். கப்பல் விபத்திலிருந்து இருவர் தப்பியதாகவும், ஒருவன் ஏழைக் கூலிக்காரன் என்பதாகவும், அவன் இப்போது என்னவானன் என்பது தனக்கே தெரியாதென்பதாகவும், கப்பல் விபத்திற்குக் காரணம் ஒரு பேய்க் காற்று என்பதாகவும், வெளிநாட்டிலிருந்து ஒரே ஒரு முறை கடிதம் எழுதியதாகவும், அக் கடிதத்திற்குப் பதில் வராததால் தான் திரும்பவும் கடிதங்கள் எழுதவில்லை என்பதாகவும் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதிலளித்தான் சங்கரன்.

கப்பல் விபத்திலிருந்து தப்பிய சங்கரன் பல கஷ்டங்களுக்குள்ளாகி இறுதியில் வெளிநாட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு மருத்துவத் தொழிலில் ஈடுபட்டான். அப்போது ஒரு கடிதம் எழுதி அதை மாணிக்கத்திடம் சேர்த்துவிடும்படி தன் சித்தப்பாவுக்குத் தபால் மூலம் அனுப்பி

யிருந்தான். அக்கடிதம் வந்து சேருவதற்குள்ளாக அவனது சித்தப்பா இறந்துவிட்டார். ஆகையால் அக் கடிதம் கொடுபடாமலேயே கெட்டு ஒழிந்துவிட்டது. இருவரும் விஷயத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளவேயில்லை.

எதிர்பாராத விதமாக இடியும் மின்னலும் தாண்டவமாடத் துவங்கிவிட்டன. காற்றுக்காகக் கதவுகளைத் திறந்து விட்டுவிட்டுக் கதை பேசிக்கொண்டிருந்த நண்பர்களின் உடலில், நாலைந்து மழைத் துளிகள் விழுந்துவிட்டன. அவ்வளவுதான்; கதவைச் சாத்திக்கொண்டு தத்தம் படுக்கை அறைகளுக்குப் புறப்படத் தயாராயிருந்தனர். அப்போது மாணிக்கம் தன் நண்பனை அடிக்கடி தன் வீட்டுக்கு வரும்படி கேட்டுக்கொண்டான்.

சங்கரன் தன் நண்பனையும், நண்பனின் மனைவியையும் பார்த்துப் பேசிவிட்டு வெற்றியூர் நகரத்திலிருந்து காஞ்சி நகரத்திற்குப் போய்வரத் திட்டமிட்டு இருந்தான். அவனுக்கு எத்தனையோ வேலைகள். வெளியே இருந்த போதிலும் கூட தன் நண்பனைத் தான் பார்க்கவேண்டுமென்று எண்ணியதாலேயே அவன் அன்று மாணிக்கத்தின் வீட்டிற்கு வந்திருந்தான்.

நெடு நாட்களுக்கு அப்புறம் திரும்பிவந்த தன் சிநேகிதனை ஒரேநாளில் உபசரித்து ஊருக்கு அனுப்பிவைக்க மாணிக்கம் தயாராக இல்லை.

காஞ்சி என்ற நகரத்தில் சங்கரனின் மற்றொரு நண்பன் வியாதியால் பீடிக்கப்பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடந்தான். சாவதற்கு முன்பு ஒருதரமேனும் அவனைப் பார்த்துவிட வேண்டுமென்ற ஆசையால்தான் சங்கரன் மாணிக்கத்தின் வீட்டில் இருந்து விரைவாகக் கிளம்பிவிட விரும்பினான். ஆனால் எக் காரணத்தை முன்னிட்டும், மாணிக்கம் சங்கரனை அவ்வளவு விரைவில் அனுப்பி வைக்கச் சம்மதிக்கவில்லை.

"இது உன் வீடு. என்மனைவி உன் சகோதரி. நான் உன் உறவினன். ஆகவே, நீ எதையுமே லட்சியம் பண்ண வேண்டியதில்லை. உன் விருப்பம்போல நீ இங்கேயே தங்கி இருக்கலாம். உனக்கு வேண்டிய வசதிகளை எல்லாம்

செய்துதர நாங்கள் தயாராக இருக்கிறோம்,'' என்று எவ்வளவோ எடுத்துச் சொன்னான் மாணிக்கம்.

சங்கரனின் காதில் அவை ஒன்றுமே ஏறவில்லை. நியதி, கட்டுப்பாடு இவைகளுக்கு உட்பட்டு வாழ்கிற வாழ்க்கையைச் சங்கரன் அறவே வெறுப்பவன். கடைப்பிடிக்கின்ற வழி நல்லதாகயிருந்தாலும் சரி, கெட்டதாக இருந்தாலும் சரி, அதைப் பற்றி எல்லாம் அவன் கவலைப்படமாட்டான். அவனுக்குத் தேவை மகிழ்ச்சி—இன்பம்! இன்பத்தை அடைவதற்கு அவன் எதையும் எப்பவும் செய்யத் தயாராக இருந்தான். ஆகவேதான் அவன் மாணிக்கத்தின் அடக்க ஒடுக்கமான வாழ்வுகளுக்கு அசைந்து கொடுத்து அவனோடு உடன் வாழ ஒத்துக்கொள்ளவில்லை.

அழகு எங்கெங்கு இருக்கிறதோ அதையெல்லாம் ஒரு சேர அனுபவித்துத் தீரவேண்டும் என்ற அடங்காத பசியுடையவன் சங்கரன். அழகு எங்கு இருந்தாலும் எளிதில் கிடைப்பதாக இருந்தாலும்கூட அதை அடைவதற்கு அனுபவ பாத்தியம் இருக்கிறதா என்பதைச் சிந்தித்துப் பார்த்து, செயலில் இறங்குகிறவன் மாணிக்கம். ஆகவே அவர்கள் இருவரும் எப்படி ஒரே வீட்டில் சேர்ந்து வாழ முடியும்? வாழ்வதற்கு வேண்டிய வசதிகளும், தங்குவதற்குத் தகுந்த இடமும் தரத் தயாராக இருந்த மாணிக்கத்திடம் எதையும் ஏற்றுக்கொள்ள சங்கரன் தயாராகயில்லை. ஏனெனில், அவன் ஒரு தான்தோன்றி. அவன் விடுதலையோடு வாழ விரும்பினான். விடுதலையென்றால், மற்றவர்கள் கருதுவதைப்போல சுதந்திரம் என்ற பொருளில் அதனைச் சங்கரன் கருதவில்லை. ஒழுங்கு, கட்டுப்பாடு, பொறுப்பு முதலிய அனைத்திலிருந்தும் விடுபட்டு வாழ்வதையே அவன் விடுதலை என்று நம்பினான்.

'ருசி கண்ட பூனை சுவை மறவாது' என்பது போலக் கூத்தியார் வாழ்விலும், குடிப்பொருள் மயக்கத்திலும் வாழ்ந்து திரிந்த சங்கரன் அவற்றினின்று விலகி வாழ விரும்பவேயில்லை.

மாணிக்கம் சங்கரனை ஏற இறங்கப் பார்த்தான். சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டே சங்கரன் பேசலானான்:—

"நண்பனே, உன் அன்புக்கு என் நன்றி. என்னை அனுவசியமாக உன் வீட்டிற்குள் அடைத்து வைக்க விரும்பாதே. உன்னுடைய மகோன்னதமான கோட்டையை நான் நாசப்படுத்த விரும்பவில்லை. நான் உல்லாசப் பிரியன். ஊர் ஊராகச் சுற்றித் திரியவே ஆசைப்படுகிறேன். ஒரே இடத்தில் அடைபட்டுக் கிடந்தால் ஒரு வருடம் முடிவதற்குள்ளாக நான் பைத்தியக்காரனுக மாறிவிடுவேன். ஆகவே, என்னை என் போக்கிலேயே விட்டுவிடு" என்று தன்னைப் பற்றிய சகல விபரங்களையும் விஸ்தாரமாகச் சொல்லிவிட்டான் சங்கரன்.

"நீ சொல்லுவது சுத்தத் தப்பு. என்னோடு நீ ஓராண்டு காலம் தங்கி வாழ ஒப்புக்கொண்டால், நான் உன்னை ஒரு உன்னத புருஷனுக மாற்றிவிடுவேன்," என்று அவனுக்குப் பதில் தந்தான் மாணிக்கம்.

"நீ சொல்லுவதுதான் தவறு. ஏனெனில், நீ என்னை இன்னும் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை என்றே நினைக்கிறேன். நட்பால் நாம் இருவரும் இணைந்திருந்தாலும் கூட, கொள்கையால் வேறுபட்டவர்களே. உன்னுடைய அற்புதமான மாளிகை குடும்பஸ்தர்களுக்குக் கோலாகல மண்டபமாக இருக்கலாம். ஆனுல் என்னைப்போன்ற உல்லாசப் பிரியர்களுக்கு அது ஒரு இடுகாடே ஆகும். நான் அப்படிச் சொல்லுகிறேனே என்று என்னைக் கோபித்துக் கொள்ளாதே. நான் உள்ளதை உள்ளபடியே பேசக்கூடிய பச்சையுள்ளம் படைத்தவன். அதுதான் உனக்கு நன்கு தெரியுமே?" என்ருன் சங்கரன்.

மாணிக்கம் வேண்டா வெறுப்போடு தலையை அசைத்துக் கொண்டே பேசினுன்:

"சங்கரன்! உண்மையான சுகம் எது என்பதை நீ இன்னமும் அறிந்து கொள்ளவில்லை. உன்னுடைய நிலையில் நான் இருந்திருந்தால், ஒருத்தியை மணம் செய்து கொண்டு, ஒரு அழகிய வீட்டை விலைக்கு வாங்கி, அதில் ஒழுங்காகக் குடித்தனம் செய்யத் துவங்கி விடுவேன். அதைப் போன்றதொரு சந்தோஷகரமான வாழ்க்கையை எந்த மனிதனுமே அடைவது அருமை. இந்த வீட்டைப் பார்; அதற்கடுத்துள்ள தோட்டத்தைப் பார். இவ்வளவு

அமைதியான இடத்தை நீ எங்குமே காண முடியாது. எங்களோடு இணைந்து வாழ முற்பட்டால் காதல் என்ன என்பதை நீ அறிந்துகொள்ள இயலும். அழகிய பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு அவளை இங்கு அழைத்து வந்துவிடு. அப்புறம் ஓராண்டு என்ன, ஒன்பது ஆண்டுகளானுலும்கூட நீ இங்கிருந்து போகவே மாட்டாய்.''

இவ் வார்த்தைகளைக் கேட்டதும் சங்கரன் சிரித்துவிட்டான்.

''தோழனே, என்னை மன்னித்துவிடு. காதலைப் பற்றிய உன்னுடைய கருத்து எனக்கு உகந்ததல்ல. என்னைத் திருத்திவிட வேண்டுமென்பதற்காக நீ பேசுகின்ற ஒவ்வொரு பேச்சும் என்னைப் பொறுத்தவரையில் பயனற்றதாகிவிடுகிறது; உன்னைப் பொறுத்தவரையில் நீ உன் சக்தியை இழந்தவனுகி விடுகிருய். சுருக்கமாகச் சொன்னுல், பெண்களைப் பொறுத்தவரையில் இருவருக்கும் வேறுபட்ட கருத்துக்களே இருக்கின்றன. எனவே, வீணுக உன் சக்திகளைச் செலவு செய்யாதே.''

ஈயத்தைக் காய்ச்சி காதில் ஊற்றியதைப்போல வேதனைகொண்டான் மாணிக்கம்.

''நீயே உன் தலையில் மண்ணை வாரிப்போட்டுக் கொள்ளுகிருய். யாரேனும் ஒருத்தியைக் கல்யாணம் செய்துகொண்டு முதற் பிள்ளையைப் பெற்றெடுத்துவிட்டால், உன் அபிப்ராயம் அனைத்தையும் மாற்றிக் கொள்ளுவாய் என்றே நினைக்கிறேன். ஆகவே, முதலில் உன் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்,'' என்று அன்போடு சொன்னுன் மாணிக்கம்.

''தயவு செய்து என்னைக் கேலி பண்ணுதே. உன்னுடைய கலியாணமும், கற்பும் உன் அளவோடு நிற்கட்டும்,'' என்று நையாண்டி செய்தான் சங்கரன்.

மாணிக்கம் அடைந்த வேதனைக்கு அளவேயில்லை. இருப்பினும் நண்பனை நல்வழிப்படுத்திவிடவேண்டும் என்ற திடமான நம்பிக்கையோடு, ''நண்பனே, பெண்கள் தெய்வத்திற்குச் சமானமாகும். ஒருவனுக்கு ஒருத்தி என்பது

மிக உயர்ந்த தத்துவமாகும். அந்தத் தத்துவத்தை ஒட்டித் தான் நானும் என் மனைவியும் இதுகாறும் இல்லற வாழ்வை இன்பமாக நடத்தி வந்துள்ளோம்,'' என்று சொன்னான்.

''போதும் போதும் உன் உபந்யாசம். நான் உன்னை விட்டுப் பிரிந்து அநேக ஆண்டுகளாகி விட்டன. நீ அன்று இருந்ததைப் போலவே இன்றும் இருக்கிறாய். என்னிடத்திலும் எவ்வித மாறுதலையும் காண முடியாது. நீ பெண்களைப் பூஜிப்பவன். நான் பெண்களைத் தூஷிப்பவன். ஒருவனுக்கு ஒருத்தி என்பது உன் கொள்கை. ஒருவனுக்கு ஆயிரம் பேர்களென்பது என் அபிப்ராயம். ஒருத்தியோடு ஒருவன் வாழ வேண்டுமென்பது ஏறத்தாழ ஜென்மாந்திர தண்டனைக்குச் சமமாகும். நான் இப்படிச் சொல்லுகிறேனே என்று நீ அதிர்ச்சி அடையாதே. நண்பன் என்ற முறையில் நான் உன்னுடைய அந்தரங்கத்தை அறிய விரும்புகிறேன். நீ உண்மையிலேயே உன்னுடைய மனைவியோடு இன்பமாக வாழுகிறாயா?'' என்று கேட்டான் சங்கரன். இக்கேள்வியைக் கேட்டதும் தடியால் தாக்குண்டவன் போலக் கலங்கிய போதிலும், ''இன்பமாக வாழ்கிறாயா, என்றுதானே கேட்கிறாய்? பேரின்பமாக வாழுகிறேன். நான் வாழ்வது போல இன்பமாக வேறு யாருமே வாழ்ந்திருக்க முடியாது என்று கூடக் கூறலாம். என்னுடைய இன்பத்தை வார்த்தைகளால் விவரிக்கவே முடியாது. விவரிக்க வார்த்தைகளும் கிடையாது. நாங்கள் மண்ணுலகத்திலேயே சொர்க்கலோகத்தை அமைத்துக் கொண்டுள்ளோம்,'' என்றான் மாணிக்கம்.

''அப்படியானால் உன் மனைவி அற்புதமான அழகு வாய்ந்தவளோ?''

''அப்படிச் சொல்ல நான் தயாராகயில்லை. அழகை நான் ஒரு பொருளாக மதிப்பவனும் அல்லன். என் மனைவி ஒரு சிறந்த குணவதி. ஆகவேதான் எங்கள் வாழ்வில் இன்பம் நடனமாடுகிறது. நாளை என் மனைவியை நீ நேரில் பார்த்த பிறகு என் வார்த்தைகளின் உண்மையை நீ அறிந்து கொள்ள முடியும்.''

"அவளென்ன வெற்றியூர் நகரத்தைச் சேர்ந்தவளா? உள்ளூர்க்காரியா? வெளியூர் பெண்ணு?"

"அவள் வெளியூர்க்காரி. அவளை நான் சென்னை நகரில் சந்தித்தேன்; காதலித்தேன்: கல்யாணம் செய்து கொண்டேன். அவ்வளவுதான் !"

"நீ கல்யாணம் செய்து கொள்ளுவதற்கு முன்பு அவளை வேலையை முன்னிட்டோ, அல்லது வேறு எதை யேனும் முன்னிட்டோ சந்தித்ததுண்டா?"

"இல்லை; சென்னைக்குப் போயிருந்த போது அவளைத் தற்செயலாகச் சந்தித்தேன். அவள் எனக்கு உறவுக்காரி அல்லள். இன்னும் சொல்லப்போனல் முன்பின் தெரியாதவளே."

"நீ ஒரு பெரும் தவறு செய்துவிட்டாய். அறிமுகம் ஆகாத ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளு வதைப் போன்று ஒரு பெரும் தவறு இருக்கவே முடியாது. இன்று நீ என் வார்த்தைகளை நம்பமாட்டாய். ஆனல் அனுபவம் என் வார்த்தைகளை நம்பும்படி செய்துவிடும். இது உறுதி."

இவ் வார்த்தைகளைக் கேட்டதும் கொதித்தெழுந்த மாணிக்கம் சங்கரனைப் பார்த்து, "நீ ஒரு சுத்த முட்டாள். உலக உண்மைகளை அறியாதவன். நண்பனென்ற முறை யிலே உன்னேடு பழகலாமே தவிர, அறிஞனென்ற முறை யில் உன்னேடு பழகுவது ஆபத்து நிறைந்ததாகும். கோபத் தில் ஏதேதோ கூறிவிட்டேன். என் மனைவியை நேரிலே பார்த்ததும் உன் அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டு விடு வாய். எனவே சிறிது பொறுத்திரு," என்ருன்.

"உண்மைதான். நான் உணர்ந்ததைச் சொன்னேன். நீ உள்ளதைச் சொல்லுகிருய்" என்று தன் அபிப்ராயத்தை அமைதியோடு தெரிவித்தான் சங்கரன்.

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். சங்கரனின் அறை தயாராகி விட்டது என்பதை ஜெனி வீ வீ வந்து தெரிவித்தாள்.

சங்கரன் படுக்கை அறையை நோக்கி விரைந்தான். மாணிக்கம் மாங்குயிலை நோக்கி விரைந்தான்.

தன்னுடைய அறைக்குள் நுழையும்போது மாங் குயில் அங்கு சோகத்தின் ஏகப் பிரதிநிதியாக நின்று கொண்டிருப்பதை மாணிக்கம் பார்த்து மலைத்து விட்டான். சங்கரனும் மாணிக்கமும் பேசிக் கொண்டிருந்த ஒவ்வொரு வார்த்தையையும், மாங்குயில் ஒட்டுக் கேட்டுக் கொண்டு தான் நின்று கொண்டிருந்தாள். சங்கரனின் ஒவ்வொரு வார்த்தையும் பழங்கால நிகழ்ச்சிகளை நினைவூட்டிக் கொண்டிருந்தது. சென்னை நகரில் சங்கரனோடு தான் நடத்திய காதல் வாழ்வு மனத் திரையில் நிழல் படம் போலத் தோன்றித் தோன்றி மறைந்தது. சங்கரன் அருகில் இருக்கிறான் என்ற நினைப்பே அவளைப் படாதபாடு படுத்தி விட்டது. நெஞ்சு பொங்கிக் கொதித்தது. சதைகள் அனல் வயப்பட்டவை போலத் துடித்தன. உடலெல்லாம் அக்னி பொங்கி வழிந்தது. ஏறத்தாழ பைத்தியம் பிடித்த மாதிரிக் காட்சியளித்தாள்.

அறைக்குள் நின்று பேசிக் கொண்டிருந்த நண்பர்களைச் சாவித் துவாரத்தின் வழியாகப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். சங்கரனின் கண் பார்வையிலிருந்து எப்படித் தப்புவது என்பதுதான் அவளின் ஓயாத சிந்தனை. ஒட்டுக் கேட்டுக் கொண்டிருக்கும் போது, தப்பித் தவறிக் கீழே விழுந்துவிட்டால், அதனால் ஏற்படும் சப்தத்தைக் கேட்டு நண்பர்கள் வெளியே வருவார்களானால், தன்னை இன்னார் என்று சங்கரன் அடையாளம் புரிந்து கொள்ள முடியுமே என்று எண்ணிப் பயங் கொண்ட மாங்குயில், சாவித் துவாரத்தின் வழியாகப் பார்ப்பதைப் பையப் பைய நிறுத்திவிட்டாள்.

'முன்பின் தெரியாத ஒருத்தியை மணம்செய்து கொள்வதைப் போன்று முட்டாள் தனம் வேறு எதுவுமில்லை' என்று சங்கரன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும், அவள் அடைந்த வேதனைக்கு அளவேயில்லை. தன்னுடைய வாழ்வுக்குச் சங்கரன் எமனாக வந்து சேர்ந்தான் என்றெண்ணிக் கவலைப்படலானாள். சங்கரனின் பெண்களைப் பற்றிய அபிப்ராயத்தைக் கேட்க நேரிட்ட போதெல்லாம் வாய்

விட்டுக் கத்தித் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளலாமா என்றுகூட அவள் எண்ணலானுள்.

இந்நிலையில் இனியும் ஒரே வீட்டிலே தங்குவதாயின் பேராபத்துச் சூழ்வது நிச்சயம் எனத் துணிந்த மாங்குயில், மாணிக்கத்தின் வரவை எதிர்பார்த்துத்தான் நின்று கொண்டிருந்தாள்.

மாங்குயிலின் பரிதாபகரமான தோற்றத்தைப் பார்த்ததும் மாணிக்கம், "மாங்குயில், நீ ஏன் இன்னும் நின்று கொண்டே இருக்கிருய்? உன்னை வருத்தும் அந்தக் கொடுமையான வியாதிதான் என்ன? சங்கரனைக் கூப்பிடட்டுமா? அவன் ஒரு மருத்துவனுயிற்றே" என்று கேட்டான்.

"வேண்டாம். நீங்கள் எந்த டாக்டரையுமே அழைத்து வரவேண்டாம். என்னைப் பிடித்திருப்பது உடல் வியாதி அல்ல; உள்ள வியாதி" என்று வேதனையை வெளிப்படுத்தினுள் மாங்குயில்.

பின்னர் மாணிக்கத்தை ஆவலோடு அருகில் அழைத்து அணைத்துக்கொண்டு, "அன்பே, சங்கரன் உங்களுடைய ஆத்ம நண்பன் என்பது உண்மைதானு?" என்று கேட்டாள்.

"ஆம்; அதற்கென்ன சந்தேகம்? என் உயிருக்குயிராகிய தோழன் அவன். இன்னும் சொல்லப்போனுல் அவன் என்னுடைய மூத்த அண்ணனென்றே சொல்ல வேண்டும். ஒருமுறை அவனேடு பழகிவிட்டால் மறுமுறை அவனை விட்டுப் பிரிவது கடினம்" என்று கேள்விக்குப் பதில் அளித்தான் மாணிக்கம்.

அவனது விடையைக் கேட்டதும் தன்னையறியாமல் வாய்விட்டுச் சிரித்தாள் மாங்குயில். அவளது கண்களோ கலக்கத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன.

"நீங்கள் சங்கரனை இந்த வீட்டிலேயே தங்கும்படி கேட்டுக்கொண்டீர்கள். ஆயுட்காலம் முழுதும் அவன் உங்களோடு தங்கியிருக்க வேண்டுமென்பதுதான் உங்களுடைய ஆசை. நீங்கள் கெஞ்சக் கெஞ்ச அவன் மிஞ்சிக்

கொண்டே இருந்தான்.''—இதை மாங்குயில் ஏன் சொன்னுள், எதற்குச் சொன்னுள் என்பதே தெரியவில்லை.

''மாங்குயிலே, என் பிரியத்திற்குரியவளே, சங்கரன் என்னுடன் தங்கியிருக்க வேண்டுமென்பது என்னுடைய தணியாத ஆசை. என் உள்ளங் கவர்ந்த உன்னேடும், சங்கரனேடும் ஒரே வீட்டில் வாழுகின்ற பாக்கியம் கிட்டுமாயின் நான் எவ்வளவு மகிழ்ச்சி அடைவேன் தெரியுமா? பள்ளிக் கூடத்தில் நாங்கள் இருவரும் ஒன்ருகப் படிக்கும்போது நான் அவனிடம் ஆயிரம் தடவைகளுக்கு மேலாக எனக்குச் சொந்தமான பொருள்களிலெல்லாம் 'பாதி பாதி தருவதாக வாக்களித்திருக்கிறேன்'' என்று மாணிக்கம் விடாப்பிடியாகப் பேசினுன்.

“ஆ, உங்களுக்குச் சொந்தமான பொருளிலெல்லாம் பாதி பாதி தருவதாகவா வாக்களித்திருக்கிறீகள்?''-அதற்கு மேல் அவளால் பேசமுடியவில்லை. நாக்கு வறண்டுவிட்டது.

எதிர்பாராதவிதமாக ஜெனி வீ வீ அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தாள். மாணிக்கமும் மாங்குயிலும் பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்ததும், அருகில் இருந்த அறைக்குள் நுழைந்து மறைந்துகொண்டாள். அவர்கள் பேசிக் கொண்டிருந்ததையும் ஒட்டுக் கேட்கலானுள்.

மாங்குயிலைப் பார்த்து மாணிக்கம், “நீ ஏன் அப்படிக் கேட்கிருய்?'' என்று கேட்டான்.

சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''எனக்கு, நெடுநாட்களுக்கு முன்பாகவே சங்கரனைத் தெரியும். அவனேடு சென்னையில் நான் வாழ்ந்திருக்கிறேன்'' என்று மாங்குயில் சொன்னுள்.

“ரொம்ப நல்லதாகப் போயிற்று. பழைய சிநேகிதனைச் சந்திப்பதைப்போலவே நீயும் சங்கரனைச் சந்திக்கலாம் அல்லவா? சங்கரனை அறிமுகப்படுத்த வேண்டிய தேவையே இல்லை. என்னுடைய மனைவி அவனுடைய சிநேகிதி என்பதை அறியும்போது அவன் மிக மிக ஆனந்தப்படுவான்'' என்று மேலெழுந்தவாரியாகப் பேசிக் கொண்டே போனுன் மாணிக்கம்.

"நான் சங்கரனைச் சென்னையிலேயே அறிவேன்" என்று திரும்பத் திரும்பச் சொன்னாள் மாங்குயில்.

"அதில் அப்படி என்ன விசேஷம் இருக்கிறது?" என்று கேட்டான் மாணிக்கம்.

விஷயத்தை விளங்கிக்கொள்ளாமல் தன்னைக் கேள்வி கேட்பதைக் குறித்து வேதனை கொண்டாள் மாங்குயில். எதை வெளிப்படையாகச் சொல்லக்கூடாது என்று எண்ணியிருந்தாளோ, அதை அப்பட்டமாகச் சொல்லி விடும்படி அமைந்திருந்தது அவன் போக்கு. அவனது கைகளை இறுகப் பிடித்துக்கொண்டு, "நான் சொல்லுவதைக் கூர்ந்து கவனியுங்கள். எனது கடந்த கால வாழ்வைப் பற்றி நான் கவலைப்படக்கூடாது என்று நீங்கள் பலதடவை கூறியிருக்கிறீர்கள். நானும் உங்கள் விருப்பத்திற்கு ஏற்ற படியே இதுகாறும் நடந்து வந்திருக்கின்றேன். ஆனால் இப்போது...இப்போது..." என்று துவங்கிய சொற்களை முடிக்க முடியாமல் திண்டாடினாள் மாங்குயில். இருப்பி னும் உடலிலிருந்து தைரியத்தையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு மேலும் பேசத் துவங்கினாள். "என் அன்பே, என் வாழ்வில் பல மர்மங்கள் மறைந்துகிடக்கின்றன. என் பழங்கால வாழ்வைப்பற்றி நீங்கள் தெரிந்துதான் ஆக வேண்டும். அப்போதுதான் நான் ஏன் சங்கரனைப் பார்க்க விரும்பவில்லை என்பதை நீங்கள் அறியமுடியும். இப் போது தெரிகிறதா, நான் சங்கரனைச் சென்னையில் சந்தித்திருக்கிறேன் என்று பலமுறை சொன்னதின் பொருள்?"

யாரோ சம்மட்டி கொண்டு தலையில் அடிப்பதைப் போல உணர்ந்தான் மாணிக்கம். ஆற்றாத வேதனையோடு அருகிலிருந்த நாற்காலியில் போய் உட்கார்ந்தான்.

"கடவுளே, அடகடவுளே" என்று முணுமுணுத்தான்.

கைகள் இரண்டையும் ஒன்று சேர்த்துக் கடவுளைக் கை தூக்கித் தொழுதான். முகத்தைக் கைகளுக்குள் மறைத் துக்கொண்டான். வெகு சிரமங்களுக்கிடையே மூச்சு வெளி வந்துகொண்டிருந்தது.

உள்ளத்தில் ஏதோ ஒருவித உணர்ச்சி மயக்கத்தை உண்டுபண்ணிக் கொண்டிருக்க, அவன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

தன்னை மாணிக்கம் அடித்துத் துன்புறுத்தினால்கூட தேவலை, என்று எண்ணினாள் மாங்குயில். அவனுடைய காலடியில் விழுந்து கதறத் துவங்கினாள்: "அன்பே, மன்னித்துவிடுங்கள்; என்னை மன்னித்துவிடுங்கள்" என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டாள். "நான் உங்களை வேண்டுமென்றே வேதனைக்குள்ளாக்கவில்லை. அமைதியான வாழ்வில் ஆண்டவன் புயலை வீசும்படி செய்துவிட்டான். செய்த குற்றத்திற்காக வருந்துபவரை இறைவன்கூட மன்னித்துவிடுவான். ஆகவே, நீங்களும் என்னை மன்னித்துவிடுங்கள்" என்று அழுது கண்ணீர் வடித்துக்கொண்டே ஆற்றாமையைப் புலப்படுத்தினாள் மாங்குயில்.

மாணிக்கம் வாளா நின்றுகொண்டிருந்தான்.

"நீங்கள் ஏன் பேச மறுக்கிறீர்கள்? என் செய்கைகள் உங்களுக்குப் பிடிக்கவில்லையா? என்மேல் உங்களுக்குப் பிரியம் அற்றுவிட்டதா? அப்படியானால் இன்றே இங்கிருந்து போய்விடுகிறேன். நீங்கள் என் பொருட்டு அணுஅளவுகூட அவதியுறத் தேவையில்லை", என்று மேலும் பேசினாள் மாங்குயில்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது.

மாணிக்கம் நிலைமையைச் சமாளிக்க முடியாதவனாகி விட்டான். காலடியில் விழுந்து கிடந்த மாங்குயிலைக் கைகளால் தூக்கி, "சங்கரன் என் உடன்பிறந்தவன்... ஆப்த நண்பன் என்பதை நீ அறிவாயல்லவா?" என்று கேட்டான்.

மாங்குயில் அழுதுகொண்டே, "இல்லை...இல்லை...ஒரு நாள், 'சங்கரன் கப்பல் கவிழ்ந்து கடலில் மூழ்கி இறந்து விட்டான்' என்று நீங்கள் சொன்னீர்கள் அல்லவா? அன்று தான் எனக்குச் சங்கரன் உங்களுடைய நண்பனென்பது தெரியும். மேலும் அன்று இரவு உங்கள் மேஜையில் விரித்துக் கிடந்த புகைப்பட ஆல்பத்தைப் பார்க்கநேர்ந்தது.

அந்த ஆல்பத்திலிருந்த சங்கரனின் படத்தைப் பார்த்ததும் நான் அடைந்த வேதனைக்கு அளவே கிடையாது. சங்கர னுக்கும் எனக்கும் இருந்த உறவு பற்றி உங்களிடம் கூற லாமா வேண்டாமா என்று நெடுநேரம் யோசித்தேன். உண் மையைத் தெரிவிப்பதால் உங்கள் உள்ளம் வேதனையுறும் என்று எண்ணினேன். மேலும் வேதனைக்குரியவன் இறந்து விட்டதால் விஷயத்தை வெளிப்படுத்தாமல் இருப்பதுதான் உகந்தது என்று எண்ணி உங்களிடம் நான் எதையுமே சொல்லவில்லை'' என்று சொன்னாள்.

''அடி அபாக்யவதி!'' என்று முணுமுணுத்தான் மாணிக்கம்.

''நன்றாக நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் என்னை மணந்துகொள்ள விரும்பியபோது நான் எவ் வளவோ தடுத்துப் பார்த்தேன். சாடையாக எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். நீங்கள் அப்போது எதையுமே லட்சியம் செய்யவில்லை,'' என்று பழைய நிகழ்ச்சியை நினைவு படுத்தினாள் மாங்குயில்.

''நீங்கள் என்னைத் திருமணம் செய்துகொள்ளாமல் இருந்திருந்தால் நாயை அடித்து விரட்டியதைப்போல என் னையும் விரட்டியிருக்கலாம். கிழிந்துபோன சட்டையைத் தூக்கி எறிவதுபோல என்னையும் உதறித்தள்ளி இருக் கலாம். ஆனால் இப்போது.........? நான் இப்போது உங்க ளுடைய மனைவி. உங்களுடைய வாழ்வில் சம உரிமை கொண்டவள். உங்களுடைய பிள்ளைக்குத் தாய். ஆகவே நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள். நான் உங்களுக்கு என் மனதாரக் கேடு நினைத்ததுமில்லை—செய்ததுமில்லை,'' என்று நிலைமையைத் தெளிவு படுத்தினாள் மாங்குயில்.

மாணிக்கம் மேலும் பேசாமல் நின்றுகொண்டே இருந்தான்.

''நீங்கள் என்னைக் கலியாணம் செய்துகொள்ள விரும் பியபோது என்னுடைய பழங்காலச் சரித்திரத்தைத் தெரிந்துகொள்ளாமல் மணம் செய்துகொள்ள முன்வரு வது முட்டாள்தனம் என்று பலமுறை சுட்டிக் காட்டி னேன். உங்களை மணந்துகொள்ள முடியாது என்று கண்

டிப்பாக மறுத்து நின்றேன். நீங்கள் கொடுத்த உறுதி களை நம்பியும், உபத்திரவத்தைத் தாளாமலும்தான் உங் களை மணந்துகொள்ள முன்வந்தேன். இதை நீங்கள் மறந்துவிடக் கூடாது'' என்று திரும்பவும் பழங் கதையை நினைவுக்குக் கொண்டுவந்தாள் மாங்குயில்.

அரைகுறையாகத் திறந்துகிடந்த கதவின் வழியாகப் பார்த்தபோது, யாரோ கீழே இறங்கிப் போவதைப் போலத் தெரிந்தது. மேலும் காலடிச் சப்தமும் கேட்டது.

''சங்கரன் கீழே இறங்கி வருவதாக நான் எண்ணு கிறேன்,'' என்று மாணிக்கத்தைப் பார்த்து மாங்குயில் சொன்னாள்.

மாணிக்கம் வெளியே வந்து கவனித்தான். அவன் கண்ணுக்கு யாருமே தென்படவில்லை. திரும்பவும் ஓடி வந்து மாங்குயிலை மார்புறத் தழுவிக்கொண்டான். அவன் கண்களிலும் நீர் ஆறாகப் பெருகியது.

''பெண்ணே, எல்லாம் உன்னுடைய தவறல்ல; எல் லாம் ஆண்டவன் விளையாட்டு. நான் உன்னைக் காதலிக் கிறேன். நீ என்னை விட்டுப் போய்விடுவதாக இனி ஒரு போதும் சொல்லாதே. நீ இல்லையேல் நான் சாகவேண்டி யதுதான்!'' என்று அவதிகளுக்கிடையே அன்பைத் தெரி யப் படுத்தினான்.

முற்றத்தில் மாட்டியிருந்த கடிகாரத்தில் மணி ஒன்று அடித்தது. இதுகாறும் வார்த்தைகளால் பேசிக்கொண் டிருந்தவர்கள், இப்போது செயலில் ஈடுபடலானார்கள்.

''அவன் விழித்து எழுந்து வரும் வரையில் நாம் இங்கே தங்கி இருக்கக்கூடாது. அதற்குள்ளாக நாம் இங்கிருந்து போய்விட வேண்டும்,'' என்று தன் கருத்தைத் தெரியப் படுத்தினாள் மாங்குயில். சங்கரன் என்ற பெயரைச் சொல்லவே அவளுக்கு வெட்கமாயிருந்தது. அதனால் தான் 'அவன்' என்று குறிப்பிட்டாள்.

''அப்படியானால் நாம் என்ன செய்யவேண்டும் என நீ விரும்புகிறாய்?'' என்று அவளைப் பார்த்து மாணிக்கம் கேட்டான்.

"நேரிடையாக அவனிடம் சென்று விபரங்களைக் கூறி, இங்கிருந்து போய்விடும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். அந்தக் காரியத்தை நீங்களே துணிந்து செய்யவேண்டும்," என்றாள் மாங்குயில்.

"முடியாது......முடியாது......நண்பனென்று வந்தவனை நான் 'வெளியேபோ' என்று விரட்டி ஓட்ட முடியாது." என்றான் மாணிக்கம்.

"அப்படியானால் நான் போகச் சொல்லட்டுமா?" எனக் கேட்டாள் மாங்குயில்.

"அதுவும் கூடாது," என்று தடுத்து நின்றான் மாணிக்கம்.

அதன் பின்பு, என்ன செய்யலாமென்பது குறித்து இருவருமே யோசிக்கலாயினர்.

"என் தலை தெறித்து விடுவதைப்போல் உணர்கிறேன். இந்தச் சமயத்தில் என்ன செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை. பொழுது விடிந்ததும் அவனைப் போகச் சொல்லி விடலாம். அப்புறம் அவன் இந்தப் பக்கமே திரும்பாதபடி பாதுகாத்துக்கொண்டு அமைதியோடு வாழலாம்," என்றான் மாணிக்கம். அதை ஆமோதிக்கத் தயாராகயில்லை மாங்குயில்.

"அப்படியானால் நாம் இரவோடு இரவாக ஊரின் ஒதுப்புறமுள்ள குடிசை வீட்டுக்கு ஓடிப்போய் விடுவோம். நம்மைக் காணுமல் சங்கரனும் வீட்டைவிட்டு வெளியேறி விடுவான். குடிசை வீடுதான் நமக்குக் குதூகலமான வாழ்வைத் தரவல்லதாகும்," என்றான் மாணிக்கம்.

"அப்படியானால் அவன்...?" என்று அரைகுறையாகக் கேள்வியை நிறுத்தினாள் மாங்குயில்.

"அவனைப் பாராமல் இருப்பதுதான் நல்லது. அவனைப் பார்த்தால் நம் வாழ்வே பாழாகிவிடும்," என்று அவளுக்குச் சமாதானம் கூறினான் மாணிக்கம்.

"நீங்கள் சொன்னதுதான் சரி. நாம் இப்போதே குடிசைவீட்டுக்குப் போய்விடுவோம்," என்றாள் மாங்குயில்.

இத்தகைய முடிவோடு அவர்கள் வெளியேறிக்கொண்டிருக்கும்போது ஜெனி வீ வீ வழி மறித்து நின்ருள். இவ்வளவு நேரமாக அவர்கள் பேசியதைக் கேட்டுக்கொண்டும், செய்ததைப் பார்த்துக்கொண்டும்தான் அவள் நின்று கொண்டிருந்தாள். "நீ ஒரு விஷ தேவதை. உன் அழகு ஆபத்துக்கள் நிறைந்த சுரங்கம். நீ ஆபாசத்தின் பெரு உரு. உன்னை ஆண்டவன் மன்னிக்கவே மாட்டான்," என்று அவளது வாய் மாங்குயிலைப் பார்த்து முணு முணுத்தது.

மாணிக்கத்தைப் பார்த்து, "காலையில் எழுந்ததும் சங்கரனிடம் நான் என்ன சொல்லவேண்டும்? உங்களுடைய வெட்கங்கெட்ட வாழ்க்கையைச் சொல்லட்டுமா?" என்று ஜெனி வீ வீ கேட்டாள்.

"நாக்கை அடக்கிப் பேசு, கிழட்டு முண்டமே," என்று கோபித்துக்கொண்டான் மாணிக்கம்.

"அவள் ஏதாவது சொல்லித்தானே ஆகவேண்டும்?" என்று அவளுக்குப் பரிந்து பேசினுள் மாங்குயில்.

"அவள் எதை வேண்டுமானுலும் சொல்லிக்கொள்ளட்டும். அவள் என்ன சொல்லவேண்டுமென்பது குறித்து யோசிக்க நேரமும் கிடையாது; நிம்மதியும் இல்லை. ஆகவே அவள் இஷ்டப்படி எதை வேண்டுமானுலும் சொல்லிக் கொள்ளலாம்," என்று ஆத்திரத்தை வெளிப்படுத்தினுன் மாணிக்கம்.

அவனது அவதியைக் கண்ட ஜெனி வீ வீ அவன்பால் இரக்கம்கொண்டு, "குழந்தையே, உனக்காக நான் பொய் சொல்லுகிறேன். ஏதாவது ஒரு பொய்யைச் சொல்லி உன்னை உன் நண்பனிடமிருந்து காப்பாற்றி விடுகிறேன். ஆனுல், ஆண்டவன் உன்னைக் காப்பாற்றுவான் என்று நான் உறுதியாகச் சொல்லமுடியாது," என்று சங்கடத்தோடு சொல்லி முடித்தாள்.

"கிழட்டு முண்டம் ஏதேதோ சொல்லுகிறது. நீங்கள் அவற்றைப் பொருட்படுத்த வேண்டாம். நான் மட்டும் இந்த நள்ளிரவில் இங்கிருந்து குடிசை வீட்டுக்குப் போய்

விடுகிறேன். நீங்கள் எனக்காக எவ்வித சிரமத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டாம்,'' என்ருள் மாங்குயில்.

''அது முடியாது. நீ மட்டும் தனியாகப் போக முடியாது. சந்தோஷம் வந்தாலும் சரி, சங்கடம் வந்தாலும் சரி, அதில் இருவருக்கும் சம உரிமையுண்டு. நான் உன்னைக் காதலிக்கிறேன். காதல் உள்ள இடத்தில் கடவுளின் கடாட்சம் நிச்சயமாக இருக்கும். ஆகவே நீ எதற்கும் கலங்க வேண்டாம்,'' என்ருன் மாணிக்கம்.

''கடவுளின் கடாட்சம் உங்களுக்கு நிச்சயமாக இருக்காது.'' என்று கூப்பாடு போட்டாள் ஜெனி வீ வீ.

''அவள் சொல்லுவதைப் பார்த்தீர்களா? கடவுள் நம்மைக் காப்பாற்றவே மாட்டாரா?'' என்று கலக்கத்தோடு கேட்டாள் மாங்குயில்.

''அந்தக் கிழட்டு முண்டத்தின் பேச்சுக்களுக்கு நீ செவி சாய்க்காதே. ஆண்டவன் அருள் மயமானவர். நிச்சயமாக நம்மைக் காப்பாற்றுவார்,'' என்ருன் மாணிக்கம்.

''ஆண்டவன் நிச்சயமாக உங்களைக் காப்பாற்றுவான். ஆனல் என்னைக் காப்பாற்ற முன்வர மாட்டான், என்றே நான் எண்ணுகிறேன்,'' என்று ஆற்ருமையோடு பேசினுள் மாங்குயில்.

இப்படியாகப் பேசிவிட்டு இருவரும் வீட்டைவிட்டு வெளியேறி விட்டனர்!

# 8

திருட்டுத்தனமாக, வந்திருந்த விருந்தாளியை வீட்டில் வைத்துவிட்டு வெளியேற வேண்டிய நிலைமையைக் குறித்துக் கணவனும் மனைவியும் வெட்கம் அடைந்தனர். அப்படிச் செய்வது நல்லதா, கெட்டதா? என்பதை யோசிக்கக்கூட அவர்களுக்கு அவகாசமில்லை. சங்கரனை விட்டு விட்டு எப்படியேனும் தப்பிவிடவேண்டு மென்பதுதான் அவர்களது ஒரே குறி.

குளிர் கடுமையாக வாட்டிக் கொண்டிருந்தது. மாணிக்கம் மாங்குயிலைத் தோளோடு தோள் அணைத்துக் கொண்டு தோட்டத்தின் வழியாக அழைத்துச் சென்றான். சிறிது தூரம் கடந்ததும் கம்பீரமாக நின்றுகொண்டிருந்த 'அறிவகம்' என்ற மாளிகையைப் பார்த்து இருவரும் கண்ணீர் சொரிந்தனர். சங்கரன் உறங்கிவிட்டானா அல்லது விழித்துக்கொண்டிருக்கிறானா? அவன் தங்கியிருந்த அறையிலிருந்து வெளிச்சம் வெளிவருகிறதா? என்பதையெல்லாம் அறிய விரும்பினான் மாணிக்கம்.

சர்வஜாக்கிரதையோடு நடந்து கொண்டிருந்தனர் தம்பதிகள். மாளிகையிலிருந்து குடிசை வீட்டுக்கு நடந்து போவதில் அவர்களுக்கு நல்ல பழக்கமுண்டு. இருந்தாலும் நடுநடுங்கிக்கொண்டேதான் சென்றனர். ஒரு நிமிஷத்தில் கடக்க வேண்டிய தூரத்தை ஒன்பது நிமிஷத்தில் கடந்தனர்.

குளிரின் நடுக்கத்தாலும் இருளின் மயக்கத்தாலும் அவர்கள் இருமுறை வழிதப்பிச் சென்று விட்டனர். போதாக்குறைக்கு புயற் காற்று பெரு மழையைக் கொண்டு வந்துவிட்டது. எப்படியோ தட்டுத்தடுமாறி அவர்கள் குடிசை வீட்டை அடைந்துவிட்டனர்!

எப்பொழுதோ ஒருமுறை குடிசை வீட்டுக்குச் சென்றிருந்தபோது அவ் வீட்டின் ஜன்னல் கதவுகளைச் சாத்து

தற்கு மறந்துவிட்டுப் போய்விட்டமையால், அப்போது பெய்த பெரு மழையின் காரணமாக உள்வீடு முழுதும் மழை நீரால் நனைந்திருந்தது.

கூடுமான வரையில் சிரமப்பட்டு மழை நீர் முழுவதை யும் துடைத்துச் சுத்தம் செய்தனர். அடுப்பங்கரைக்குச் சென்று அங்கு கொட்டிவைத்திருந்த கரியை எடுத்துவந்து நெருப்பை மூட்டினான் மாணிக்கம். குளிரால் நனைந்திருந்த அவனுக்கு அப்போது வெம்மை அதிகமாகத் தேவைப்பட்டது. மாங்குயில் நனைந்திருந்த ஆடைகளைக் கழற்றிப் போட்டுவிட்டு புதிய ஆடைகளை உடுத்திக்கொண்டாள். மாணிக்கமும் அதுபோல செய்துகொண்டான்.

மணி சரியாக மூன்று அடித்தது.

மாணிக்கம் மனைவியை அழைத்து, "அன்பே, நீ அதிக மாகக் களைப்படைந்திருக்கிறாய். ஆகவே படுக்கையறைக்குச் சென்று படுத்துக்கொள். சிறிது நேரம் குளிர் காய்ந்து விட்டு நானும் படுக்கையறைக்கு வந்து சேருகிறேன்!" என்றான்.

மாங்குயில் சரியென்று தலையசைத்தாள்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது. நிலையிலிருந்து, ஜன்னல்களையும் கதவுகளையும் பெயர்த்தெடுத்துவிடுவதைப் போலப் புயற் காற்று பலமாக வீசியது. மரத்திலிருந்து கிளைகளும், கொம்புகளும் கீழே ஒடிந்து விழுந்தன.

மாணிக்கம் தன் மனைவியை ஏறிட்டுப் பார்த்தான். அவன் பார்வையிலே கனிவும், கருணையும் பொங்கி வழிந் தன. அவள் நின்றுகொண்டிருந்த கோரம் அவனை அணு அணுவாக வருத்திக்கொண்டிருந்தது. அவன் அனுபவித் துக்கொண்டிருந்த வேதனைக்குக் கொஞ்சங்கூடக் குறை யாமல் அவளும் அவதியை அனுபவித்துக்கொண்டுதான் இருந்தாள். தன்னுள் புகைந்துகொண்டிருந்த வேதனையை மறந்துவிட்டு மனைவியை மனதார நேசிக்க வேண்டுமென்று தான் மாணிக்கம் பெரிதும் பாடுபட்டான். ஆனால் அது அவனால் கைகூடுவதாக இல்லை.

மாங்குயிலுக்காகவே, தான் இவ்வுலகில் வாழ விரும்பு வதாக எண்ணிக்கொண்டிருந்த மாணிக்கம், இப்போது அவளை முன்னிட்டு எப்படி இவ்வுலகில் வாழ முடியும் என்று எதிர்மாருகச் சிந்திக்கத் துவங்கிவிட்டான். சில ஆண்டுகள் அவளோடு தான் வாழ்ந்த வாழ்வைச் சிறந்த தொரு வாழ்வாகக் கருதிய அவன், அதனைச் சீர்கெட்ட வாழ்வு என்று கருதத் துவங்கிவிட்டான். அவளது மார் பின் மத்தியில் மச்சம் ஒன்று இருப்பதைத் தான் மட்டுமே அறிந்திருக்க முடியுமென்று நம்பியிருந்த மாணிக்கம், அதனைப் பலரும் அறிந்திருக்கிருர்கள் என்பதை எண்ணி யதும் பெருந் துன்பத்திற்கு ஆளாகி நின்ருன்.

தன் மனைவிக்கு அறிமுகமான ஆசாமி தன்னுடைய நெருங்கிய நண்பனுகிய சங்கரனுக இல்லாதிருந்தால் அவன் ஓரளவு அமைதியைப் பெற்றிருக்க முடியும். மானங்கெட்ட வாழ்வு நடத்தியதற்காகச் சங்கரனை மன்னிப்பதற்கு அவன் தயாராக இருந்தாலுங்கூட, மாங்குயிலைப் பொறுத்த வரையில் மன்னிப்புத் தருவதற்கு அவனது மனச்சாட்சி இடந்தரவில்லை.

அவன் உள்ளத்தில் 'மாங்குயிலுக்குச் சங்கரன்தான் கணவன், தான் ஒரு கள்ளக்காதலன்' என்ற எண்ணம் அடிக்கடி தோன்றலாயிற்று. எவனுக்கோ உரிமையான ஒரு பொருளைத் தான் திருடி வைத்திருப்பதாக உணர லானுன். மாங்குயிலோ செய்வது இன்னதென்று அறி யாமல் திகைத்துக்கொண்டிருந்தாள். அவள் எதைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருக்கிருள் என்பதை அறிய மாணிக்கம் ஆசைப்பட்டான். உண்மையைச் சொல்லப்போனுல் அவள் உள்ளம் பாழ்வெளியாகத்தான் இருந்தது. துன்பத்தாலும் தொல்லையாலும் அலுத்துப்போயிருந்த அவளின் உள்ளம் சிந்திக்கும் ஆற்றலை இழந்திருந்தது. நேரம் ஆக ஆக வெளியே வீசிக்கொண்டிருந்த புயல் ஓய்ந்துவிட்டது. ஆனுல் உள்ளத்தில் வீசிக்கொண்டிருந்த புயலோ ஓயவே யில்லை.

ஏற்றிவைக்கப்பட்ட மெழுகுவர்த்தி எரிந்து தீர்ந்து விட்டது. பொழுதும் புலர்ந்து விட்டது. இரவு முழுதும்

எங்கோ ஒளிந்துகொண்டிருந்த பகலவன் மெதுவாகத் தலையை வெளியே காட்டினான்!

இருக்கையை விட்டு எழுந்து மாணிக்கம் ஜன்னல் பக்கம் வந்தான். கிளைகளையும் கொம்புகளையும் பறிகொடுத்துவிட்டு மரங்கள் நின்றுகொண்டிருந்தன. பாதைகள் முழுதும் சேறும் சகதியும் நிரம்பிக்கிடந்தன. "புயல் செய்த அலங்கோலத்தைப் பார்த்தீர்களா?" என்று கேட்டுக்கொண்டே மாங்குயில் மாணிக்கத்தை நெருங்கினாள். "பெரும் மழைதான் இதற்கெல்லாம் காரணம்," என்று அவளுக்குப் பதில் தந்தான் மாணிக்கம். இருவருக்கும் ஏதாவது பேசிக்கொண்டே இருக்கவேண்டும் என்ற எண்ணம் மிகுதியாக இருந்தது.

"பாழாய்ப்போன காற்று எனக்குப் பிரியமான ஒரு மரத்தைச் சாய்த்துவிட்டது. மேலும் அழகோடு விளங்கிய மற்றொரு மரத்தை வேரோடு வீழ்த்திவிட்டது. இதெல்லாம் எதற்கு அறிகுறியோ?" என்று தன் ஏக்கத்தை வெளிப்படுத்தினாள் மனைவி. "தீயவற்றை ஆண்டவன் அழிக்கத்தானே செய்வான்?" என்று பதில் சொன்னான் புருஷன். இருவர் உள்ளத்திலும் ஏககாலத்தில் ஒரு பயம் புகுந்துவிட்டது. அவர்கள் இந்தக் குடிசை வீட்டுக்கு வந்திருக்கக்கூடாது!

மாணிக்கம் தன் மகள் தேன்மொழியைப் பாலூட்டி வளர்த்த தாதியினிடமிருந்து அழைத்துவர விரும்பினான். பால் ஒழுகும் அப் பச்சிளங் குழந்தையின் முகத்தைப் பார்த்தாவது தன் துன்பத்தைத் துடைத்துக் கொள்ளலாம் என்பது அவன் எண்ணம். பெற்றெடுத்த குழந்தையின் பேச்சை எடுக்கவும் மாங்குயில் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. 'தேன் மொழி—அவள் என் கண்மணி,' என்று தனக்குள்ளாக அடிக்கடி சொல்லிக் கொண்டாள்.

"நம் கண்மணி தேன்மொழியைச் சீக்கிரம் அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள். அது அழகான யோசனைதான். அதை முழு மனதோடு வரவேற்கிறேன். பிள்ளை வந்து சேருவதற்குள் காலை உணவைத் தயாரித்து விடுகிறேன்," என்று தன் ஆசையைக் கொட்டி அளந்தாள் மனைவி.

மாங்குயில் அடுப்பங்கரைக்குப் போனபிறகு ஏதாவது ஒரு வேலையில் ஈடுபட்டு தன் கவலையை மறந்துவிட வேண்டுமென்று பிரம்மப்பிரயத்தனப்பட்டான் மாணிக்கம். மேஜைக்குச் சென்றான். அங்கு சிதறிக்கிடந்த சாமான்களைச் சீர்படுத்தினான். அலமாறிக்குப் போனான். அங்கு அலங்கோலமாகக் கிடந்த சாமான்களை அழகுபடுத்திவைத்தான். அப்புறம்...? என்ன செய்வது என்பதுதான் அவனுக்கும் விளங்கவில்லை...!

"தேன்மொழி வரப்போகிறாள்! தன் குடும்பத்துக்குரிய ஒரே வாரிசு வரப்போகிறது!" இதை நினைத்ததும் அவன் உள்ளம் களித்து நின்றது.

மூன்றரை ஆண்டுகள் நிரம்பிய தேன்மொழி, அழகின் அவதாரமாக விளங்கினாள். அவளது துருதுருத்த நடையும் குறுகுறுத்த பார்வையும் பார்ப்பவரைப் பரவசமடையச் செய்துவிடும். மேலும் அவள் அறிவுடையவளாக விளங்கினாள்.

வீட்டிற்குள் நுழைந்ததும் "அப்பா என்னை எடுக்கிக்கொள். இதோ நான் வந்துவிட்டேன்," என்று ஆனந்தக் கூச்சல் போட்டாள் குழந்தை. குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்டதும் வெகு தொலைவில் நின்றுகொண்டிருந்த மாணிக்கம் விரைந்தடித்துக்கொண்டு ஓடிவந்தான். வந்ததும் வராததுமாக மகளை எடுக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு ஆடினான்—ஓடினான்—பாடினான்!

மாங்குயிலும் மகளை வாரி அணைத்துக்கொள்ள ஆசைப்பட்டாள். அம்மாவைக் கண்டதும் குழந்தை அப்பாவைப் பார்த்துத் தன்னை இறக்கிவிட்டு விடும்படி கேட்டுக்கொண்டது.

"அம்மா, நான் உனக்குச் சமையல் சொல்லித்தருகிறேன்" என்று தன் ஆவலை வெளிப்படுத்தினாள் மகள்.

"வா, வந்து சொல்லிக்கொடு," என்று வாஞ்சையோடு கூப்பிட்டாள் அன்னை.

அடுப்பங்கரைக்கு ஓடிச் சமையல் வேலையில் ஈடுபடலானாள் மகள். அதை ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தனர் பெற்றோர்கள்.

"கடந்ததையெல்லாம் மறந்துவிட்டு, கவலையே இல்லாமல் நாம் வாழ முற்படுவோம்," என்று தன் கருத்தை மாங்குயில் தெரியப்படுத்தினுள்.

மாணிக்கம் மாங்குயிலின் பேச்சுக்களுக்குச் செவி சாய்க்காமல் தன் மகளையே பார்த்துக்கொண்டு நின்றுன். நெடுநேரம் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சுவிட்ட மாணிக்கம், மனைவியை அழைத்து, "தேன்மொழியைப் பார்த்தாயா ?" என்று கேட்டான்.

"ஆம், பார்த்தேன்; அவள் பலே கெட்டிக்காரி," என்றுள் மனைவி.

"நான் அதைச் சொல்லவில்லை........"

"அப்படியானுல்.........?"

"எனக்குப் பயமாக இருக்கிறது. நெஞ்சு வெடித்து விடும்போல் இருக்கிறது. அக் குழந்தை ஏறத்தாழ சங்கரனின் உருவத்தைப் பெற்றிருக்கிருள்!"

"ஆ......இது என்ன அநியாயம்."—மாங்குயில் அலறினுள். மாணிக்கம் மயக்கத்தோடு நின்று கொண்டிருந்தான்.

அவன் சொன்னதில் தப்பொன்றுமில்லை. ஏனெனில் தேன்மொழி சங்கரனின் உருவத்தையே பெற்றிருந்தாள். கூர்ந்து கவனித்தால் சங்கரனின் உருவத்தை அவளின் முகம் அப்பட்டமாக எடுத்துக் காட்டத் தவறவில்லை!

"நீ சொல்லுவது சுத்தப் பொய். தேன்மொழி என்னுடைய உருவத்தைத்தான் பெற்றிருக்கிருள். சங்கரனின் உருவத்திற்கும் தேன்மொழியின் உருவத்திற்கும் கொஞ்சங் கூடச் சம்பந்தமே கிடையாது," என்று கணவனின் மனதைத் தெளிவுபடுத்த முயன்றுள் மனைவி.

"நீ சொல்லுவதுதான் சுத்தப் பொய். தேன்மொழியின் ஒவ்வொரு உருப்பும் சங்கரனின் உருவத்தையே பிரதிபலிக்கின்றன. நான் சொல்வது பொய் என்றுல் நீ யாரை வேண்டுமானுலும் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்,"

என்று தீர்மானமாக ஒரே கருத்தைத் தெரிவித்தான் கணவன். மேலும் அவன் அவளைப் பார்த்து, "உனக்கு சங்கரனின்மேல் உயிர். என்னோடு வாழ்ந்த காலம் அனைத்தும் நீ அவனையே நினைத்துக்கொண்டு வாழ்ந்திருக்கிறாய். அதனால்தான் தேன்மொழி அவனது உருவத்தையே பிரதிபலிக்கிறாள். நீ எவ்வளவு சொன்னாலும் நான் நம்ப மாட்டேன். ஏனெனில் என் பேச்சுக்கு ஆதாரமாக தேன்மொழி என் கண் முன்னரே காட்சியளிக்கிறாள்," என்று கூறினான் மாணிக்கம்.

"இப்படியெல்லாம் பேசுவதற்கு நீங்கள் எப்படி மனம் துணிந்தீர்கள்? அபாண்டமான பழியைச் சுமத்த நீங்கள் அஞ்சவில்லையா?" என்று எதிர்த்துக் கேட்டாள் மனைவி.

"உன் கள்ளக்காதலின் கருவூலமாக விளங்குகிறாள் தேன்மொழி" என்று கத்தினான் மாணிக்கம்.

"நீ சுத்தப் பைத்தியக்காரன்," என்று கத்தினாள் மாங்குயில்.

அவனும் அழுதான், அவளும் அழுதாள்.

பெற்றவர்கள் அழுவதைப் பார்த்து மனம்பொறுக்க சிறுமி, "அப்பா, நீ ஏன் அழுகிறாய்? வா, சாப்பிடலாம்" என்று வாஞ்சையோடு கூப்பிட்டாள். அவனோ அசையாத மரம்போல நின்றுகொண்டிருந்தான்.

"நான் கூப்பிடுவது கேட்கவில்லையா? அல்லது நீ வர மாட்டாயா?" என்று மேலும் மேலும் கேட்டாள் குழந்தை. அவன் பேசா மடந்தையாகவே நின்றுகொண்டிருந்தான்.

தான் எவ்வளவு பேசியும் தன்னோடு தன்னைப் பெற்றவன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே என்று எண்ணி ஏக்கங்கொண்ட குழந்தை, உரிமையோடு அவனது கைகளைப் பிடித்துப் பரபரவென்று இழுத்தது.

கைகளைக் குழந்தையிடமிருந்து பறித்துக்கொண்டு, "என் முன் நிற்காதே. என்னைத் தொந்தரவு செய்யாதே.

இங்கிருந்து போய்விடு,'' என்று ஆத்திரத்தோடு கத்தினான் மாணிக்கம்.

மாணிக்கத்தின் உள்ளத்தைச் சரிவர உணர்ந்து கொள்ளமுடியாத தேன்மொழி, அடிக்கடி தொந்தரவு தரவே அவளை ஓங்கிக் கீழே தள்ளிவிட்டான் மாணிக்கம்.

தரையில் விழுந்து மண்டையை உடைத்துக்கொண்டாள் தேன்மொழி.

அதைக் கண்ணுற்றதும் அலறிக்கொண்டு ஓடிவந்த மனைவி, "பைத்தியக்காரா, நமக்குள் ஏற்பட்ட மனஸ்தாபத்தை பிள்ளையிடமா காட்டுவது? நீ மனிதத்தன்மையை இழந்துவிட்டாயா?'' என்று கோபத்தோடு கேட்டாள்.

தரையில் விழுந்துகிடந்த குழந்தையை எடுத்து அணைத்துக்கொண்டு காயத்துக்குரிய முதல் உதவிகளைச் செய்யலானாள்.

மாணிக்கம் தன்னுடைய முட்டாள்தனத்தை எண்ணி வெட்கம் அடைந்தான். நேராகப் படுக்கையறைக்குச் சென்று தலையணைகளுக்கிடையே தன் முகத்தைப் புதைத்துக் கொண்டான். நெடுநேரம் படுத்த படுக்கையிலேயே இருந்தான். நேரமும் இருட்டிவிட்டது.

அவன் படுக்கையைவிட்டு எழுந்துவந்து பார்த்தபோது மாங்குயில் வீட்டிலேயில்லை. குழந்தையைத் தூக்கிக் கொண்டு அவள் பாலூட்டிய தாதியின் வீட்டிற்குப் போயிருக்கக்கூடும் என்று தனக்குள்ளாகத் தீர்மானித்துக் கொண்டான். சிறிது நேரத்திற்குள் மாங்குயிலும் திரும்பி வந்துவிட்டாள். அவளைப் பார்த்து, "இப்போது மணி என்ன?'' என்று கேட்டான். "சரியாக எட்டு,'' என்று அவள் பதில் கொடுத்தாள்.

"நீ உறங்கினாயா?''

"ஏதோ கொஞ்சம் உறங்கினேன்.''

சிறிது நேரம் மௌனம் நிலவியது.

மாணிக்கம் மனைவியை அழைத்து, "நாம் இப்போது சென்னைக்குப் போகப் போகிறோம். சென்னையில் ஒரு மாத

காலம் தங்கவேண்டும். எல்லாம் மனக்கவலையை மாற்றுவதற்காகத்தான்,'' என்று எதவாகக் கூறினன்.

மாங்குயில் அவனது கருத்தை ஏற்றுக்கொள்ளுபவள் போலத் தலையை அசைத்தாள்.

"நாம் இன்னும் ஒரு மணி நேரத்தில் புறப்படப் போகிறோம்,'' என்றான் மாணிக்கம்.

"ரொம்பவும் சந்தோஷம்'' என்றாள் மனைவி.

பின்பு இருவரும் 'அறிவகம்' என்ற மாளிகைக்குச் சென்று சென்னைப் பிரயாணத்திற்குத் தங்களைத் தயார் செய்துகொண்டனர். மேலும் சங்கரன் அம் மாளிகையை விட்டு வெளியேறிவிட்டான் என்ற செய்தியையும் அறிந்துகொண்டனர். அவர்களுக்கு ஒத்தாசையாகக் கூடமாட உதவி செய்தாள் ஜெனி வீ வீ.

சரியாக மணி ஒன்பது அடித்தது. கோச் வண்டியில் குதிரைகளைப் பூட்டிக்கொண்டு வந்து நிறுத்தினன் பண்ணையாள் ஒருவன். அவ் வண்டியிலேயே அவர்கள் பிரயாணத்தைத் துவங்குவதாக இருந்தனர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் காஞ்சிபுரப் பெரிய சாலையின் வழியாக அக் குதிரை வண்டி விரைந்துகொண்டிருந்தது!

# 9

காற்றில் குளுமை படர்ந்திருந்தது. பச்சைப் பசுமையோடு விளங்கிய பிரதேசம் பாழ் வெளியாகக் காட்சி அளித்தது. பாதை முழுதும் சகதி மயமாக இருந்தது.

பிரயாணத்திற்காக ஏற்பாடு செய்திருந்த கோச் வண்டியில் இருவர்தாம் பிரயாணம் செய்யமுடியும். மாங்குயிலை மணம் செய்துகொண்ட மறு ஆண்டுதான் மாணிக்கம் அந்த வண்டியை விலைக்கு வாங்கினுன். அவ் வண்டிக்கென்றே பிரத்தியேகமாக ஒரு வண்டி ஓட்டியை நியமித்திருந்தபோதிலும், மாணிக்கம்தான் அவ் வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தான்.

அவ் வண்டியில் எவ்வளவோ தடவைகள் தம்பதிகள் இருவரும் உல்லாசப் பிரயாணம் செய்திருக்கின்றனர். சுருக்கமாகச் சொன்னுல் அவ் வண்டி அவர்களுக்கு உவகையின் கருவூலமாகவே உபயோகப்பட்டு வந்திருக்கிறது. ஆனுல் இம்முறை அவ்வண்டியின் பிரயாணம் வழக்கத்துக்கு மாருக அமைந்திருந்தது.

குதிரையை விரட்டி ஓட்டுவதற்காக இடை இடையே வாய் திறந்து பேசினுனே தவிர, மனைவியோடு அவன் ஒரு வார்த்தைகூடப் பேசவேயில்லை.

உள்ளச் சோர்வின் காரணமாகவும், உடல் அலுப்பின் காரணமாகவும் மாங்குயில் அரைகுறைத் தூக்கத்தில் மாணிக்கத்தின் முதுகில் விழுந்து விழுந்து நிமிர்ந்தாள். அவளை நன்கு தூங்கச் செய்யவேண்டுமென்ற எண்ணத்தோடு அவளைத் தன் மடியில் படுத்துக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டான்.

குளிர் அதிகமாக இருந்தமையாலும், தூக்கம் கண்களை உறுத்திக் கொண்டிருந்தமையாலும் சென்னை நகரத்துக்குச் சென்றுவிட வேண்டுமென்று பயணப்பட்டவர்கள்,

எங்கேயாவது ஓரிடத்தில் தங்கிவிட வேண்டுமென்று திட்டமிட்டார்கள்.

"இரவு காஞ்சி நகரில் எங்கேயாவது ஒரு ஓட்டலில் தங்கிவிடலாமென்று எண்ணுகிறேன். உன் அபிப்பிராயம் என்ன? நீ மிகவும் அலுத்துப்போயிருக்கிறாய். எனவே நாளைக் காலையில் மீண்டும் பயணத்தைத் துவங்குவோம்," என்று சொன்னான் மாணிக்கம்.

"எனக்குச் சம்மதமே," என்றாள் மனைவி.

"அப்படியானால் 'எவரெஸ்ட்' என்ற ஓட்டலில் போய் தங்குவோம். அங்கு நமக்கு நிச்சயமாக ஒரு அறை கிடைக்கும்," என்றான் மாணிக்கம்.

'எவரெஸ்ட்' என்பது காஞ்சி நகரத்திலேயே ஒரு பிரபலமான ஓட்டலாக ஒரு காலத்தில் விளங்கியது. ஆனால் புதிதாகப் போடப்பட்ட ரயில் பாதையின் காரணமாகவும், நாகரிகம் மிகுந்த கட்டிடங்கள் நாலாபக்கங்களிலும் கட்டப்பட்ட காரணத்தினாலும் 'எவரெஸ்ட்' தன் முக்கியத்வத்தைச் சிறுகச் சிறுக இழந்துவிட்டது. ஆகவே அவ் ஓட்டலில் இப்போது ஜனக்கூட்டம் அதிகமாக இருப்பதில்லை.

மாணிக்கம், 'எவரெஸ்ட்' ஓட்டலுக்குள் கோச் வண்டியைக் கொண்டுபோய் நிறுத்தினான். ஓட்டல் தொழிலாளி ஒருவன் மாணிக்கத்திற்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்ய முன்வந்தான். குதிரையைத் தொழுவத்தில் கட்டிவிட்டு, மாணிக்கமும் மாங்குயிலும் தங்களுக்கென ஒதுக்கப்பட்ட அறையினுள் நுழைந்தனர்.

மாங்குயிலுக்கு எப்படியாவது அறையினுள் சீக்கிரம் நுழைந்து நன்கு உறங்கவேண்டும் என்ற எண்ணம் மிகுதியாக இருந்தது. ஆனால், அறையினுள் நுழைந்ததும் பழங்கால நினைவுகள் ஒவ்வொன்றாக அவள் நெஞ்சத்தில் படமாடத் துவங்கிவிட்டன. அறையின் மூலையில் இருந்த அலமாரியும், ஜன்னலில் இருந்த வெடிப்புக்களும் அவள் இதற்கு முன்பு இங்கு சங்கரனோடு களித்த இன்பகரமான நாட்களை நினைவுக்குக் கொண்டுவந்தன. ஆனால், மாணிக்

கமோ அறை அழகாக இருக்கிறது என்றெண்ணி மகிழ்ச்சி யடைந்தான்.

இவ்வளவு நல்ல அறையை ஏற்பாடு செய்திருந்த வேலைக்காரனுக்கு ஏதாவது சன்மானம் தரவேண்டு மென்றுகூட ஆசைப்பட்டான். அறையைச் சுத்தம்செய்து விளக்கேற்றி வைக்கும்படி மாணிக்கம் வேலைக்காரனைக் கேட்டுக்கொண்டான்.

கட்டளைக்கு ஏற்பக் கடமையைச் செய்துவிட்டு எஜ மானின் சன்மானத்திற்காக விளக்கு வெளிச்சத்தில் வந்து நின்ருன் வேலைக்காரன். அவனை மேலும் கீழும் பார்த் தாள் மாங்குயில். வேலைக்காரனும் அவளை ஏற இறங்கப் பார்த்தான். இருவரும் ஒருவரை யொருவர் இதற்கு முன்னரே சந்தித்திருக்கிருர்கள் என்பதை அவர்களது பார்வையே தெளிவாக எடுத்துக் காட்டியது!

வேலைக்காரனிடம் சிறிது பணத்தைக் கொடுத்து, வெளியே சென்று குதிரைகளைக் கவனித்துக் கொள்ளும்படி கட்டளையிட்டான் மாணிக்கம். பின்பு அவன் மனைவியை நெருங்கினன். அவளோ, அடக்க முடியாத கலக்கத்தோடு தத்தளித்துக் கொண்டிருந்தாள். "நான் இதற்கு முன்பே இந்த அறையில் தங்கி இருந்திருக்கிறேன். தங்கிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன என்ருலுங்கூட, நேற்றுத் தங்கி யிருந்ததைப் போலவே என் நெஞ்சத்தில் ஒரு உணர்ச்சி ஊடாடுகின்றது," என்று தன்னையுமறியாமல் விஷயத்தை வெளிப்படுத்தினுள் மாங்குயில்.

"நீ ஏதோ பகற்கனவு காணுகிருய். உனக்கு அசதி அதி கம். ஆகவே நிம்மதியாகத் தூங்கு. காலையில் பேச வேண் டியவற்றைப் பேசிக் கொள்ளலாம்," என்ருன் மாணிக்கம்.

"அது சரிதான். ஆனல் எனக்கு இங்கே தங்கியிருப் பதில் கொஞ்சங்கூடச் சந்தோஷமேயில்லை. இந்த அறை யைப் பார்க்கும் போது எனக்கு ஒரே பயமாக இருக்கிறது," என்ருள் மாங்குயில்.

"நீ வீணுக உள்ளத்தை அலட்டிக்கொள்ளாதே. உனக்கு ஒருவித ஆபத்துமேயில்லை. பழைய நிகழ்ச்சிகளை மறந்து

விடு. நீ எனக்குச் சொந்தம்; நான் உனக்குச் சொந்தம். இதை உறுதியாக நம்பு. துன்பத்தை இன்பத்தால்தான் வெல்ல வேண்டும்,'' என்று அவளுக்கு ஆறுதல் கூறினான் மாணிக்கம்.

மேலும் அவன் சொன்னான்: "நம்மை யாருமே பிரிக்க முடியாது!''

"நிஜமாகவா? அப்படியானால் இனி நமக்குத் துன்பமே கிடையாதா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் மனைவி.

"ஆம்,'' என்று சொல்லி அவளுக்கு முத்தந் தந்தான் கணவன். அப்போது மணி பனிரெண்டு அடித்தது!

குதிரைக்கு ஏதேனும் ஆகாரம் தர வேண்டுமென்ற எண்ணத்தோடு தொழுவத்தை நோக்கிப் போவதற்கு மனைவியிடம் விடை கேட்டான் மாணிக்கம்.

"எனக்குப் பயமாக இருக்கிறது. ஆகவே சீக்கிரம் திரும்பி விடுங்கள்'' என்று விடை கொடுத்தாள் மனைவி.

மாணிக்கம் தொழுவத்திற்குச் சென்றான். செல்லும் போது கதவுகளைத் திறந்தபடியே போட்டுவிட்டுச் சென்று விட்டான். திறந்து கிடந்த கதவின் வழியாக யாரோ உள்ளே நுழைவது போல மனப் பயம் கொண்டாள் மாங்குயில்.

சங்கரன் வருவது போலவும், வந்து அணைத்துக் கொள்ளுவது போலவும், பின்பு எங்கேனும் ஓடிவிடலாம் என்று தன்னை பலவந்தப்படுத்துவது போலவும் பலப்பல வாக எண்ணிப் பயங்கொண்ட மாங்குயில், தன்னையும் அறியாமல் வாய்விட்டுக் கத்திவிட்டாள். நல்லவேளையாக அந்த நேரத்தில் ஒரு ஆசாமி வந்து சேர்ந்தான்.

அவனைப் பார்த்து மாங்குயில், "நான் இன்று இங்கு தங்கியிருக்கச் சம்மதிக்கவே மாட்டேன். சில ஆண்டுகளுக்கு முன்பு நான் இதே அறையில் வேறொருவனோடு ஒரே படுக்கையில் தங்கியிருந்திருக்கிறேன். ஆகவே என்

ளுல் இங்கு அமைதியோடு உறங்கவே முடியாது,'' என்று வந்தவன் விளங்கிக் கொள்ள முடியாதவாறு வார்த்தைகளைத் தட்டுத் தடுமாறிச் சொல்லி முடித்தாள்.

வந்தவனே வாசற்படியிலேயே நின்று கொண்டிருந்தான். அவனை உள்ளே வரும்படி அழைத்தாள் மாங்குயில். அவனும் உள்ளே நுழைந்து கொண்டு கதவைத் தாளிட்டு விட்டான்.

# 10

'அறிவகம்' என்ற மாளிகையில் இரவு முழுதும் தனிமையிலே தங்கியிருந்த சங்கரன் பொழுது புலர்ந்ததும் விடை பெற்றுச் செல்ல விரும்பினான். ஆனால் வீட்டிற்குரியவர்களோ விருந்தாளிக்குப் பயந்து வீட்டைவிட்டே வெளியேறி விட்டார்கள் என்பது அவனுக்கு எப்படித் தெரியும்? நண்பன் வருவான் வருவானென்று நாழிகைக் கணக்காகக் காத்திருந்துவிட்டு, வராத காரணத்தால் ஜெனிவீ வீயை அழைத்து, "மாணிக்கம் எங்கே போய் இருக்கிறான்?" என்று விசாரித்தான் சங்கரன். "எதிர்பாராத காரணமாக உறவுக்காரர் ஒருவர் உயிர் துறந்து விட்டமையால் இழவுகாரர் வீட்டுக்குத் தம்பதிகள் இருவரும் ஏகி இருக்கிறார்கள்," என்று பதில் தந்தாள் ஜெனி வீ வீ.

அவள் சொன்னதை அப்படியே நம்பிவிட்டான் சங்கரன். மேலும் அவன் அன்றைய தினமே அங்கிருந்து காஞ்சி நகரத்திற்குப் புறப்பட்டுப் போக விரும்பினான்.

ரயில் புறப்படுவதற்கு நேரம் அதிகமாக இருந்த காரணத்தால், யாரேனும் பழைய நண்பர்களைச் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையோடு அவன் ஊருக்குள் சுற்றித் திரிந்தான். ரயில் புறப்படுவதற்குச் சிறிது நேரத்திற்கு முன்னதாகத்தான் அவன் ஒரு வயதான கிழவனாரைச் சந்திக்க முடிந்தது. அக் கிழவனார் இறந்துபோன தன் சித்தப்பாவுக்கு நெருங்கிய நண்பராகும். அவரோடு அளவளாவிக் கொண்டிருந்தமையால் தான் எதிர்பார்த்திருந்த ரயிலைத் தவற விட்டுவிட்டான். அவனது பிரயாணத்திற்கு ஏற்றாற் போல இனி ரயில் வேறு கிடையாது. ஆகவே, அவன் ஒரு குதிரை வண்டியை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு காஞ்சி நகரம் வந்து சேர்ந்தான். அங்கு ஒவ்வொரு ஓட்டலாக அலைந்து, இடம் கிடைக்காத காரணத்தால் அவனும் 'எவரெஸ்ட்' என்ற ஓட்டலுக்கே வந்து சேர்ந்து விட்டான்!

'எவரெஸ்ட்' அவனைப் பொறுத்தவரையில் ஒரு பழக்கப்பட்ட ஓட்டலாகும். மேலும் அங்குள்ள வேலைக்காரர்கள் அத்தனை பேரையும் அவன் நன்கு அறிவான். அவர்களுக்கு அவன் ஏராளமான சன்மானங்கள் கொடுத்திருக்கிறான்.

சங்கரனைக் கண்டதும் அவனை இன்னார் என்று அடையாளம் தெரிந்து கொண்ட ஒரு வேலைக்காரன், அவனிடம் வந்து மெதுவாகச் சொன்னான்:—

"ஐயா, சில ஆண்டுகளுக்கு முன்பு நீங்கள் அழைத்து வந்தீர்களே ஒரு அழகி, அவளை இன்று வேறொருவன் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறான். அந்த ஜோடிகள் இருவரும் மேல் மாடியில் நடு அறையில் தங்கியிருக்கிறார்கள்".

வேலைக்காரன் தந்த அடையாளத்தை வைத்துக் கொண்டு அப்பெண்மணி யாராக இருக்கக்கூடும் என்று நெடுநேரம் சிந்தித்த பின்னர், அவள் மாங்குயிலாகத்தான் இருக்க முடியும் என்ற தீர்மானத்திற்கு வந்தான் சங்கரன். எத்தனையோ பெண்களோடு பழகி அனுபவப்பட்ட அவனுக்கு மாங்குயிலின் பழக்கம் ஆறாத வடுவாக மாறி, அவன் உள்ளத்தில் பதிந்துதான் இருந்தது. அதற்குக் காரணம் மாங்குயிலின் குணாதிசயங்களேயாகும்!

சங்கரன் தான் தங்கியிருந்த படுக்கையை விட்டு எழுந்திருந்து மெல்ல வெளியே வந்தான். அப்போது அங்கே நின்றுகொண்டிருந்த வேலைக்காரன், "மேல் மாடியில் அந்தப் பெண்மட்டும் தனியே இருக்கிறாள். அவளை அழைத்து வந்தவன் தோட்டத்துப் பக்கம் போயிருக்கிறான்", என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.

இச் செய்தியைக் கேட்டு மெத்தவும் மகிழ்ந்த சங்கரன், நேராக மேல்மாடிக்குள் நுழைந்தான். அவன் எதிர்பார்த்தது போலவே மாங்குயில் மட்டும் தனியாக படுக்கையில் படுத்திருந்தாள். வாசற்படியிலேயே நெடுநேரம் நின்று கொண்டு அவளின் அழகைப் பருகிக் கொண்டிருந்தான். உள்ளே வரும்படி அவள் அழைத்ததும்தான் உள்ளுக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டான்.

அவன் எப்படி அங்கு வந்தான் என்பதைக் கேட்டு அறிந்து கொள்ளக்கூட அவகாசம் இல்லாமல் அவனைப் பார்த்ததுமே, நடுநடுங்கி விட்டாள் மாங்குயில்.

"நான் நினைத்தது சரிதான். ஓட்டல் வேலைக்காரன் ஜோசப் உண்மையிலேயே ஒரு புத்திசாலி! அவன்தான் நீ இங்கிருப்பதை எனக்குத் தெரிவித்தான். உன்னோடு சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, கைகுலுக்கிப் போகவே நான் வந்துள்ளேன். நீ என்னோடு முன்போல அன்போடு பேசுவாய் அல்லவா?" என்று கேட்டுக்கொண்டு கைகளை அகலமாக விரித்துக்கொண்டு அவள் இருந்த இடத்தை அணுகினான் சங்கரன்.

"கிட்ட நெருங்காதே...கிட்ட நெருங்காதே! எட்டிப் போய்விடு," என்று கூப்பாடு போட்டாள் மாங்குயில்.

அவளின் புதிய போக்கைக் கண்டு ஆத்திரப்படாமல், அதிசயம் மட்டும் அடைந்தான் சங்கரன். மேலும், "என் பிரியத்திற்குரியவளே, என்னோடு கைகுலுக்க உனக்கு விருப்பம் இல்லையா? நீ உன்னுடைய காதலனோடு இங்கு வந்திருப்பதை நான் அறிவேன். என்னால் உனக்கும் உன் காதலனுக்கும் சச்சரவு உண்டாகி விடுமென்று பயப் படுகிறாயா? உன் காதலுக்குக் கேடு செய்கின்ற அளவுக்கு நான் கயவனல்லன். இப்போது நான் உன்னுடைய சிநேகிதன்—காதலனல்லன். உன் காதலன் திரும்பி வருவதற்குள்ளாக நான் வெளியேறி விடுகிறேன், பயப்படாதே," என்று செருக்கோடு சிரித்துக்கொண்டே பேசினான். அவளோ அவனுக்குப் பதிலே சொல்லவில்லை. ஆகவே அவன் மேலும் பேசலானான்:—

"இப்பொழுது வந்திருக்கிற ஆசாமி எப்படிப்பட்டவன்? அவனுக்கும் உனக்கும் எத்தனை நாள் பழக்கம்?"

'அவன் உன்னைப்போல ஒரு அயோக்கியன் அல்லன். அன்பும், அறிவும், அடக்கமும் நிறைந்த ஒரு உத்தமன்,' என்று அவனுக்குச் சுடச்சுடப் பதிலளிக்க எண்ணினாள் மாங்குயில். ஆனால் அவளால் வாய் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை!

தன்னைக் கண்டு பெரிதும் அவள் பயப்படுகிறாள் என்பதையும், தன்னுடைய தொடர்பை அவள் சிறிதும் விரும்பவில்லை என்பதையும் அவன் தெளிவாகத் தெரிந்துகொண்டான். அதற்காகப் பெரிதும் வருந்திய அவன் அவளைப் பார்த்து, "நீ என்னை விரும்பவில்லை என்றே எண்ணுகிறேன். வெகு நாட்களுக்கு முன்பு நாம் இருவரும் இதே அறையில் இன்பமாக ஓர் இரவைக் கழித்திருக்கிறோம் என்பதை நீ மறந்திருக்க முடியாது. முன்பு இன்பத்தின் களஞ்சியமாக விளங்கிய அதே அறை, இப்போது துன்பத்தின் கருவூலமாக மாறிவிட்டது," என்று பழமையை நினைப்பூட்டினான்.

அவனோடு பேசிக்கொண்டிருப்பதை அறவே வெறுத்த மாங்குயில், "சங்கரனே, தயவு செய்து இங்கிருந்து போய் விடு. உன்னைக் கும்பிட்டுக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னை அனுவசியமான தொல்லைகளுக்கு ஆளாக்கி விடாதே," என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டாள்.

அவளுடைய மனமாற்றத்திற்குக் காரணம் என்னவென்பதைச் சரியாக அறிந்துகொள்ள முடியாத சங்கரன், "நீ என்னோடு வாழ்ந்தகாலத்தில்கூட நான் உனக்குச் சிரமம் தந்ததில்லை. ஆகவே இப்போதும் எவ்விதச் சிரமத்தையும் தரமாட்டேன். உன்னோடு கை குலுக்கிப் போகவே ஆசைப்பட்டேன். ஆனால் நீ என் உருவத்தைப் பார்த்ததுமே கஷ்டப்படுகிறாய் என்பதைப் புரிந்துகொண்டேன். ஆகவே இங்கிருந்து நான் போய்விடுகிறேன்," என்று கலங்கிய கண்களோடு சொன்னான்.

மாங்குயில் அவன் படுகிற கஷ்டத்தை உணர்ந்து, "நான் நீ கருதுவதுபோல உடலை விற்றுத் திரிகிற வேசியில்லை. நான் ஒருவனை மணந்துகொண்டு ஒழுங்காக வாழ்ந்து வருகிறேன்," என்று தன் நிலைமையை உணர்த்தினாள்.

"அப்படியானால் அது நல்லதுதான். நீ எத்தனை நாட்களாக அவனோடு வாழ்ந்து வருகிறாய்?" என்று கேட்டான் சங்கரன்.

"ஐந்தாண்டுகளாக," என்று அவள் பதில் தந்தாள்.

"ரொம்ப ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஒருவனோடு நீ ஐந்தாண்டுகளாய் வாழ்ந்து வருகிறாய் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. அவன் பெயரென்ன? ஊரென்ன?" என்று கேட்டான். அவள் தெரியவில்லை என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள். எவ்வளவு சொல்லியும் அவன் போகாததைப் பார்த்து வருந்திய மாங்குயில், "உங்களைக் கையெடுத்துக் கும்பிடுகிறேன். தயவு செய்து இங்கிருந்து போய்விடுங்கள்," என்று கடைசி முறையாகக் கேட்டுக்கொண்டாள்.

"அம்மா தாயே, நான் இங்கிருந்து போய்விடுகிறேன். நீ என்னை மன்னித்துவிடு. நானும் உன்னை மன்னித்துவிடுகிறேன். நீ என்னை வெறுப்பதற்குக் காரணம், நீ உன் உள்ளத்தைப் பறிகொடுத்து இருக்கவேண்டும். அல்லது உன் மூளையில் ஏதாவது கோளாறு ஏற்பட்டு இருக்க வேண்டும். எது எப்படி இருந்தால்தான் எனக்கென்ன?" என்று கூறிவிட்டு, அங்கிருந்து வெளியேறிவிட்டான் சங்கரன்.

'நான் இணங்காவிட்டால் என்ன? அவனுக்கு இவ்வுலகத்தில் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள்,' என்று தனக்குள்ளாகச் சொல்லிப் பெருமூச்சு விட்டாள் மாங்குயில்.

தன்னுடைய கணவன் மாணிக்கம் என்பதையும், சங்கரனுக்குப் பயந்துதான் வீட்டைவிட்டு இரவோடு இரவாக ஓடி வந்துள்ளோம் என்பதையும் அவனிடம் தெரியப்படுத்த வேண்டுமென்று ஆசைப்பட்டாள். ஆனால், பேசுவதற்கு வாயைத் திறப்பதற்குள் அவன் வெளியேறிவிட்டான் விரைந்து.

சிறிது நேரத்திற்குள் எல்லாம் வெளியே சென்றிருந்த மாணிக்கம் அறைக்குள் வந்து சேர்ந்தான். நடுநடுங்கிக் கொண்டிருந்த மனைவியைப் பார்த்ததும், "ஏன் பயந்து நடுங்குகிறாய்?" என்று கேட்டான்.

"நாம் கோழைகள். ஐந்தாண்டுகள் அந்யோந்யமாக வாழ்ந்துவந்த நாம், சங்கரனுக்காகப் பயந்து வெளியேறி இருக்கவேகூடாது. அவனோடு எதிர்த்துப் போராடி

இருக்கவேண்டும். அப்படிச் செய்யாதது நம்முடைய போராத காலம்தான். இனி அதை நினைத்து ஆகப் போவது ஒன்றுமில்லை,'' என்று தீர்க்கதரிசிபோலப் பதிலளித்தாள் மாங்குயில். கேள்விக்கும் பதிலுக்கும் சம்பந்தமேயில்லை!

"என்ன நடந்துவிட்டது. ஏன் அப்படிப் பேசுகிறாய்?'' என்று கேட்டான் மாணிக்கம். "நான் சங்கரனைப் பார்த்து விட்டேன். அவன் நம்மைத் துரத்திக்கொண்டு இங்கேயும் வந்துவிட்டான்,'' என்று பதிலளித்தாள் மனைவி.

"என்ன செய்வது?'' என்று தெரியாமல் மேலும் கீழும் பார்த்தான் மாணிக்கம்.

"அவன் கெட்ட எண்ணத்தோடுதான் என்னைத் துரத்திக்கொண்டு வருகிறான் என்று எண்ணுகிறேன்,'' என்றாள் மனைவி.

"ஆ...இப்படியும் ஒரு அயோக்கியன் இருப்பானா?'' என்று அலுத்துக்கொண்டான் மாணிக்கம்.

"பழமையை மறந்துவிடமுடியும் என்பதை நீங்கள் நம்புகிறீர்களா? எந்த வியாதியையும் ஏதாவது ஒரு மருந்து கொடுத்து ஆற்றிவிட முடியும். ஆனால், உள்ள வியாதிக்கு எங்குமே மருந்து கிடைப்பது அரிது,'' என்று பழங்கால நிகழ்ச்சிகள் குறித்துத் தான் படும் கஷ்டத்தை வெளிப்படுத்தினாள் மாங்குயில்.

"வெற்றியூர் நகரத்தை விட்டு விட்டுச் சென்னை நகரத்திலாவது சந்தோஷமாய் வாழலாம் என்று நான் எண்ணியது பைத்தியக்காரத் தனந்தானா? இனி நமக்கு விமோசனமே கிடையாதா? துன்பக் கடலிலிருந்து கரை சேர நமக்கு மார்க்கமேயில்லையா?'' என்று ஆற்றாமையைப் புலப்படுத்தினான் மாணிக்கம்.

"எல்லாம் ஊழ் வினைப் பயன்! நாம் அனுபவித்துத் தான் தீர்க்க வேண்டும். நரகத்தில் கட்டியிருந்த நாய்களை யாரோ அவிழ்த்து விட்டுவிட்டார்கள். அவை நம்மைக் கடித்துத் தின்னாமல் சும்மா விடா,'' என்று திரும்பவும் வேதாந்தம் பேசினாள் மனைவி.

மனைவியின் பேச்சு, கணவனின் கஷ்டத்தை அதிகப் படுத்தி விட்டது. இருப்பினும் துன்பத்தைக் கடந்து, இன்பத்தை எப்படியாவது அடைந்துவிட வேண்டும் என்று ரொம்பவும் பிரயாசைப்பட்டான் கணவன். தன் மனைவியை அழைத்து, "அன்பே, நீ வீணாக உடம்பை அலட்டிக் கொள்ளாதே. இன்று இரவு நன்கு தூங்கி எழுந்திருப்போம். அடுத்து என்ன செய்ய வேண்டுமென் பதை விடிந்ததும் யோசித்துக் கொள்ளுவோம். இப்போது வா படுக்கைக்குப் போகலாம்," என்று பணிவோடு அழைத்தான்.

"நான் உங்களோடு படுக்கைக்கு வரவே முடியாது. அந்தப் படுக்கை எனக்கு அனலாக மாறிவிட்டது. என்னால் இங்கு ஒரு நிமிஷங்கூடத் தங்கியிருக்க முடியாது," என்று படபடப்போடு கூறினாள் மனைவி.

கணவன் கற்சிலையாக நின்றான்!

"நான் இந்த அறையில் இதே படுக்கையில் சங்கர னோடு வாழ்ந்திருக்கிறேன் என்பதை உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லையா?" என்று அவள் மேலும் தன் கஷ்டத்தைத் தெரியப்படுத்தினாள்.

"என்னைக் கொன்றுவிடாதே, உன் ஒவ்வொரு வார்த்தையும் என் உயிரை உறிஞ்சிக் குடிக்கின்றது," என்றான் மாணிக்கம்.

"நான் உங்களைத் தொல்லைப்படுத்த வேண்டும் என்று விரும்பவில்லை. என் கஷ்டத்தை அடக்கிக் கொள்ள முடி யாததால் ஏதேதோ பேசினேனே தவிர, உண்மையிலே உங்களைத் துன்புறுத்த வேண்டுமென்ற எண்ணம் எனக் குத் துளிகூடக் கிடையாது," என்று தன்னுடைய சிர மத்தை அவள் புலப்படுத்தினாள்.

"படுகின்ற சிரமத்திற்கு ஒரு எல்லை இருக்குமென்றே எண்ணியிருந்தேன். ஆனால், சிரமம் வளருகிறதே தவிரக் குறைவதாகயில்லை. நிலைமை இப்படியே நீடிக்குமானால் நான் பைத்தியக்காரனாக மாறவேண்டியதுதான்," என் றான் மாணிக்கம்.

“நீங்கள் இன்னும் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஆத்திரந் தீர அடித்து விடுங்கள் ; அல்லது கொன்று விடுங்கள்,” என்று அவள் அழுது கொண்டே சொன்னாள். அவள் மேலும், “நான் உங்களை மனதார நேசிக்கிறேன் ; இனியும் நேசிப்பேன். பாழாய்ப் போன சங்கரன் நம் வாழ்விலே குறுக்கிட்டு நம்மைக் கஷ்டத்திற்குள்ளாக்கி விட்டான். இதை நீங்கள் உணர்ந்து கொண்டால் போதும். நீங்கள் என்னை ஏசலாம். அந்த ஏச்சுக்குரியவள்தான் நான். ஆனால், நான் இழிகுணம் படைத்தவள் அல்லள். இதை நீங்கள் உண்மையோடு நம்ப வேண்டும்,” என்று உருக்கமாகப் பேசினாள்.

“வாழ்வதைவிடச் சாவிலேதான் தன்னால் அமைதியைக் காணமுடியும்,” என்ற தன்னுடைய கருத்தையும் அவனிடம் தெரிவித்து விட்டாள் மாங்குயில்.

“சாவா? உனக்கா? என் பொருட்டா?” என்றெல்லாம் கேட்டுவிட்டு, “உன்னால் விடியும் வரையிலும் இந்த அறையில் தங்கி இருக்க முடியாதா?” என்று வினவினான் மாணிக்கம்.

“விடியும் வரையிலா? இன்னும் ஒரு விநாடிகூட என்னால் தங்கி இருக்க முடியாது. நாம் இப்போதே இங்கிருந்து போய்விட வேண்டும்,” என்றாள் மனைவி.

“அப்படியானால் இந்த இரவில் நம்மால் சென்னைக்குப் போக முடியாது. நம் வீட்டுக்கே திரும்பிப் போக வேண்டியதுதான்,” என்றான் மாணிக்கம். அதற்குத் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள் மாங்குயில் முழுமனதோடு.

கோச் வண்டி தம்பதிகளை ஏற்றிக் கொண்டு வெற்றியூர் நகரை நோக்கி விரைந்தது.

# 11

'அறிவகம்' என்ற மாளிகைக்கு மாணிக்கமும் மாங்குயிலும் வந்து சேர்ந்தார்கள். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து முகங் கொடுத்துப் பேசவேயில்லை. முன்பின் அறியாத இருவர் எப்படி வாழ்ந்து வருவார்களோ அதே மாதிரி அவர்கள் பழகினர். நாட்கள் நடந்தன. ஒரு நாள் எதிர்பாராத விதமாக அவர்கள் சந்தித்துப் பேச வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. இருவரும் சிறிது நேரம் சிரித்தபடி பேசிக் கொண்டிருந்துவிட்டுப் பிரிந்து விட்டனர்.

கலியாண வீடுமாதிரி கலகலப்போடு இருந்த மாளிகை சங்கரனின் வருகைக்குப் பிறகு இழவு வீடுமாதிரி இசை இழந்து விளங்கியது.

மாங்குயில் ஏற்கனவே மனத் தளர்ச்சி அடைந்திருந்தாள். போதாக்குறைக்கு ஜெனி வீ வீ வேறு அவளைப் படாதபாடுபடுத்தி வந்தாள். ஒருமுறை அவள் ஜெனி வீ வீயைப் பார்த்து, "நீ இந்த வீட்டின் வேலைக்காரி. நான் எஜமானி. இதை அறிந்து கொள்ளாமல் நீ ஏதாவது பேசினால் உன் நாக்கை அறுத்து விடுவேன். மரியாதையோடு பழகக் கற்றுக்கொள்," என்று கோபித்துக் கொண்டாள். மேலும் தன்னைத் தன் வேலைக்காரியிடமிருந்து காப்பாற்றத் தன் கணவன் எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ள முன்வரவில்லை என்பதை எண்ணி ஆத்திரம் அடைந்த அவள், "மனைவியாகிய என்னைக் கௌரவமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற அக்கரை உங்களுக்கு இல்லையா?" என்று ஆத்திரத்தோடு அவனைப் பார்த்துக் கேட்டாள்.

இதையறிந்த ஜெனி வீ வீ குறுக்கிட்டு, "நீ ஏன் வீணாக மாணிக்கத்தை வைகின்றாய்? நான் அனாவசியமாக யாருட

னும் சண்டைக்குப் போகமாட்டேன் என்பது அவனுக்குத் தெரியும். நான் ஆண்டவனின் கருத்துக்களைப் பிரதி பலிக்கிறேனே தவிர, என் சொந்த அபிப்ராயங்களை வெளிப்படுத்தவில்லை,'' என்று மாணிக்கத்திற்காகப் பரிந்து பேசினுள்.

ஆத்திரமடைந்த மாங்குயில், "கிழட்டு முண்டமே, தண்டச் சோறு தின்று தின்று உன் நாக்குத் தடித்துவிட்டது. இனி ஒரு வார்த்தைகூட நீ பேசக்கூடாது. மரியாதையாக இங்கிருந்து ஓடிவிடு,'' என்று பெருங் கூப்பாடு போட்டாள்.

"நான் உன்னுடைய வேலைக்காரி இல்லை. ஆண்டவனின் வேலையாளாகும். நீதியை நிலைநாட்ட வேண்டியது என்னுடைய வேலை. இது என் வீடு. ஆகவே நான் இங்கிருந்து அகலவே மாட்டேன்,'' என்று உரிமையோடு சொன்ஞள் ஜெனி வீ வீ.

செய்வதறியாத மாங்குயில் மேலும், எதிர்த்துப்பேசத் தைரியம் இழந்தவளாய் அழுதுகொண்டே அங்கிருந்து போய்விட்டாள். இப்படி எத்தனையோ தடவைகள் நடந்திருக்கின்றன. ஒவ்வொரு தடவையும் ஜெனி வீ வீக்குத்தான் வெற்றி. மாங்குயில் தோல்வியுற வேண்டியவளே!

காஞ்சி நகரம் சென்று ஓட்டலிலிருந்து திரும்பி ஏறத்தாழ ஒரு மாத காலம் ஆகிவிட்டது. இருந்தும் அவர்கள் உள்ளத்தில் அமைதிக்கு இடமேயில்லை!

இந்தச் சமயத்தில் தேன்மொழியைப் பாலூட்டி வளர்த்துவந்த தாதி, பெரும் வியாதிக்கு ஆளாகிவிட்டமையால், தேன்மொழியைப் பெற்றவர்களிடம் கொண்டுவந்து சேர்ப்பித்து விட்டாள். தேன்மொழியின் வருகையை மாணிக்கம் அறவே வெறுத்தான். அவளைப் பார்ப்பதே பாவம் என்று கூட எண்ணினுன். ஆகவே பெற்றெடுத்த பிள்ளையோடு அவன் பேசவுமில்லை; அன்போடு விளையாடவுமில்லை! அனுதைக் குழந்தையை வளர்ப்பதைப்போலவே பெற்றெடுத்த பிள்ளையிடம் நடந்துகொண்டான்!

தேன்மொழியும் முன்போல ஆடிப் பாடித் திரிகின்ற பழக்கத்தை மறந்துவிட்டாள். சிந்தனையில் ஆழ்ந்துவிட்ட

பெரிய மனுஷியைப்போல அச் சிறு பெண் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு எதை எதையோ நினைத்துக்கொண்டிருப்பாள். தனக்கெட்டிய சிற்றறிவில் இருந்து தன் தந்தை தன்னை விரும்பவில்லை என்று தெளிவாகத் தெரிந்துகொண்டாள். ஆனால், அதற்குரிய காரணத்தை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. எப்படி முடியும்?

தேன்மொழியைக் காணும்போதெல்லாம் மாணிக்கம் மனம் புழுங்குகிறான் என்பதை அறிந்த மாங்குயில், அவளை எப்போதும் மறைமுகமாகவே வாழ்ந்து வரும்படியும், வீட்டிற்குள் நுழையும்போது சந்தடி செய்யாமலேயே நுழையும்படியும், மாணிக்கம் இருக்குமிடத்திற்குள் நுழையாதபடியும் கண்காணித்து வந்தாள்.

அதிகப்படியான கட்டுப்பாடுகளுக்கிடையே தந்தையினின்றும் தனியாக வளர்த்து வரப்பட்ட குழந்தை, தந்தையைக் காணத் தவியாகத் தவித்தது. ஆனால் தந்தையோ குழந்தையைக் காணமலேயே இருக்க வேண்டுமென்று தவியாய்த் தவித்தான்!

சில சமயங்களில் தந்தையின் புகைப்படத்தைப் பார்த்துக்கொண்டே, "ஏன் அப்பா, என்னோடு பேசமாட்டாயா? நான் உனக்கு என்ன கேடு செய்தேன்?" என்று கேட்டுக் கேட்டு கண்ணீர் வடிப்பாள் தேன்மொழி. புகைப்படமா, பேசும்? புகைப்படம் பேசினாலும் பேசும்; ஆனால் மாணிக்கம் மட்டும் பேசவேமாட்டான் என்பது திண்ணம்!

தேன்மொழியைப் பார்க்கும்போது கண்களில் அதிகமான துன்பத்தையும், நினைக்கும்போது நெஞ்சத்தில் அதிகமான துன்பத்தையும் கொண்டு வருந்திக்கொண்டிருந்தான் மாணிக்கம். அவள் இறந்து ஒழிந்தால்தான் தனக்கு நிம்மதி என்பது அவன் நினைப்பு. ஒருநாள் மாலை அடுப்பறையில் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஆக்கிக்கொண்டிருந்தாள் மாங்குயில். அவள் அருகே வந்து நின்றாள் தேன்மொழி. தேன்மொழியின் உடலோ நெருப்பாகக் கொதித்துக்கொண்டிருந்தது. தாங்க முடியாத காய்ச்சலைத் தாங்கிக்கொண்டிருந்தாள் அச் சிறுமி.

தேன்மொழியின் வியாதியை எடுத்துச் சொல்லி, அவளைத் தன்னோடு தன் அருகே படுக்கையறையில் வைத்துக் கொள்ள அனுமதி கேட்டாள் கணவனிடம் மனைவி. வேண்டா வெறுப்போடு அதற்கு இசைவு தந்தான் மாணிக்கம். தன்னோடு தன் படுக்கையறையில் தேன்மொழியும் இருக்கிருள் என்ற நினைப்பு அவனைப் படாதபாடு படுத்தி விட்டது!

அன்று இரவு முழுதும் அவன் தூங்கவேயில்லை. 'சனியன் செத்துத் தொலையாதா?' என்று பல தடவை தனக்குள்ளாகவே முணுமுணுத்தான்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. பிரபல டாக்டர் ஒருவர் அழைத்து வரப்பட்டார். அவர், குழந்தையைப் பீடித்திருப்பது ஆபத்தான வியாதியென்று தெரியப்படுத்தி விட்டார். அதைக் கேட்டதும் மாங்குயில் கொண்ட துன்பத்திற்கும் மாணிக்கம் கொண்ட இன்பத்திற்கும் அளவே கிடையாது! கண்களை இமை காப்பதுபோல மகளைத் தாய் காத்துவந்தாள். மகளைப் பற்றிய அக்கரையே இல்லாமல் தூர விலகி நின்ருன் தந்தை. ஏறத்தாழ ஒருமாத காலம் இம்மாதிரியாகக் கழிந்தது. மருந்தின் நெடியை தன்னல் பொறுத்துக்கொள்ள இயலவில்லை என்று கூறிப் படுக்கையறையை வேறு ஒரு இடத்திற்கு மாற்றிக்கொண்டான் மாணிக்கம். படுக்கையறையின் மாற்றத்திற்குக் காரணம் மருந்தின் நெடி அல்ல; ஆனல் மகளின் தோற்றமேயாகும்!

மகளிடத்து மகத்தான அன்போடு பழகவேண்டிய மாணிக்கம், ஒரு கொலைகாரனைப்போல நடந்துகொள்ளலானுன். மகளின் சாவுக்காக அவன் மனதாரத் தெய்வங்களைப் பிரார்த்தித்துக் கொண்டான். மகளைக் காப்பாற்றுவதற்காக மாங்குயில் பட்ட சிரமங்களையெல்லாம் சரிவரப் புரிந்துகொள்ளாமல், மாஜிக் காதலனுக்குக் காதலி செய்யும் ஜாலங்களாகக்கருதி, மனைவியிடத்து மாருத துவேஷம் காட்டினுன் மணளன்.

ஜன்னியால் பீடிக்கப்பட்ட குழந்தை சுவாதீனமிழந்து, "அப்பா......அப்பா......," என்று அலறிக்கொண்டே இருந்தது.

"என்னை ஏன் அந்தப் பீடை அழைக்கிறது?" என்று அலுத்துக்கொண்டான் மாணிக்கம்.

இத்தகைய கோலத்தைக் காண நேரிட்டமைக்காகக் கண்ணீர் வடித்துக்கொண்டே இருந்தாள் மனைவி. குழந்தை, "அப்பா......அப்பா," என்று அலறித் துடிக்கும்போது கணவனைக் கொண்டுவந்து குழந்தையின் முன்னர் நிறுத்துவாள். ஆனால் அவனோ அவ்விடத்தை விட்டு எப்படித் தப்பிவிட முடியும் என்ற சிந்தனையிலேயே நின்றுகொண்டிருப்பான்.

"தயவுசெய்து இங்கிருந்து போய்விடாதீர்கள். உங்களை நினைத்து நினைத்துத்தான் நம் குழந்தை இக் கதிக்கு வந்து சேர்ந்தது. நீங்கள் இங்கிருந்து போய்விட முயன்றால், குழந்தை நம்மைவிட்டே போய்விடும்," என்று கவலையோடு தன் கருத்தைத் தெரிவித்தாள்.

நாளுக்கு நாள் குழந்தையின் வியாதி ஆபத்தான கட்டத்தை நெருங்கிக்கொண்டே இருந்தது. அதைத்தான் மாணிக்கமும் விரும்பினான்.

நோயின் காரணமாகக் குழந்தையின் முகம் மாறி விட்டது. சங்கரனின் தோற்றத்தைப் பிரதிபலித்த குழந்தை முற்றிலும் மாறுபட்ட தோற்றத்தோடு விளங்கியது. குழந்தையின் முகத்தில் சங்கரனைக் காண முடியவில்லை என்ற எண்ணம் மாணிக்கத்திற்குத் தேனாக இனித்தது. ஒருமுறை மருத்துவரை அழைத்து, 'என் மகள் இதே முகத்தோடு விளங்குவாளா? அல்லது பழைய முகத்தை அடைந்து விடுவாளா?' என்றுகூடக் கேட்டான். "இதே முகத்தோடுதான் விளங்கக்கூடும்," என்று பட்டும் படாததுமாகப் பதில் சொல்லிவிட்டுப் போய்விட்டார் மருத்துவர்!

"நீங்கள் இவ்வளவு கொடூரமானவர்கள் என்பதை நான் அறியவேயில்லை. ஒரு சிறு குழந்தையிடம் இவ்வளவு குரோதம் பாராட்டுவீர்கள் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை," என்று மாணிக்கத்தைக் குறை கூறினாள் மாங்குயில்.

கிட்டத்தட்ட இரண்டு வாரங்கள் படுத்த படுக்கை யாகக் கிடந்த குழந்தை, பையப்பைய குணநலமடைந்து விட்டாள். குழந்தை திரும்பவும் சங்கரனின் தோற்றத் தோடு விளங்கலானுள். அதற்கு யார் என்ன செய்யமுடி யும்? குழந்தையிடம் திரும்பவும் குரோதம் பாராட்டத் துவங்கிவிட்டான் மாணிக்கம். போதாக்குறைக்கு மாங்குயி லும் சங்கரனின் உருவத்தைக் கொண்டு விளங்குவதாக மனப்பிரேமை கொள்ளலானுன். தேன்மொழியிடம் காட் டிய வெறுப்பை மனைவியிடமும் காட்டலானுன். மொத்தத் தில் மகளையும், மனைவியையும் அனுக்குப் பிடிக்கவேயில்லை!

ஒரு நாள் மாங்குயில் பாதி ராத்திரியில் படுக்கையை விட்டு எழுந்து வாய் பிதற்றத் துவங்கிவிட்டாள். அவள் என்ன சொன்னுள் என்பதை யாருமே புரிந்துகொள்ள இயலவில்லை. இருப்பினும் 'சங்கரன்' என்ற வார்த்தை மட்டும் அவளது பேச்சிலிருந்து தெளிவாகக் கேட்டது. இதை எண்ணி எண்ணி ஏகப்பட்ட தடவைகள் ஏக்கங் கொண்டான் மாணிக்கம். இப்படி எத்தனையோ ராத்திரி கள் நடந்திருக்கின்றன !

ஒருமுறை அவள், 'சங்கரன்......சங்கரன்......' என்று கத்தியபோது, அவளைத் தன் இருகைகளாலும் இறுகப் பிடித்துக்கொண்டு கோபம் பொங்க, "படுக்கையை விட்டு எழுந்திரு," என்று பல தடவைகள் கத்தினுன்.

நடுநடுங்கிக்கொண்டே எழுந்த மனைவி, "என்ன விசேஷம்? என்னை எதற்காக எழுப்புகிறீர்கள்?" என்று கேட்டாள். அவன் பதில் சொல்லுவதற்குள்ளாகவே தான் செய்த தவறை உணர்ந்து விம்மிவிம்மி அழத் துவங்கி விட்டாள். பின்பு இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசிக் கொள்ளவேயில்லை. அவளை அடி அடி என்று அடித்து நொறுக்கிவிட வேண்டுமென்று விரும்பினுன். ஆனுல் அதற்குரிய துணிவு அவன் உள்ளத்தில் சிறிதுகூடக் கிடையாது. அவன் அடித்துத் துன்புறுத்தி இருந்தால் கூட அவள் அவ்வளவு அவதிப் பட்டிருக்கமாட்டாள். ஆனுல் அவனது மௌனம் அவளைப் படாதபாடு படுத்தி விட்டது!

அடிக்கடி நள்ளிரவில் ஏற்பட்டுக்கொண்டிருந்த ரகளைகளைப் பொறுத்துக்கொள்ளும் சக்தியற்ற நிலையில், இருவரும் மனம் ஒப்பி ஒரு முடிவிற்கு வந்தனர். அம் முடிவின் பிரகாரம் அவர்கள் ஆளுக்கொரு படுக்கையறையை ஏற்படுத்திக்கொண்டார்கள்.

மாணிக்கமும் மாங்குயிலும் துன்பம் நிறைந்த கடலில் மாட்டிக்கொண்டார்களே தவிர, அதனுள் மூழ்கிவிட வேண்டுமென்று நினைக்கவேயில்லை ; மாருக, கடல் கடந்து கரை சேர்ந்துவிடவே ஆசைப்பட்டார்கள் ! சங்கரனின் நினைப்பை அறவே மறந்துவிடவேண்டும் என்பதில்தான் அவர்கள் அதிக அக்கரை செலுத்தினர்கள். நாட்கள் பலவாகியும் அவர்களால் கரைகாண முடியவில்லை !

வெளியூரிலிருந்து ஏதாவது ஒரு வண்டி வந்தாலும், அல்லது அகால நேரத்தில் யாராவது தன் வீட்டுக் கதவைத் தட்டினலும் சங்கரன்தான் வந்துவிட்டான் என்று அவர்கள் பெரிதும் பயந்து நடுங்கினர்கள்.

அதிகப்படியான நடுக்கம் அவர்களுக்கு ஒருவிதத் துணிச்சலையே தந்தது. அழையா விருந்தினனுக சங்கரன் நுழைந்தால் அவனை வீட்டை விட்டே விரட்டிவிடுவதென்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டனர்.

திடீரென்று ஒரு நாள் சங்கரனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் அவன் இன்னும் ஒரு மாத காலத்திற்குள் திரும்பவும் மாணிக்கத்தைப் பார்க்க வருவதாக எழுதியிருந்தான். மேலும் அக் கடிதத்தில் காஞ்சி நகரத்து ஓட்டலில் நடந்த சுவையான சம்பவத்தையும் குறிப்பிட்டிருந்தான். மாணிக்கத்தின் தற்போதைய மனைவி, தன்னுடைய மாஜிக் காதலி என்பதை அவன் அறிந்திருந்தால் அவன் அப்படி எழுதியிருந்திருக்கவே மாட்டான் !

மாணிக்கம் அக் கடிதத்தை மாங்குயிலிடம் தந்தான். அவள் அக் கடிதத்தைப் படித்துவிட்டுக் கண்ணீர் வடித்தாள். பின்பு அதனை மாணிக்கத்திடமே திருப்பிக் கொடுத்துவிட்டாள்.

நல்ல வேளையாக உடனே வருவதாகக் குறிப்பிடாமல், ஒரு மாத காலத்தில் வருவதாக எழுதியது ஒருவிதத்தில் உவகையையே தந்தது. வியாதியில் இருந்து தெளிவடைந்த தேன்மொழி குணம் அடைந்தவுடன், அவர்கள் வெற்றியூர் நகரை விட்டு வெளியேறிச் சங்கரனை வீட்டிற்குள் நுழையாதபடி தடுத்து நிறுத்திவிடலாம் என்று திட்டமிட்டுக்கொண்டனர்!

## 12

சென்னையிலிருந்த 'அருளகம்' என்ற மாளிகை கிட்டத் தட்ட ஐந்தாண்டுகள் குடிவாசமற்ற பாழ் வீடாகவே இருந்து வந்தது. அவ் வீட்டை வாடகைக்கு விட்டிருந்தால்கூட சிறிது பணம் கிடைத்திருக்கும். அவ் வீட்டை வாடகைக்கு விட்டுப் பணம் சேர்க்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாததாலும், என்றேனும் சென்னைக்குச் சென்றால் தனக்குத் தங்குவதற்கு வசதியான வீடு வேண்டுமென்ற எண்ணத்தாலும் அவன் அவ் வீட்டைப் பூட்டியே வைத்திருந்தான். தன்னுடைய வேலையாள் ஒருவனை அனுப்பி இடை இடையே மராமத்து செய்துவந்தான்.

வெகு நாட்களுக்கப்புறம் மாங்குயிலும் மாணிக்கமும் அவ் வீட்டில் தங்குவதற்காக குடியேறினார்கள். அவ் வீடு அவர்களுக்கு மன நிறைவைத் தந்தது. அவ் வீட்டில் மாட்டியிருந்த பல படங்களுள் சங்கரனின் படமும் இருந்தது. அதனைப் பார்த்ததும் பதறி எழுந்த மாணிக்கம், அப்படத்தைக் கழட்டி எடுத்து கோபத்தோடு தூக்கி எறிந்தான். தரையில் விழுந்த படம் சின்னாபின்னமாகச் சிதறி அழிந்தது!

கிராமத்தில் காணமுடியாத சில காட்சிகளையும், அனுபவிக்கமுடியாத சில சுகங்களையும் பட்டணத்தில் அனுபவிக்க முடியுமென்ற நம்பிக்கையில்தான் அவர்கள் சென்னையில் குடியேறினார்கள். படக் காட்சிச் சாலைகளுக்கும், மிருகக்காட்சிச் சாலைகளுக்கும், நாட்டிய நாடக அரங்குகளுக்கும், இயல் இசை மன்றங்களுக்கும் சென்று மனத்துயரை மாற்றிக்கொள்ள வேண்டுமென்பதுதான் அவர்கள் திட்டம்.

பகலெல்லாம் பட்டணத்தைச் சுற்றித் திரிந்துவிட்டு, இரவு நேரத்தில்தான் இருவரும் வீடு திரும்புவது வழக்கம்.

இத்தகைய வாழ்வு அவர்களுக்கு அதிகப்படியான இன்பத்தைத் தராவிட்டாலும், துன்பச் சுமையைக் குறைப்பதற்கு ஓரளவு உதவியாகவே இருந்து வந்தது. மாங்குயில் தன் தோழியர்களுடன் ஆடிப்பாடி உல்லாசமுடன் திரியலானாள். மாணிக்கமும் தன் தோழர்களுடன் ஆடிப்பாடித் திரியலானான். பொதுவாகத் துன்பக்கடலில் இருந்து இன்பக் கரையை எட்டிப் பிடிக்கலானார்கள் தம்பதிகள் இருவரும்!

சென்னையில் குடியேறியதும் தனித் தனியாக படுக்கையறைகளை ஏற்படுத்திக்கொண்டு வேற்று மனிதர்களைப் போல பழகிய தம்பதிகள், திரும்பவும் நெருங்கிப் பழகலானார்கள். 'சுவை கண்ட பூனை ருசி மறவாது' என்பதுபோல காதல் தேனைத் தின்று பழகியவர்கள் சிறிதுகாலம் சும்மாவே இருந்துவிட்டுத் திரும்பவும் காதற் சுவையைப் பருக ஆசைப்பட்டார்கள். நாடகத்திலும் சினிமாவிலும் கணவனும் மனைவியும் கட்டித் தழுவுகிற காட்சிகளைக் கண்ணாரக் கண்ட பின்பு அவர்களால் எப்படிப் பிரிந்து வாழமுடியும்?

படுக்கையறை ஒன்றாகிவிட்டது. பிரேமபாசம் தலை விரித்தாடியது, குரோத எண்ணம் புறங்காட்டி ஓடி விட்டது. வாழ்வு இன்பமயம் ஆயிற்று. பழமை இருந்த இடம் தெரியாமல் மாண்டது!

சென்னையிலிருந்து பண்பட்டு அவர்கள் திரும்பவும் வெற்றியூர் நகரத்துக்குத் திரும்பிவிட ஆசைப்பட்டனர். அவர்களின் ஆசைக்கு அனுசரணையாக ஒரு அவசரச் செய்தியும் அவர்களுக்காகக் காத்துக் கிடந்தது. அதாவது வெற்றியூர் நகரில் விடப்பட்டிருந்த தேன்மொழி திரும்பவும் பொல்லாத வியாதிக்கு ஆளாகி அவஸ்தைப்படலானாள். இச்செய்தியைக் கேட்டதும் அன்று இரவு முழுதும் மாங்குயில் உறங்கவே யில்லை.

பொழுது புலர்ந்ததும் எப்படியாவது காஞ்சிக்குச் செல்லும் முதல் ரயிலில் ஏறிக் காலை எட்டு மணிக்குள்ளாக வெற்றியூர் நகரை அடைந்துவிட வேண்டும் என்று இருவரும் துடிதுடித்தனர்.

பொழுது புலர்ந்தது. போட்டிருந்த திட்டப்படி இருவரும் ரயில் நிலையத்தை வந்தடைந்தனர்.

ரயில் புறப்படச் சிறிது நேரம் இருக்கும்போது, தான் ஒரு முக்கியமான ஒரு சாமானை மாளிகையில் வைத்துவிட்டு மறந்தபடியே வந்துவிட்டதாகவும், அதை எடுத்துக் கொண்டுவர உத்திரவு வேண்டும் என்றும் கேட்டாள் மாங்குயில். மனைவியின் விருப்பத்திற்கு அந்த நேரத்தில் தடை சொல்ல விரும்பாத மாணிக்கம், அவளை அவள் இஷ்டப்படியே நடந்துகொள்வதற்கு அனுமதியளித்து விட்டு, மாலையில் புறப்படும் ரயிலில் கண்டிப்பாக ஊர் வந்து சேர்ந்து விட வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, தான் மட்டும் தனியே ஊருக்குப் புறப்படலானான். மனைவியை விட்டுவிட்டு தனியாகப் பிரயாணம் செய்வது அவனுக்குத் தணியாத வேதனையைத் தந்தது!

'அன்பகம்' என்ற மாளிகையில் சங்கரன் தங்கியிருக்கிறான் என்ற செய்தியை மாங்குயில் அறிந்திருந்தாள். அவனைச் சந்திக்க வேண்டுமென்ற ஆசையினால்தான் அவள் கணவனை மட்டும் தனியாகப் பிரயாணம் செய்யும்படி செய்து விட்டாள். 'அருளகம்' என்ற தன்னுடைய மாளிகைக்குப் போகாமல் 'அன்பகம்' என்ற மாளிகைக்கு ஆவலோடும் அவசரத்தோடும் ஓடினாள் மாங்குயில். அவள் உள்ளத்தில் ஒருவித உவகை பொங்கி வழிந்து கொண்டிருந்தது. பல ஆண்டுகளுக்கப்புறம் அவள் இப்போது தான் சென்னை நகரில் ஆண் துணையின்றித் தன்னந்தனியாக நடந்து போகும்படியான நிலைமை ஏற்பட்டது. பல இடங்களைச் சுற்றி அலைந்து விட்டு, வெகு சிரமங்களுக்குப் பிறகு அவள் சங்கரனின் வீட்டை அறிந்து கொண்டாள். சங்கரனின் வீட்டில் அவள் அடியெடுத்து வைக்கும்போது அவளுக்கு மாணிக்கத்தின் நினைவு வந்து விட்டது. தன்னுடைய இந்தச் செய்கையை அறிந்தால் மாணிக்கம் தன்னை ஏற்றுக் கொள்ள மாட்டான் என்று எண்ணிப் பயப்படலானாள். ஆனால் சங்கரனின் முகம் அவள் முன் தோன்றவே மாணிக்கத்தைப் பற்றிய பயம் அவளைவிட்டு விலகி வெகுதூரம் ஓடிவிட்டது.

சங்கரன் தங்கியிருந்த வீட்டின் அருகே சென்று கதவை உரத்துத் தட்டினுள். சங்கரன் ஓடிவந்து கதவைத் திறந்தான். மாங்குயிலைக் கண்டதும் அவன் மனம் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைந்தது. "அன்பிற்குரியவளே, உன்னை நான் இவ்வளவு விரைவில் எதிர்பார்க்கவில்லை. இருப்பினும் வீடு தேடிவந்த உன்னை, நீ என்னைச் செய்ததைப் போல விரட்டி அடிக்கமாட்டேன். உன்னை மனமார வரவேற்கிறேன். வா, உள்ளே!" என்று மகிழ்ச்சியோடு அழைத்துச் சென்ருன். "அன்பே, நான் ஆடைகளை அணிந்து கொண்டு திரும்பி வரும் வரையிலே பொறுத்துக் கொள்," என்று கூறிவிட்டு, திரும்பி வந்தான். மாங்குயில் மகிழ்ச்சியோடு அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். தன்னைச் சிங்காரித்துக் கொண்டு திரும்பிய சங்கரன், "அன்பிற்குரியவளே, நாம் திரும்பவும் சிநேகிதர்களாகி விட்டோமல்லவா?" என்று கேட்டான். மேலும் அவளைப் பார்த்து, "நீ காஞ்சி நகர ஓட்டலில் என்னிடம் நடந்து கொண்ட முரட்டுத்தனத்திற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று ஆசையோடுதானே இப்போது வந்திருக்கிருய்?" என்று கேட்டான்.

அவள் அவன் கேட்ட கேள்விகளுக்குப் பதில் கூறவேயில்லை. பதில் கூற விரும்பவுமில்லை! ஆனால் அவன் முகத்தை ஆவலோடு ஏற இறங்கப் பார்த்துக் கொண்டே இருந்தாள். அவன் பார்ப்பதற்கு முன்னைவிட அதிகப்படியான அழகோடு விளங்கினுன். அவள் பேசாமல் இருந்ததைப் பார்த்து பெரிதும் மகிழ்ச்சி கொண்ட சங்கரன், தன் இரு கைகளாலும் அவளை அணைத்துக் கொண்டான். "நம் அன்புக்கு அறிகுறியாக இங்கே முத்தமிடு," என்று முகத்தை நீட்டினுன். அன்பின் சின்னத்தை அவளும் அவன் முகத்திலே பதித்தாள்.

இருவரும் இன்பக் கடலுள் மிதந்தனர். அவளை அப்படியே பொம்மையைத் தூக்குவதைப் போலத் தூக்கிக் கொண்டு போய் படுக்கை யறையில் படுக்க வைத்தான்.

சொல்லரிதாய் இனிதினிதாய் நாழிகைகள் பறந்தன. ஒரே வரியில் சொன்னுல் அவர்களுக்கு அன்றைய நாள் இனித்துக் கிடந்தது! சிறிது நேரம் சென்றதும் மாங்குயில்

வெளியேற விரும்புபவள் போலத் தென்பட்டாள். "ஏதேனும் அவசர ஜோலியோ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சங்கரன்.

"ஆம் ; எனக்காக ஒருவர் காத்துக் கொண்டிருப்பார்." என்று அவள் பதில் தந்தாள்.

அப் பதிலைக் கேட்டதும் உரத்துச் சிரித்து விட்டான். மேலும் சிரித்துக் கொண்டே சொன்னான்:—

"அடி அழகு தேவதையே, நீ இவ்வளவு அவசரப் படலாமா? வா கன்னிமேரா என்ற ஓட்டலுக்குப் போய்ச் சிறிது உணவு அருந்திவிட்டுத் திரும்பலாம்!"

"முடியாது ; நான் இப்பவே போய் ஆக வேண்டும்." என்று கூறிவிட்டு அங்கிருந்து அவசர அவசரமாக அவள் வெளியேறி விட்டாள். நேராக ரயில் நிலையத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தாள்.

'நான் எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டேன். சங்கரனிடம் என்னுடைய தூய்மையை எடுத்துக் காட்ட விரும்பினேன். ஆனால் அவனோ என் தூய்மையை அறவே அழித்து விட்டான். கட்டிய கணவனுக்கு இதுதான் மன தார நான் செய்த முதல் துரோகம்,' என்று தனக்குள் ளாக எதை எதையோ நினைத்துக் கொண்டேதான் வழி நெடுக நடந்து வந்தாள்.

ஜெனி வீ வீ சொன்னது போல ஆண்டவன் தன்னை மன்னிக்கவே மாட்டான் என்பதை அவள் இப்போது ஒப்புக் கொள்ளத் தயாராக இருந்தாள்.

தற்கொலை செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம், அவள் உள்ளத்தில் ஊசலாடிக் கொண்டே இருந்தது. கோழைகள்தான் தற்கொலை செய்து கொள்ளுவார்கள் என்று எண்ணியிருந்த அவள், தைரியசாலிகளால்தான் தற்கொலை செய்து கொள்ள முடியும் என்ற உண்மையை அனுபவத்தால் அறியலானாள். இப்படியாகப் பற்பல விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டே இரண்டுமணி நேரத்

திற்குள் ரயில்வே நிலையத்திற்கு வந்து சேர்ந்து விட்டாள். ரயிலும் சொல்லி வைத்தாற் போல வந்து நின்றது. ரயிலில் ஏறிக் கொண்டாள். வெற்றியூர் நகரத்தையும் வந்தடைந்து விட்டாள். வீட்டை நோக்கி விரைந்து நடக்கலானாள். வழி நெடுகிலும் 'நான் இறந்தே ஆக வேண்டும். அப்போதுதான் எனக்கு நிம்மதி,' என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டே இருந்தாள்!

## 13

'அறிவகம்' துன்பத்தின் கருவூலமாகவே விளங்க லாயிற்று. மாங்குயில் வீடு வந்து சேருவதற்குள்ளாகத் தேன்மொழி மாண்டு விட்டாள். மாணிக்கம் வீட்டிற்குள் காலடி வைக்கும்போது தேன்மொழி "அப்பா......அப்பா" என்று அலறிக் கொண்டே இருந்தாள். மகள் படும் கஷ் டத்தைக் கண்ணாரக் கண்ட மாணிக்கம் கருத்தில் சிறிது மாற்றம் கொண்டான். அப் பசுங்குழந்தை பெற்றவனைப் பார்த்து தழுதழுத்த குரலில், "என்னைத் தூக்கிக் கொள் அப்பா. நான் ஏதேனும் குற்றஞ் செய்திருந்தால் என்னை மன்னித்துவிடு. என்னைத் தூக்கிக் கொள்ளப்பா," என்று கூறிக் கொண்டே இருந்தது!

பழைய விரோத மனப்பான்மையை மறந்துவிட்டு, அவன் குழந்தையை வாரி அணைத்துக் கொள்ள விரும்பி ஞன். அவன் விருப்பம் பூர்த்தி ஆவதற்குள்ளாக அவனை விட்டு விட்டு அக் குழந்தை வெகுதூரம் சென்று விட்டது! ஆம்; தேன்மொழி இறந்து விட்டாள்! அக் குழந்தையின் அருகே உட்கார்ந்தபடியே ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள் ஜெனி வீ வீ.

மாங்குயில் வீடு வந்ததும் தேன்மொழி இறந்து விட் டாள் என்ற செய்தியை அறிந்து கொஞ்சம் வருந்திஞள் என்ருலுங்கூடச், சிறிது நேரம் செல்லச் செல்ல மகள் இறந்ததைக் குறித்து மனதார மகிழ்ச்சி கொள்ளவே செய்தாள். காரணம்: குழந்தை உயிரோடு இருந்திருக்கும் பட்சத்தில் அவளால் தற்கொலை செய்து கொள்ள முடியாதல்லவா?

குழந்தைக்காகவே அவள் உயிர் வாழ விரும்பிஞள். இப்போது அக்குழந்தையே உயிரோடு இல்லாததால் அவள் சாவைச் சந்தோஷத்தோடு ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தாள்.

அவளின் உள்ள நிலையைச் சரியாக உணர்ந்து கொள்ளாமல் மாணிக்கம், அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு சோகத்தை மறக்க வேண்டுமென்ற ஒரே எண்ணத்தோடு முத்தமிட விரும்பினன். கணவன் என்ற முறையில் தன்னை அவன் நெருங்கி வருவதை அவள் சிறிதுகூட விரும்பவில்லை. "தொடாதீர்கள், என் உடலைத் தொட்டால் உங்களையும் பாவம் பற்றிக் கொள்ளும்," என்று முத்தமிட வந்தவனைப் பார்த்து முகங் கடிந்து கொண்டாள். மேலும், "நீங்கள் ஒரு கொலைகாரர். பெற்றெடுத்த பிள்ளையைப் பிணக்குழிக்கு அனுப்பிய பெருமையையுடையவர். ஆகவே உங்களைப் பார்ப்பதுகூடப் பாவம்," என்று ஆத்திரத்தோடு பேசினுள். அருகில் நின்று கொண்டிருந்த ஜெனி வீ வீயைப் பார்த்ததும் அவள் ஆத்திரம் அதிகப்பட்டு விட்டது. "அடி கிழட்டு முண்டமே, உன் எண்ணப்படியே ஆண்டவன் எங்களைத் தண்டித்து விட்டான். இனி உனக்கென்ன கேடு? இங்கிருந்து போய்த் தொலைந்தால் என்ன?" என்று கேட்டாள்.

மாங்குயிலின் வசவுகளைக் கேட்டுப் பொறுத்துக் கொள்ளும் தகுதியற்ற ஜெனி வீ வீ, "உனக்குக் கேடு காலம் வந்து விட்டது. உன்னுடைய கடைசி காலமும் நெருங்கி விட்டது," என்றெல்லாம் கூப்பாடு போட்டாள்.

"அதை நான் நன்கு அறிவேன். நீ பெண்ணுக இருந்தால் அல்லவோ ஒரு பெண்ணுக்குரிய பாசம், பண்பு என்ன என்பதை உன்னுல் அறிந்து கொள்ள முடியும்? நீ ஒரு பேய்!" என்ருள் மாங்குயில்.

"உனக்கு அழிவு காலம் நெருங்கி விட்டது. அதனுல் தான் அக்கிரமமாகப் பேசுகிருய். இதோ இன்னும் சிறிது நேரத்தில் உன்னை ஆண்டவன் அழுது புலம்பும்படி செய்யப் போகிருன்," என்ருள் ஜெனி வீ வீ.

"நான் மட்டும்தான் குற்றவாளி என்பது உன் எண்ணமா? நான் அழப்போகிறேன் என்று சொன்னுல், என்னேடு சேர்ந்து மாணிக்கமுந்தான் அழப் போகிருர் என்பதை நீ மறந்துவிடாதே. நான் எத்தகைய குற்றவாளியோ அதைப் போல இருமடங்கு குற்றவாளியாக்கப்பட வேண்டியவர் உன் எஜமானர். இதை உன் ஆண்டவனுல்கூட

மாற்றி அமைக்க முடியாது,'' என்று கடுமையாகப் பேசினுள் மாங்குயில்.

''தினை விதித்தவன் தினையையறுப்பான். அது போலத் தீவினை செய்தவர்கள் செய்ததை அனுபவித்தே தீருவார்கள்,'' என்ருள் ஜெனி வீ வீ.

''வேலைக்கார நாய்க்கு வேதாந்தம் ஒரு கேடா? வேலைக்கார நாயே, வெளியே போ! சீக்கிரம் போ!'' என்று சொன்னதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருந்த ஜெனி வீ வீயைப் பார்த்துக் கோபித்துக் கொண்டாள், மாங்குயில்.

எவ்வளவு சொல்லியும் அங்கிருந்து அசையாமல் நின்று கொண்டிருந்த வேலைக்காரியைப் பார்த்து, கோபத்தை மறைத்துக் கொண்டு குளுமையான குரலில், ''நான் என் குழந்தையோடு தனிமையில் இருக்க விரும்புகிறேன். தயவு செய்து இங்கிருந்து போய்விடு'' என்று கேட்டுக் கொண்டாள்.

வெளியேறிக் கொண்டிருந்த கிழவியைப் பார்த்து, ''என் மகள் எப்போது செத்தாள்?'' என்று கேட்டாள். ''நண்பகலில்!'' என்று கூறிக் கொண்டே நடந்தாள் வேலைக்காரி.

மகள் மண்ணுலகை விட்டு விண்ணுலகிற்கு ஏகிக் கொண்டிருந்த அதே நேரத்தில், மாங்குயில் சங்கரனின் படுக்கையறையில் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிக் கிடந்தாள். இதை எண்ணியதும், 'மகள் சாகும் போது நான் சல்லாபம் புரிந்தேனே,' என்ற வார்த்தைகள் அவள் வாயினின்றும் வெளிவந்தன.

''மாணிக்கம் எங்கே?'' என்று பெருங் கூச்சலிட்டாள் மாங்குயில். கூச்சலிட்டபடியே இரசாயனச் சாலையை நோக்கி ஓடினுள். அவள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் மாணிக்கமும் அவளைத் தொடர்ந்து சென்ருன். அங்கு 'நச்சுப் பொருள்கள்' என்று எழுதப்பட்டிருந்த கண்ணுடிப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டாள் மாங்குயில். அப்போது அவள் எதிராக வந்து நின்ருன் மாணிக்கம்.

''நான் உங்களோடு சிறிது நேரம் பேச விரும்புகிறேன்,'' என்ருள் மாங்குயில்.

''இவ்விடத்திலா?'' என்று கேட்டான் மாணிக்கம்.

''ஆம் ; இதே இடத்தில்தான். இறுதி நேரத்தில் நாம் இருவரும் சந்தித்துப் பேசுவதற்கு நமக்கு இதைவிட நல்ல இடம் கிடைக்காது. நான் இதனை உங்களுக்கு இறுதி வணக்கம் செலுத்தும் கட்டமாக அமைத்துக் கொள்ளுகிறேன். எனக்கு உயிர் வாழ்வதில் இச்சையில்லை. சாகத் துணிந்துவிட்டேன்,'' என்ருள் மாங்குயில்.

மாணிக்கம் பெருமூச்சு விட்டான், பேசவேயில்லை !

''திருமணம் செய்துகொண்டதிலிருந்து உங்களையே தெய்வமாகக் கருதி வாழ்ந்துவந்தேன். சங்கரன் நம் வாழ்வில் என்று குறுக்கிட்டானே, அதற்கு மறுதினத்திலிருந்து என் எண்ணமெல்லாம் சங்கரனின்மேல் பதிந்துவிட்டது. ஒரு பெண்ணுக்குத் தகுதிவாய்ந்த கணவனுக ஒருவன் வாழ முடியுமானல், அவன் சங்கரனைப் போன்றவனுகவே இருக்கவேண்டும். இவ்வெண்ணம் என் உள்ளத்தில் உதித்துவிட்ட காரணத்தால், நான் உங்களை உள்ளன்போடு நேசிக்க முடியவில்லை,'' என்று உள்ளத்தைத் திறந்து காட்டினுள் மாங்குயில்.

மாணிக்கம் எதுவுமே பேசவில்லை. அவனுல் பேச முடியவில்லை.

மாங்குயில் திரும்பவும் பேசலானுள் :

**''நான் மானங்கெட்ட வாழ்வு வாழ்ந்து விட்டேன். உலகத்திலுள்ள வெட்கத்தை யெல்லாம் ஒன்று சேர்த்து அதற்கு ஒரு மனித உரு கொடுக்கமுடியுமானல் அவ்வுருவம் என்னைப்போலவே அமைந்திருக்கு மென்பது உறுதி. நான்தான் வெட்கம் ! வெட்கம்தான் நான் !''**

என்று தன்னுடைய இழிவுடமையைத் தெளிவு படுத்தினுள் மாங்குயில்.

இதுகாறும் வாளா நின்றுகொண்டிருந்த மாணிக்கம் பேசத் துவங்கினுன்:—

“என் அன்பிற்குரியவளே, நான் வாழ விரும்புகிறேன். அதே சமயத்தில் நான் உன்னை வாழவைக்கவும் விரும்பு கிறேன். ஒரு பெண்ணுக்குத் தகுதியுள்ள கணவன் சங்கர னுகத்தான் இருக்கமுடியும், என்று நீ சொன்னுய். மாணிக் கம்போன்றவர்களாலும் அப்படியிருக்க முடியும், என்பதை நான் உனக்கு ருசுப்பிக்க விரும்புகிறேன். ஆகவே, நீ பழைய நிகழ்ச்சிகளை மறந்துவிட்டு வாழ முற்படு. நான் உனக்கு வாழ்வின் இன்பத்தைப் பரிபூரணமாக எடுத்துக் காட்டுகி றேன்.” என்று தன் உள்ளத்து உணர்ச்சிகளை யெல்லாம் வார்த்தைகளாக்கிக் கொட்டினுன் மாணிக்கம்.

“இனி வாழ்வதென்பது இந்த ஜென்மத்தில் இல்லை. நான் சாகவேண்டியவளே. செத்தால்தான் எனக்கு நிம்மதி,” என்ருள் மாங்குயில்.

“கூடாது; நீ சாகக்கூடாது. எனக்காக உயிர் வாழ்ந்தே ஆகவேண்டும். உன்னைச் சாகவிட மாட்டேன்,” என்ருன் மாணிக்கம்.

“வீண் வார்த்தைகளால் பயனில்லை,” என்று கூறிக் கொண்டே விஷக் கோப்பையை வாயருகில் கொண்டு போனுள் மாங்குயில்.

மாணிக்கம் அவளைத் தடுத்து நிறுத்த முயன்ருன். ஆனுல் அவளோ விஷத்தை மடமடவென்று குடித்துவிட் டாள். “நீ ஒரு உலகம் தெரியாத முட்டாள்,” என்று செத்துக் கொண்டிருக்கும் போதே அவள் வாய் முணு முணுத்தது.

“கடவுள் உங்களைக் காப்பாற்றட்டும். நான் இன்று காலையில் கூட சங்கரனின் வீட்டிற்குத்தான் போய் இருந் தேன். மத்தியானம் முழுதும் அவன் மடியில்தான் படுத் திருந்தேன். நான் உங்களுக்குப் பெரும் பாதகம் செய்து விட்டேன். ஆண்டவன் உங்களைக் காப்பாற்றட்டும். நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள். ஆண்டவன் உங்க ளைக் காப்பாற்றட்டும்!” என்று கூறிக்கொண்டே செத்த பிணமாகிவிட்டாள் மாங்குயில்.

இத்தகைய கோரக் காட்சியைக் கண்ணுரக் கண்ட மாணிக்கத்தின் மூளை, தன்னுலே சுழலத் துவங்கிவிட்டது.

அவன் பைத்தியமென்றால் சாதாரணப் பைத்தியமல்ல; சீர் செய்ய முடியாத பைத்தியம்!

விண் அதிரும்படி வாய்விட்டுச் சிரித்துக்கொண்டே செத்துக்கிடந்த மாங்குயிலின் உடலின்மீது ஆனந்தத் தாண்டவம் ஆடத் துவங்கினான் பைத்தியக்காரன் மாணிக்கம்!

"அநியாயம் செய்கிறவர்களுக்கு ஆண்டவன் தருகிற பரிசு இதுதான்," என்றும், "உங்களை ஆண்டவன் மன்னிக்கவே மாட்டான்," என்றும் சொல்லிவிட்டுப் பைபிளை எடுத்துக் கொண்டு பாடம் படிக்கத் துவங்கினாள் ஜெனி வீ வீ,!

முற்றிற்று

